# சுருக்கம் விழுந்தவற்றையா அணிவீர்கள்?

## அணிந்துகொள்ளுங்கள்

## டெபிலைஸ்டு

டெபிலைஸ்டு துணித் தரத்தை நீங்களும் உபயோகிக்கவேண்டும். டெபிலைஸ்டு அடையாளமிட்ட துணிகள் பல்வேறான வண்ண வகைகளிலும் ரகங்களிலும் வருகின்றன. வாயில், லான், ஷர்ட்டிங்கு, பாப்ளின், சூட்டிங்கு, தட்டுமுட்டு அலங்கரிப்பு, எது வேண்டுமானாலும் சரி, உங்களுக்குக் கவர்ச்சியூட்டுபவை டெபிலைஸ்டு துணிகளே. சலவை செய்வது எளிது, புத்தம்புதுக் கருக்குடன் வைத்துக்கொள்வதும் இலகு! டெபிலைஸ்டு அடையாளமிட்ட துணிகள் *மடிப்புக் கோடு விழவோ, தங்கவோ இடங்கொடுக்காதவை. *அணியப் பாங்கானவை. இணைப்புப் பகுதிகளிலே இழுத்துப் பிடித்துக்கொள்ளவோ, ஓர வரம்புகளில் தொய்வு காணவோ அனுமதிக்காது. *சலவைக்கு எளிது. வடிவப்பாங்கு குன்றாமல் என்றும் நிலைபெறுபவை. *துணிகளின் ஆயுளுள்ளளவும் இப் பண்புகள் நிலைத்திருக்கும்.

## மபத்லால் க்ரூப்

## துணிகள் மீது டெபிலைஸ்டு என்ற வார்த்தை இருக்கிறதா பாருங்கள்



---

நியூ ஷொரக் (ஷொரக்) அஹமதாபாத் . நியூ ஷொரக், நடியாத் . ஸ்டேண்டர்ட், பம்பாய் . ஸ்டேண்டர்ட், (நியூ சைனு) பம்பாய் . ஸ்டேண்டர்ட், தேவாஸ் . ஸாஸூன், பம்பாய் . ஸாஸூன், (நியூ யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் . மபத்லால் பைன், நவஸாரி.

*Aiyars MG. 327 TM*

# கல்கி



## பொருளடக்கம்

குரோதி ஆவணி 8 – ஆகஸ்ட் 23


| | |
|---|---|
| பிரதமர் சிந்திக்கிறார்! | 3 |
| உழைப்புக்கு ஓர் உதாரணம் | 4 |
| என்ன சேதி | 5 |
| வளரும் விஞ்ஞானம் | 9 |
| கயல்விழி | 10 |
| சட்டம், சைவம், சாதுர்யம் | 19 |
| ஆளப்பிறந்தவன் | 22 |
| பாமினிப் பாவை | 26 |
| ஆறு ஆண்டுகள் நடந்த அறிஞன் | 34 |
| நாகக் கற்கள் | 39 |
| சிரிக்கவும் சிந்திக்கவும் | 41 |
| தாத்தாவுக்கு ஒரு கடிதம் | 45 |
| வழிபாடு | 48 |
| குண்டுமல்லிகை | 58 |
| பேரு முனையில் | 67 |
| அருபதில் ஆரம்பம் | 74 |
| நாடகமாடினார் | 80 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

### சிலை

கல் கிடைத்தது – பூம்புகார்
கடல் மணல் மேட்டினிலே
அல்லிடையிலே – வீழ்ந்துள
அழகுருவோ அதுவே
முள்ளிடையிலே – ரோஜாவின்
முகைநகை கொண்டிடும்யான்
சொல் கிடைத்தது – என்றெணி
சுவைச்சிலைப் பாட்டமைத்தேன்
என் துணைவியோ – கற்சிலை
இசைச்செவி கேட்டிடுமோ
நின் நிழலிதே – நின்பசி
நெருப்பினை ஆற்றிடுமோ
இன் தரளமே – ஆழ்கடல்
எடுத்தணி என்றகன்றாள்
அன் பகலுமோ – பொன்னியின்
அகம் நுழை ஆழ்கடலே!

— கம்பதாசன்




குளிர்ச்சியையும்
சுக க்ஷவரத்தின் வழு
வழுப்பையும் அளிப்பது
ஐஸி-கூல்
க்ஷவரத்திற்குப் பின்
உபயோகிக்கும் லோஷன்

PEARLINE-PARIS
P. O. Box 493 Bombay-1

IK.2.T

சோஷலிஸம்

"நம் நட்சத்திரம் இந்தப் படுகுழி வழியைத்தான் காட்டுகிறது"

PK

நிழலைப் பிடித்துக் கட்டுகிறார்

லஞ்ச ஊழல்

பெர்மிட்–லைசென்ஸ் முறை.



மலர் 24

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 4

# பிரதமர் சிந்திக்கிருர்!

ஏட்டு சோஷலிஸத்தையும், மிகையான கண்ட்ரோல் ஆட்சியையும் கண்டித்துப் பேசிய ஸ்ரீ நந்தர் அவர்களைச் சென்ற இதழில் பாராட்டினேம். இதேபோல், ஆளும் கட்சியின் மையக் கொள்கையான பெருந் திட்டங்களைப் பற்றி இவ்வாரம் பிரதம மந்திரி ஸ்ரீ லால்பஹாதூர் அவர்கள் மனமாற்றம் தெரிவித்திருப்பதற்காக மகிழ்ச்சி யடைகிறோம்.

மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு உடனடியாக உதவாமல், இயந்திரத் தொழிலைப் பெருக்க மட்டுமே உதவும் பிரம்மாண்டமான திட்டங்கள்தான் காங்கிரஸின் ஐந்தாண்டுத் திட்டங்களில் முக்கியமான இடம் பெற்றுள்ளன. அன்புக் குகந்த நேரு அவர்களுக்குத் துரதிருஷ்டவசமாக மகத்தான மூலதனம் தேவைப்படும் திட்டங்களில் விசேஷமான ஆர்வம் இருந்தது. இந்தத் திட்டங்களுக்காகவே வரிச்சுமை பெருக்கப்பட்டது. அந்நியக் கடனும் இவற்றுக்காகவே பெரும்பாலும் பயனுயிற்று. கடன் கொடுத்து உதவிய அந்நியநாட்டுப் பிரதிநிதிகள் அவ்வப்போது பாரதத்தில் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது இந்தத் திட்டங்களை வாயாரப் புகழ்வார்கள். பத்திரிகைகளில் அவற்றைப் பற்றிய செய்தியும், படங்களும் பத்தி பத்தியாக வெளியாகும். ஆனல் பொதுமக்களுக்கு இத் திட்டங்களால் என்ன உபயோகம் என்று பார்த்தால் ஏமாற்றமே மிஞ்சும். இது நம்முடைய கண்டனம் மட்டுமல்ல. பிரதமர் லால் பஹாதூர் அவர்கள் என்ன சொல்கிருர் என்பதைப் பாருங்கள்: "பெருத்த தியாகத்தின்மீதும், உயர்ந்துகொண்டே வரும் வரிச்சுமையின் மீதும் முதலீடு செய்த இந்தத் திட்டங்களால் சமூகத்துக்குக் கிடைத்த பிரதிப் பிரயோஜனம் மிக மிகக் குறைவானது. இதுவே என்னைச் சங்கடப்படுத்துகிறது'' என்று தமது மனச்சாட்சியின் குரலைப் பிரதமர் வெளியிட்டிருக்கிருர்.

'பொதுமக்களுக்கு உடனடியாகவும் நேரடியாகவும் பயன் தரும் திட்டங்களுக்கே முக்கியத்துவம் தரவேண்டும். தற்போது வேலை தொடங்கப்பட்டுள்ள பெரும் திட்டங்களை எல்லாம் முடித்துத்தானக வேண்டும். மற்றபடி புதிதாகத் தொடங்கவிருக்கும் கனரகத் திட்டங்களைத் தள்ளிப்போடுவதே நலம்' என்று பிரதமர் யோசனை கூறியிருப்பதை வரவேற்கிறோம். 'எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் இன்று ஏராளமான செலவில் தொடங்கப்பட்டுள்ள திட்டங்களை நிறைவேற்றித்தானக வேண்டும்; இல்லாவிடில் பெரு நஷ்டம் ஏற்படும்; பழைய தவறுகளின் தண்டனையை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்' என்று ராஜாஜி முன்பொரு முறை எழுதியதற்கு இசைவாகவே பிரதமர் பேசி யிருக்கிருர்.

பிரதமரின் கருத்து குறித்து நாம் அடையும் மகிழ்ச்சியைக் குலைக்கும் விதத்தில் அந்தச் செய்திக்குப் பக்கத்திலேயே மற்றொரு செய்தி வெளியாகியுள்ளது. அந்தச் செய்தி திட்டக் கமிஷனின் வீம்புப் பிடிவாதத்தைத் தெளிவாக வெளிக் காட்டுகிறது. நாட்டின் நிதி வசதிகள் சௌகரியமாக இல்லை என்பதற்காகத் திட்டங்களை வெட்டக் கூடாதென்று கமிஷன் கருதுகிறதாக இச்செய்தி கூறுகிறது.

நேரு அவர்களின் ஆட்சியில் நடந்ததுபோலவே இனியும் திட்டக் கமிஷன் மந்திரி சபைக்கு மேம்பட்ட 'மகா சர்க்காரா'க இருக்குமா, அல்லது புதிய மந்திரி சபையானது திட்டக் கமிஷனை அதன் வரம்புக்குள் பணிய வைக்குமா என்பதை நாடு அக்கறையுடன் கவனிக்கிறது.

# ஊழலுக்கு ஓர் உதாரணம்

லஞ்ச ஊழலைச் சிலர் பெரிது படுத்துவதாக ஸ்ரீமதி இந்திரா அம்மைக்குக் கோபம் பொத்துக் கொண்டு வருகிறது. ஆனால், 'பொதுப் பணியில் ஈடுபட்டுள்ளவர்கள் பண விஷயத்தில் சிறு பிழை கூடச் செய்யலாகாது; மற்றவர்கள் எப்படி யிருந்தாலும் ஸீஸரின் மனைவி சந்தேகத்துக்கு இடம் தரலாகாது' என்பதே நீண்ட நாளையக் கொள்கை. எனவே பொய்க் குற்றச் சாட்டுகள் சொல்வது தவிர, ஊழல்களை ஆதாரத்துடன் எடுத்துச் சொல்வதில் தவறேதுமில்லை. நிர்வாகம் பூரணத் தூய்மை பெற அதுவே வழி.

கெய்ரோன் விவகாரம் ஒருவாறு முடிந்து விட்டது எனினும் தொடர்ந்து கேரள முதன் மந்திரி, ராஜஸ்தான் முதன் மந்திரி, பீகார் முதன் மந்திரி, மத்தியப் பிரதேச காங்கிரஸ் தலைவர் என்று தினம் ஒருவர் மீது ஊழல் குற்றச் சாட்டுகள் வெளியாகி வருகின்றன.

ஆந்திர ராஜ்யத்தின் நிதிமந்திரி ஸ்ரீ சென்னா ரெட்டியைக் குறித்து March of the Nation என்ற பத்திரிகையில் வந்துள்ள ஒரு தகவலை இந்த ஊழல்களுக்கு ஓர் உதாரணமாகத் தருகிறோம்:

ஸ்ரீ சென்னா ரெட்டியின் மனைவிக்கும் மகனுக்கும் தொழிற்சாலை அமைப்பதற்காக ஆந்திரப் பிரதேசத் தொழில் கார்ப்பொரேஷன் 1,80,000 ரூபாய் கடன் வழங்கியுள்ளது. சென்னாரெட்டியின் மகனே ஒரு காலத்தில் அவருக்குக் காரியதரிசியாக இருந்து மாதம் மூந்நூறு ரூபாய் சம்பளம் பெற்றாராம். புதிதாகப் பங்களா கட்ட வேண்டாம் என்றும், தமது சொந்தப் பங்களாவிலேயே தாம் வசிப்பதாகவும் கூறிய ரெட்டி அவர்கள் தமது வீட்டைச் சர்க்கார் செலவில்-38,000 ரூபாயில்-புதுப்பித்துக் கொண்டாராம். 1962—ல் சென்னா ரெட்டி சதுர கெஜம் இரண்டு ரூபாய் வீதம் 2400 சதுர கெஜம் மனை வாங்கி இரண்டாண்டுகளுக்குப் பின் அதைச் சதுரகெஜம் எட்டு ரூபாய் வீதம், அதாவது நானூறு சதவிகித லாபத்தில் விற்றிருக்கிறார். அவரது மனைவியும் மகனும் நடத்தும் தொழிற்சாலைக்கும் அவருடைய வீட்டுக்குமிடையே ஒரு காம்பவுண்டுச் சுவர்தான் தடுப்பாக உள்ளது. ஆனால் தொழிற்சாலை அலுவல்கள் மந்திரியின் இல்லத்திலிருந்தே நடத்தப்படுவதும் உண்டாம்.

ஊழல்களை ஸ்ரீ சென்னாரெட்டி ஜூலை 25ந் தேதியன்று ஆந்திர சட்ட சபையில் ஒப்புக் கொண்டிருக்கிறார். சுதந்திரக் கட்சி பணக்காரர் கட்சி என்று பழிக்கும் காங்கிரஸ் கட்சியானது புதுப் பணக்காரர்களைத் தகாத முறையில் உற்பத்தி செய்யும் ஒரு கட்சி என்பதற்கு ஸ்ரீசென்னாரெட்டி ஓர் உதாரணம்.

சென்னா ரெட்டியையும், காதிவாலாவையும், கெய்ரோனையும் மட்டும் குறை கூறிப் பயனில்லை. லஞ்ச உற்பத்திக்கு வசதியான பெர்மிட் — லைசென்ஸ் முறையை நீடிப்பவர்கள்தான் உண்மைக் குற்றவாளிகள்.

# பிடிக்காத கொள்கை எல்லாம் குற்றமா?

தேசத்தின் எல்லைகளை மாற்றுவது—முக்கியமாக, எல்லைகளைக் குறைப்பது—பற்றி எந்தக் கருத்துத் தெரிவித்தாலும் அது தேசத் துரோகமானது என்று காங்கிரஸ் பிடிவாதக்காரர்களால் கருதப்படுகிறது. இது போன்ற கருத்துக்களை யாரும் வெளியிடவே கூடாது என்கிற கொள்கை ஜனநாயக மரபுக்கு விரோதமானது என்பதை ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வுக்கு எழுதியுள்ள கட்டுரை யொன்றில் பின்வருமாறு விளக்கியுள்ளார்:

அரசியல் சாஸனத்தின் பிரிவுகளைத் திருத்துவதற்கும் அந்தச் சாஸனமே இடமளிக்கிறது. இதனைப் பயன்படுத்திக் கொண்டுதான் சாஸனத்தின் உயிர்நாடியான சுதந்திர உரிமைகளைச் சர்க்கார் சிதைத்திருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் ஆட்சி மொழி ஷரத்துபோன்ற ஒரு பிரிவை மாற்ற வேண்டும் என்று நியாயமான கோரிக்கை விடுத்தால் அதை ஆட்சேபிக்கிறார்கள். அரசியல் சாஸனத்தின் ஒரு பிரிவு இந்திய தேசத்தின் எல்லைகளை வரையறுக்கிறது. எனவே தேசத்தின் எல்லையை மாற்ற வேண்டும் என்று யாரேனும் விரும்பினாலும் குறிப்பிட்ட சாஸன ஷரத்தைத் தக்கபடி மாற்றி, அந்தத் திருத்தத்தை பார்லிமெண்டில் பிரேரிக்கச் செய்ய உரிமை இருக்கிறது. அந்தப் பிரேரணை தோற்றுப் போகலாம். அது வேறு விஷயம். ஆனால் தேச எல்லை மாற்றம் குறித்துப் பேசவே கூடாது என்று நினைப்பது தவறு. மற்ற சாஸன

ஷரத்துக்களைப் போலவே, தேச எல்லை ஷரத்தையும் கருதி, அதற்கு மாற்றுப் பிரேரணை கொண்டு வருவதில் சட்ட விரோதமாக எதுவும் இல்லை.

ஒரு கருத்து தீமையாகவோ, முட்டாள்தனமாகவோ தோன்றக் கூடும். எனினும் அந்தக் கருத்தைப் பார்லிமெண்டில் வெளியிடுவதற்குள்ள உரிமையைப் பறிக்கக் கூடாது. தீமையையும் முட்டாள்தனத்தையும் பார்லிமெண்ட் வோட்டெடுப்பில் தடுத்து நிறுத்துவதே விவேகம். அடிப்படையான அபிப்பிராய சுதந்திரத்தையே பறிப்பதும், தங்களுக்குப் பிடிக்காத கொள்கைகளைப் பேசுவதே குற்றம், அது தண்டிக்கப்பட வேண்டும் என்று எண்ணுவதும் ஜனநாயகம் அல்ல. வாதத்தின் மீது நடைபெற வேண்டிய காரியங்களுக்கெல்லாம் ஆளும் கட்சியானது இவ்வாறு வாய்ப்பூட்டுப் போடுவது வழக்கமாகி விட்டது. ஜனநாயக முறைப்படி எந்தப் பிரச்னையையும் விவாதித்து முடிவெடுக்க இடமளித்துள்ள புனிதமான அரசியல் சாஸனத்தின் மீது ஹிட்லர் கொள்கையைத் தார்பூசி வருவது வருந்தத் தக்கது.

சட்டத்தை மீறிக் கிளர்ச்சி செய்வது வேறு; சட்டத்துக்குட்பட்டு சாஸனத் திருத்தம் கொண்டு வருவது வேறு. இரண்டையும் ஒன்றாக்கி, பிடிக்காத கொள்கைகளையெல்லாம் குற்றமாக்கும் மனப்பான்மை வளர்ந்தால் நாட்டில் கருத்துச் சுதந்திரம் அடிநாசமாகி விடும். இன்று காச்மீரத்தின் எல்லைகளைப் பற்றிப் பேசுவது தேசத் துரோகமாயிருக்கிறது எனில், நாளைக்கே திட்டக் கமிஷனை எடுக்க வேண்டும் என்பதோ, பெர்மிட் லைசென்ஸ் போர்டு நிறுவ வேண்டும் என்பதோ கூடக் குற்றமாகி விடலாம். சொத்துச் சுதந்திரத்தைப் பெருமளவுக்குப் பறி கொடுத்து விட்டோம்; கருத்துச் சுதந்திரத்தையேனும் பறிகொடுக்காமல் காத்துக் கொள்வோமாக!

# என்ன சேதி?

### சந்தானத்தின் உபதேசம்

சமீபத்தில் ஸ்ரீ சந்தானம் சர்க்கார் நிர்ணயித்த விலைக்கு மேல், அதிக விலை கொடுத்து அரிசி வாங்காதீர்கள் என்று மக்களுக்கு உபதேசம் செய்திருக்கிறார். அரிசி ஜீவாதாரமான பொருள். ஆடம்பரப் பொருள்அல்ல. ஆடம்பரப் பொருளாக இருந்தால், அதிக விலை கொடுத்து வாங்காமல் இருந்து விடலாம். உயிர் வாழ அத்தியாவசியமான அரிசியை எப்படி வாங்காமலிருப்பது? அவசியம் இல்லாவிடில் யாரேனும் அதிகவிலை கொடுக்கப் பிரியப்படுவார்களா? அரிசி விலை உயர்வுக்குக் காரணம் சர்க்கார் நாட்டில் புழங்கவிட்டிருக்கும் காகிதப் பணத்தினால் விவசாயிகளுக்குத் தேவையான மற்றப் பொருள்கள் எல்லாம் ஏகத்தாறாக விலை ஏறியிருப்பதுதான் என்ற உண்மை ஸ்ரீ சந்தானம் அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். எனவே அதிக விலை கொடுத்து அரிசி வாங்காதீர் என மக்களுக்கு உபதேசிப்பதைவிட, சர்க்காரின் கொள்கையை மாற்றிக் கொள்ளும்படி அவர் நல்லுரை வழங்கினால் நன்றாயிருக்கும்.

### ஆங்கிலத்தை அகற்ற முடியுமா?

நம் நாட்டில் பல்லாண்டுகளாகவே ஆங்கிலச் செய்திப் பத்திரிகைகள்தான் மற்ற எம்மொழிப் பத்திரிகைகளையும் விட அதிகம் செலாவணியாகி வருகின்றன. ஹிந்தித் திணிப்புக்கும், ஆங்கில ஒழிப்புக்கும் ஒருங்கே நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ள தற்போதும் ஆங்கிலப் பத்திரிகைகளே செலாவணியில் முதலிடம் பெற்றுள்ளன. 1962ம் ஆண்டில் எல்லா ஆங்கிலப் பத்திரிகைகளுமாகச் சேர்ந்து நாற்பத்து ஏழரை லட்சம் பிரதிகள் செலாவணியாயின. மறு ஆண்டாகிய 1963ல் இது ஐம்பத்து இரண்டரை லட்சமாக உயர்ந்துள்ளது. நாட்டு நடப்புக்களில் அக்கறையுள்ளவர்கள்தான் செய்திப் பத்திரிகைகளைப் படிக்கிறார்கள் என்பதை நினைத்துப் பார்த்தால் ஆங்கிலத்தை நீக்கி ஹிந்தியை அரசியல் மொழியாக்குவது எத்தகைய மடமை என்பது நன்றாக விளங்கும்.

### பட்டம் செய்த எச்சரிக்கை

"ஹிந்தியைத் திணிக்கப் பரபரப்படையக் கூடாது. ஆங்கிலம் இருந்தே தீர வேண்டும்" என்று ஆந்திரப் பிரதேச கவர்னர் ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை அவர்கள் ஹைதராபாத்தில் கூறியிருக்கிறார். காங்கிரஸ் அளித்த பதவிக்கு மனச்சாட்சியை விற்றுவிட்டு வாழ்பவர்கள் அதிகரித்துவரும் இந் நாளில் ஒருவராகிலும் துணிந்து உண்மையை அடித்துப் பேசியதற்குப் பாராட்ட வேண்டும். பட்டம் தாணுப் பிள்ளையைப் பின்பற்றி இன்னும் பலர்

உண்மையை வற்புறுத்திப் பேசினால் ஹிந்தியருக்குத் தெளிவு ஏற்படும்.

### சேலம் எஃகு

சேலத்தில் ஓர் எஃகுத் தொழிற் கூடம் ஆரம்பிக்க வேண்டும் என்று பத்து ஆண்டுகளுக்கு மேலாகவே கோரப் பட்டு வருகிறது. சேலத்திலுள்ள கஞ்சமலை இரும்புச்சத்துள்ள மலை. ஆதி நாட்களிலேயே அந்த மலைப் பாறை களை உடைத்து இரும்பு செய்வது குடி சைத் தொழிலாக இருந்து வந்திருக் கிறது. அதனால் சேலத்தில் எஃகுத் தொழிற்கூடம் ஏற்படுத்த வாய்ப்பிருக் கிறது என்று மக்கள் சொல்லி வந்தனர். ஆனால் நிலக்கரி வசதி இல்லை என்று அரசாங்கத்தார் காரணம் கூறி வந்த னர். நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி கிடைக்க ஆரம்பித்ததிலிருந்து மக்க ளுக்குப் புது உற்சாகம் ஏற்பட்டது. இந்திய அரசாங்கமும் எஃகுத் தொழிற் கூடம் ஏற்படுத்த திட்டம் வகுத்தது. எஃகுத் தொழிற்சாலை ஏற்படும் என்று மக்கள் நம்பலானார்கள். இந்தச் சந்தர்ப் பத்தில் இத்துறை மந்திரியாக இருந்த ஸ்ரீ சுப்பிரமணியம் மாறி ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி நியமனமானார். வந்த சில நாட் களில் தமிழ்நாட்டில் எஃகுத் தொழிற் கூடம் ஏற்படுவது பற்றிச் சந்தேகம் தெரி வித்தார். பிறகு மைசூர், ஆந்திர ராஜ்யங்களைக் கலந்தாலோசித்த பின் தான் எதுவும் சொல்ல முடியும் என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக் கிறார். மைசூரிலும், ஆந்திர ராஜ்யத் திலும் அந்தந்த ராஜ்யத்தில் எஃகாலை அமைய வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாக உள்ளது. தமிழ் நாட்டில் தொழிற்கூடம் ஏற்படுவதற்கான பூர் வாங்க வேலைகூட முடிந்துவிட்ட நிலையில் திட்டத்தை அடியோடு நிறுத்தும் திசை யில் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி செல்வது வருந்தத்தக்கது.

தமிழக அரசாங்கம் மத்திய சர்க் காரில் எந்த அளவுக்குத் தனது செல் வாக்கை நிலைநாட்டிக் கொள்ளப் போகிறது என்பதைத் தமிழ் மக்கள் ஆவலுடன் பார்த்து வருகிறார்கள்.

### எதிர்க் கட்சிகளுக்கு அரசாங்க மானியம்

'நன்கொடை திரட்டும் மோகனாஸ் திரம் ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் ஒன்றிடமே இருப்பதால் மற்றக் கட்சி களுக்குப் பொருள் வசதி அறவேயில்லை. ஆனபடியால் அவை வளரச் சர்க்கார் மானியம் கொடுத்து உதவி செய்ய வேண்டும்' என்று நாம் கூறினால் 'இது என்ன அர்த்தமற்ற பேச்சு?' என்று வியப்பீர்கள். இதில் அர்த்தமில்லாமல் இல்லை; வியப்பதற்கு எதுவும் இல்லை என்பதை மேற்கு ஜெர்மனி சர்க்கார் நிரூபித்து வருகிறது. ஜனநாயகம் வாழ வேண்டுமானால் எதிர்க்கட்சிகளும் வளர வேண்டும்என்ற உணர்வைப் பெற்றுள்ள மேற்கு ஜெர்மனி அரசாங்கம் எல்லா அரசியல் கட்சிகளுக்கும் நிதி உதவி அளிக்கிறதாம்! வியாபாரிகளிடமும் கம் பெனிகளிடமும் நன்கொடை பெற்றால் அரசியல் கட்சிகள் அவர்களுக்கு அடங் கிப்போகும், அவ்வாறு நிகழக் கூடாது என்று மேற்கு ஜெர்மனி இப்படிச் செய் கிறது. நம் நாட்டு ராஜ நீதிக்கும் இதற்கும் எவ்வளவு தூரம்?

### காய்கறி வியாபாரம்!

அரசாங்கம் பாட புத்தக உற்பத்தி யில் ஈடுபட்டதன் விளைவாகக் கல்வி இலாகா இயக்குனரே 'ஸஸ்பெண்ட்' செய்யப்பட வேண்டிய அவசியத்தை ஏற்படுத்திய மகாராஷ்டிர சர்க்கார் இப் போது பம்பாயில் காய்கறி வியாபாரம் நடத்த யோசிக்கிறதாம்! நிர்வாக ஊழல் காரணமாகச் செல்லுபடி யாகாத காய்கறிகள், பாட புத்தகங் களைப் போல் பிறர் கருத்துத் தெரி விக்கக் காத்திராமல் தாங்களாகவே அழுகிப் போய்ச் சர்க்கார் தொழிலைப் பற்றித் தீர்ப்புக் கூறிவிடும்!

காய்கறியானாலும், வேறெந்த பண்ட மானாலும் அது உற்பத்தியானால்தான் பிற்பாடு அதனை விற்பனை செய்ய முடியும் என்ற சின்னஞ்சிறிய உண்மை யைச் சர்க்கார் நினைவில் கொள்ளவேண் டும். உற்பத்திக்கு இடையூறான காரி யங்களைச் செய்து விட்டு விற்பனையில் மட்டும் சர்க்கார் ஈடுபடுவதால் விலை வாசிப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. தற்போது உற்பத்தியாளர் நேரடியாக மக்களுக்கு விற்பனை செய்யும் போது வைக்கும் லாபத்துக்குப் பதிலாக, உற் பத்தியாளர் தங்களிடம் கொள்முதல் செய்கிற சர்க்காருக்கு வைக்கும் லாபம், அதன்பின் சர்க்கார் தனது மகத் தான 'மானேஜ்மெண்ட்' செலவுக்கா கச் செய்கிற விரயம், மக்களிடம் எதிர் பார்க்கும் லாபம் எல்லாமாகச் சேர்ந்து விலை இப்போதைவிட ஏகத்தாறுக உயரும். சர்க்காரே காய்கறி உற்பத்தி யில் இறங்குமானால் அப்போதும் அதன் 'மானேஜ்மெண்ட்' செலவு காரணமாக விலைவாசி ஏறும். அவசியமான கண் காணிப்புத் தவிர சர்க்காருக்குத் தொழில் துறையில் வேலை கிடையாது.







❁ மதுரை மீனாட்சிசுந்தரர் கோவில் திருப்பணிக் குழுத் தலைவர் தமிழ்வேள் திரு பி.டி. ராஜன் அவர்களைப் பாராட்ட நடந்த விழாவில் தேவகோட்டை ஜமீன்தார் திரு சோமநாதன் செட்டியார் பொன்னாடை போர்த்துகிறார்.

❁ பழனியப்பா பிரதர்ஸ் அழகாகப் படங்களுடன் தயாரித்துள்ள, தி. ஜ. ர. எழுதிய பாப்பாவுக்குக் காந்தி என்ற குழந்தைப் புத்தகத்தைக் காமராஜ் அவர்கள் வெளியிடுகிறார்.

❁ பேலூர் ராமகிருஷ்ண மடம், மிஷன் தலைவரான சுவாமி மாதவானந்தாஜி மகராஜ் தியாகராயநகர் ராமகிருஷ்ண மிஷன் பள்ளிகளுக்கு விஜயம் செய்த போது நடந்த வரவேற்பு வைபவம்.

❁ சென்னை மணவழகர் மன்றம் ஆதரவில் கோகலே மண்டபத்தில் முத்தமிழ் விழா சிறப்பாக நடந்தது. ராஜாஜி, கருணாநிதி, அன்பழகன் அண்ணாதுரை உரையாற்றினர்.

❁ டில்லி சங்கர வித்யா கேந்திரத்தினர் நடத்திய ஸம்ஸ்கிருத பத கலோகப் போட்டிப் பரிசை லோபமு ராஷ்டிரபதியிடமிருந்து பெறுகிறாள்.

❁ தமிழக கவர்னர் ஸ்ரீ ஜெயசாமராஜ உடையாருக்குச் சென்னை நகர சபை ஆகஸ்டு 9ந் தேதி வரவேற்பு உபசாரமளித்தது.





உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும்
உகந்தது



# பனாமா

Panama

20

CIGARETTES

Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.

# பனாமா

இழுக்க
இழுக்க
இன்பம்
இறுதிவரை

பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள் :
'கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய்-56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

# வளரும் விஞ்ஞானம்

காரிலோ மோட்டார் சைக்கிளிலோ சாலையில் போய்க்கொண்டே இருக்கும்போது இடையில் பெட்ரோல் தீர்ந்து விட்டால் என்ன செய்கிறோம்? பக்கத்தில் எங்கே 'பெட்ரோல் பங்க்' இருக்கிறது என்று பார்க்கிறோம். அங்கே சென்று தேவையான பெட்ரோலை டாங்கில் நிரப்பிக் கொண்டு பிரயாணத்தைத் தொடர்கிறோம். சாலைகளில் செல்வோருக்கு இந்தச் சௌகரியம் இருக்கிறது. நடுக் கடலில் செல்லும் மீனவரின் விசைப் படகுகள், கப்பல்கள் ஆகியவை என்ன செய்வது? கிளம்பும் போது பெட்ரோல் அல்லது டீசல் டாங்கை நிரப்பிக் கொண்டு விட்டால் அது தீர்ந்து போகுமுன்னர் கரைக்குத் திரும்பிவிட வேண்டியது தானே? படகில்தான் இருக்கிற சிறிய இடத்தை அடைத்துக் கொண்டு எத்தனை பெட்ரோல் டின்களை எடுத்துப்போக முடியும்? இதை யெல்லாம் யோசித்து நடுக் கடலிலும் பெட்ரோல் பங்க் இயங்க விஞ்ஞானிகள் வழி வகுத்திருக்கிறார்கள்! இந்த மிதக்கும் பெட்ரோல் பங்க் நைலானினால் ஆனது. அதன் உள், வெளித் தோற்றங்களைப் படங்களில் காணலாம். 48 மீட்டர் நீளமும் 3.30 மீட்டர் அகலமும் உள்ள இந்த மிதக்கும் பெட்ரோல் பங்க் 300 டன் டீசல் அல்லது பெட்ரோலைச்சுமந்து மிதக்கும். இனி மீனவர், படகில் பெட்ரோல் இருக்கும் வரைதான் மீன் பிடிக்க வேண்டும் என்பதில்லை. மீன் 'அறுவடை' நன்றாக இருக்கும்போலிருந்தால் இந்த மிதக்கும் பெட்ரோல் பங்குக்கு வந்து பெட்ரோல் நிரப்பிக் கொண்டு மீண்டும் மீன் பிடிப்பைத் தொடர்ந்து நடத்தலாம்.



ஃ ஃ ஃ

சென்னையிலிருந்து பம்பாய் செல்ல வேண்டுமானால் ரயில் பிரயாணத்துக்கு ஒன்றரை நாளாகிறது. ஆனால் விமானத்தில் மூன்று மணி நேரத்தில் சென்று விடலாம். ஏழை நாடான இந்தியாவில் இதனால் ரயிலில் கூட்டம் குறைந்து விடப் போவதில்லை. ஆனால் முன்னேற்றம் அடைந்த மேனாடுகளில் துரிதப் பயணத்தை விரும்பும் மக்களே அதிகரித்து வருகிறார்கள். ரயில்களில் கூட்டம் குறைந்து வருகிறது. விமானங்களே அதிகமாக மக்களால் பயன்படுத்தப்படுகின்றன. ஆகவே ரயில்கள் இனி லாபகரமாக இயங்க வேண்டுமானால் அவை இன்னும் வேகமாகச் சென்றாக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. இத்துறையில் மேற்கு ஜெர்மானிய விஞ்ஞானிகள் நிறைய ஆராய்ச்சிகள் செய்து மணிக்கு 125 மைல் வேகத்தில் ஓடும் ரயில் எஞ்சினைத் தயாரித்துள்ளனர். இதற்கென விசேஷமான ரயில் பாதைகளும் போட்டுள்ளனர். அந்த இஞ்சின் எப்படி இயங்குகிறது என்பதைப் பரம ரகசியமாகவே வைத்திருக்கின்றனர். 1965ம் ஆண்டுக்குள் பல ஊர்களுக்கிடையில் மணிக்கு 125 மைல் வேகத்தில் மின்சார ரயில்கள் மேற்கு ஜெர்மனியில் ஓடுமாம்.

ருஷ்யர்கள் மணிக்கு 155 மைல் வேகத்தில் ஓடும் ரயில் இன்ஜினைத் தயாரிப்பதில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். சென்ற ஐந்தாண்டுகளில் நீண்ட தூர ரயில்களின் வேகத்தை இருபத்தைந்து சதவிகிதம் அதிகரித்துள்ள ருஷ்யர்கள் சீக்கிரத்திலேயே மணிக்கு 155 மைல் வேகத்தில் ஓடும் ரயில் இன்ஜினைச் செலுத்தி வெற்றி கண்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

ஃ ஃ ஃ

வயிற்றின் அடிவாரத்தில் இருக்கும் சிறு நீரகங்களில் (Kidneys) சில சமயங்களில் சிறிய கல் உருவாவதுண்டு. இதனால் தாங்க முடியாத வேதனை ஏற்படும் நோயாளிக்கு, ஆரம்பகட்டத்தில் இதனை மருந்து கொடுத்துக் கரைக்க முயலலாம். ஆனால் 'எக்ஸ்ரே' எடுத்துப் பார்க்கையில் ஒரு சென்டிமீட்டருக்கு அதிகமாக வளர்ந்திருந்தால் அறுவைச் சிகிச்சையை மேற்கொள்ள வேண்டியதுதான்!

இந்தக் கற்கள் உருவாவதற்குக் காரணம் செல்வச் செழிப்பும் அது காரணமாக அபரிமிதமான சத்து மிகுந்த உணவு உட்கொள்வதும் தான் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். பற்றாக்குறை, பஞ்சம் ஏற்படும் போது இந்த நோய் தலை காட்டுவதில்லையாம்! மருந்துடன் இரண்டு எலுமிச்சம் பழங்களின் சாற்றையும் சேர்த்து அருந்துவது பயனளிக்கிறது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள்.

## இரண்டாம் அத்தியாயம்

## புலவர் படைமுரசு!

கொடுங் குன்றத்துத் திருவிழாவுக்காகக் கூடி யிருந்த மக்கள் அந்தத் திருவிழாவில் நடந்த ஒரு புதுமையை வியப்போடு வேடிக்கை பார்த்தார்கள். நல்லமங்கை பாகரின் ஊர் வலத்துக்கு முன்னால் சென்ற யானையின் மீது பெரியதொரு மட்குடம் வைத்துக் கயிற்றால் கட்டப் பெற்றிருந்தது. அதற்கும் மேல் ஏட்டுச் சுவடி யொன்று எல்லாருக்கும் தெரிவது போல் வைக்கப் பெற்றிருந்தது. குடத்துக்கு முன்னும் பின்னுமாக யானையின் மத்தகத்திலும் புறமுதுகிலும் இருந்தவாறு இருவர் முரசங்களை அதிரச் செய்து கொண்டிருந்தார்கள்.

# கயல்விழி

அந்த மட்குடத்தில் மூன்றே மூன்று சொற்கள் பொன்னிறத்தால் கண்ணையும் கருத்தையும் கவரும் படி பொறிக்கப்பட்டிருந்தன: 'அறம்! பொருள்! இன்பம்!'

''அரங்கத்தில் வைத்து அழகு செய்து கொண்டிருந்தார்களே, அந்த மட்குடம் இது!'' என்று அருகில் இருந்தோரிடம் கூறினார்கள் சிலர்.

''அதோ, அந்தச் சுவடிக்கு மேல் எழுத்தாணி வைத்திருக்கிறார்களே, — அதை நீ கவனித்தாயா?'' என்று சுட்டிக் காட்டினார் ஒருவர்.

''ஆமாம், அது என்ன சுவடி?'' என்று ஆவலோடு கேட்டார் மற்றொருவர்.

''புதுமையாக இருக்கிறது: எங்கள் காலத்திலெல்லாம் திருவிழாவில் இப்படிச் செய்ய மாட்டார்கள்'' என்றார்கள் சில முதியவர்கள்.

என்ன இது? எதற்கு இது? பானைக்குள் என்ன இருக்கிறது? சுவடிக்குள் என்ன இருக்கிறது? இதையெல்லாம் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறார்கள்? எங்கும் இதே பேச்சாக இருந்தது.

அகிலன்

வேய்ங்குழல் ஊதுவோர், மகரயாழ் மீட்டுவோர், தாளமிசைப்போர், முழவு கொட்டுவோர், கொம்பு ஊதுவோர் இவ்வாறு பல் வகைக் கருவிகளைக் கொண்டு இசை முழக்குவோரும் ஊர்வலத்துக்கு முன்பாகச் சாரி சாரியாகச் சென்றனர். அடுத்தாற்போல் புலவர் கூட்டம், ''அகர முதல எழுத்தெல்லாம்'' என்று தொடங்கி, ''பிறவிப் பெருங்கடல் நீந்துவார்'' வரையிலும் உள்ள பத்துக் குறட்பாக்களையும் திரும்பத் திரும்ப இனிய குரலில் பாடிக்கொண்டே சென்றனர். அவர்களை யடுத்துத் தேவாரத் திருவாசகம் ஓதுவோரும் வேத பாராயணம் செய்வோரும் அணி அணியாக நடந்தனர்.

கட்டிளம் காளையர் கூட்டம் காளை''வாக
னத்தின் மீது அம்மையப்பனின் உற்சவத்
திருவுருவங்களை வைத்து உற்சாகத்துடன்
சுமந்து வந்தது. பைந்தமிழ்க் குமரன்
ஊர்வலத்துக்குள்ளும் மக்கள் கூட்டத்துக்
குள்ளும் புகுந்து சென்று அவர்களுடைய
மன நிலையைக் கண்டறிந்தான். இறைவ
னிடம் நம்பிக்கை, இசைப் பெருக்கால்
களிப்பு, யானை மீது வந்த குடவோலைச்
சின்னத்தால் வியப்பு இவ்வளவும் கொண்
டிருந்தார்கள் மக்கள்.



*போர் என்ற போது, பொங்கி எழுந்து தலைகளைச் சீவும் ஆற்றல் பெற்றிருந்த வீரர்களில் பலரே, இப்போது சிரம் தாழ்த்தித் தோள் கொடுத்துக் காளை மீது அமர்ந்தவனைக் களிப்போடு தாங்கி வந்தார்கள். இது அவர்களுடைய பரம்பரை வழக்கம், உரிமையுங்கூட.

ஆயிற்று; ஊர்வலம் முடிந்தது. நகரமே அரங்கத்தைச் சூழ்ந்து கொண்டு விட்டது. யானை மீதிருந்த பானையை இறக்கி அரங்கத்தின் முன்னே வைக்கச் செய்தான் பைந்தமிழ்க் குமரன். கூட்டம் அமைதியோடும் கட்டுப்பாடோடும் தரையில் அமர்ந்தது. இளைஞன் தன் விழிகளின் அசைவால், விரல்களின் சுட்டுதலால், குழுமியிருந்த அனைவரையும் அமைதியாக இருக்கும்படி செய்தான். அவனிடம் ஏதோ ஒரு தனிச் சக்தி இருப்பதாகத் தோன்றியது கயல்விழிக்கு. அவள் பெண்கள் அமர்ந்திருந்த பகுதியில் முன் வரிசையில் உட்கார்ந்திருந்தாள்.

''பெருமக்களே! நம்முடைய வீடு வாசல், உற்றார் உறவினர், கன்று காலிகள், விளைபொருள் இவ்வளவையும் இழந்த நிலையில் நாம் இங்கு கூடியிருக்கிறோம். ஆனால் நம்முடைய துன்பங்களை ஒரு சில நாட்களுக்கு மறந்திருப்பதற்காக மட்டும் நாம் கூடவில்லை. அந்தத் துன்பங்களை அடியோடு வேரறுப்பதற்காகவே நாம் இங்கு திரண்டிருக்கிறோம்!''

தலைநிமிர்ந்து உட்கார்ந்து அவனுடைய சொற்களைப் பருகத் தொடங்கினார்கள் மக்கள். அவர்களுடைய உள்ளத்தில் ஊக்கமும் வலிமையும் ஊற்றெடுத்துச் சுரந்தன.

''நம்முடைய வாழ்வை இழந்து விட்டோமே என்ற கவலை இனிச் சிறிது கூட நமக்கு இருக்கக் கூடாது. உள்ளத்தின் உறுதியையும் ஊக்கத்தையும் ஒரு போதும் கைவிட்டு விடாதீர்கள். நம்முடைய நாட்டின் பகையை நாம் திண்ணமாக முறியடிப்போம். இந்த நாட்டில் இனி என்றுமே பசியும் பிணியும் பகையும் சேராதவாறு இதை வலிமையுள்ளதாக அமைத்து விடுவோம்....!''

'எவ்வளவு தன்னம்பிக்கை இவருக்கு!' என்று வியப்படைந்த கயல்விழி, 'எவ்வாறு இவர் வெல்லப் போகிறாராம்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

''இதோ நம்முடைய வழிகாட்டி!'' என்று, மட்குடத்தின் மேலிருந்த ஓலைச் சுவடியைச் சுட்டிக் காட்டினான் பைந்தமிழ்க் குமரன். ''இவர் காட்டும் வழியை மக்களுக்குச் சுட்டிக்காட்டுவதற்கு இனி நாடு முழுவதும் கற்றவர்கள் சுற்றி வருவார்கள். அவர்களை ஆதரித்து, அவர்கள் குரல் கேட்டு, அதன்படி நடப்பதென்று நாம் உறுதி கொள்ள வேண்டும். இப்போதைக்கு உங்களுக்கு மூன்றே மூன்று குறள் மட்டும் கூறப் போகிறேன்.''

மக்களில் கற்றவர்கள் பலர் இருந்தார்கள்; கற்றவர்கள் சொல்லக் கேட்டுச் செவி வழியே கல்வி அறிவு பெற்றவர்கள் பலர் இருந்தார்கள். கல்லாதவர்களும் இருந்தனர். எல்லாருடைய கண்ணும் கருத்தும் பைந்தமிழ்க்குமரன் மீதிருந்தன.

''வள்ளுவர் ஒரு குறளில் கூறுகிறார்: தக்க மனிதர்களும் நிறைந்த விளைபொருளும், அதைப் பகிர்ந்தளிக்கும் தாழ்வில்லாச் செல்வர்களும் சேர்ந்திருக்கும் நாடே நாடென்கிறார். அதே போல் மற்றொரு குறளில் பசி, பிணி, பகை இம்மூன்றும் சேராத நாடே நாடு என்கிறார். இந்த இரண்டு குறட்பாக்களை மட்டும் நாம் மனத்தில் வைத்துக் கொண்டு, இந்தப் பாண்டிய நாட்டை அப்படிச் செய்து விடுவோம் என்று நம்பினால் போதும்.''

கூட்டத்திலிருந்து ஒரு முதியவர் எழுந்து, ''அரசர் அல்லவோ அதைச் செய்ய வேண்டும்? நம்மால் முடியக் கூடியதா அது?'' என்று கேட்டார்.

''பாண்டியருடைய குடிமக்களாகிய நாமும் அரசர்கள்தாம்!'' என்று கூறிக் கூட்டத்தினர் முகங்களைக் கூர்ந்து நோக்கினான் இளைஞன். சிலருடைய விழிகளில் புத்தொளி மின்னியது; சிலர் அஞ்சி விழித்தார்கள்.

''இதோ, இந்த மட்குடம் இருக்கிறதே, இது என்ன தெரியுமா? 'குடவோலை' என்று, ஆண்டுதோறும் குடத்துக்குள்ளே ஓலை போட்டு, உங்களுடைய ஊர்ச் சபைக்காக நீங்கள்தாமே ஆளுங்கணத்தாரைத் தெரிந்தெடுக்கிறீர்கள்? அரசர் பணியை உங்கள் ஊருக்குச் செய்ய நீங்கள்தாமே உங்களுக்கு வேண்டிய பெருமக்களைப் பொறுக்கி எடுக்கிறீர்கள்? ஆகவே, ஆளுங்கணத்தாரும் ஒரு வகையில் அரசர்கள்தாம். அவர்களையெல்லாம் தெரிந்தெடுக்கும் அதிகாரம் நமக்கு இருப்பதால், நாமும் அரசர்களே!''

* போர்க் காலம் தவிர அமைதி நிறைந்த நாட்களில் போர்ப் படையினரே தமிழகத்தில திருவிழாக் காலங்களில் தேர் இழுப்பது. இறைவனைச் சுமந்து ஊர்வலம் வருவது போன்ற பணிகளைக் கடமையாய்க் கொண்டிருந்தனர்.

# பின்டெக்ஸ்

கைநெசவுப் புடவைகளில் எத்தனை ரகம்!
எத்தனை வண்ணம்! எத்தனை அமைப்புகள்!

பின்டெக்ஸ் கைநெசவுத் துணிகள் நம்பிக்கைக்குகந்தவை. ஏனெனில் பின்னி வகுக்கும் தர நிர்ணயத்திற்கு ஏற்பவே இத் துணிகள், கெட்டிச் சாயமுள்ள உயர்ரக நூலைக்கொண்டு தயாராகின்றன.




உங்களுக்குத் தேவையான பின்டெக்ஸ் கைநெசவுத் துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற பின்னி விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்.

**பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ்**





மதுரமான, வண்ண மிக்க மதுரை சேலைகள்



எழில்மிக்க கோயமுத்தூர் சேலைகள்

JWT-BY-BK-2722A

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ ஃபாஸ்ஃபோமின்

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் வலிவும் ஆரோக்கியமும் பெற்றுத் தெம்புடன் திகழ வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்கள் கலந்துள்ளது.

ஃபாஸ்ஃபோமின் அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. களைப்பை நீக்கும். பசியைத் தூண்டும். வலிவை பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியமயமாய் வாழ உதவுவது பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக் ஃபாஸ்ஃபோமின்.

SQUIBB
A Century of Experience
Builds Faith

Sarabhai Chemicals

Shilpi SC 49A Tam

''ஓ! குடவோலைப் பாண்டமா இது?'' என்று அதிசயத்தோடு அதைப் பார்த்தார்கள் அவர்கள். குலசேகர பாண்டியர் ஒருவர் மட்டிலும் கன்னியாகுமரியிலிருந்து வெள்ளாற்றங்கரை வரையிலும் உள்ள எல்லா நாடுகளையும் நகரங்கள் கிராமங்களையும் நேரடியாகப் பார்க்க முடியாது என்பதை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஆகவே ஊர் தோறுமுள்ள அதிகாரிகளும், மக்களால் தெரிந்தெடுக்கப்படும் ஆளுங்கணத்தாரும் ஒரு வகையில் அரசருக்குரிய தகுதி பெற்றவர்களாக இருக்க வேண்டுமென்பதை அவர்களால் உணர முடிந்தது.

''ஒவ்வோர் ஊரிலும் தக்கவர்கள் பத்துப் பேர்களாவது இருப்பார்களானால், இங்கே விளைபொருள் செழித்துக் கொழிக்கும்; பசியும் பிணியும் பதுங்கி ஒடுங்கும்; பகைவர்கள் நம்மைக் கண்டு அஞ்சி நடுங்குவார்கள். ஆகவே, முதன் முதலாகத் தக்க மனிதர்களைத் திரட்டுவதற்காகவே இங்கு புலவர் படை இன்று கூடியிருக்கிறது !

''தகுதி உள்ள மனிதர்கள் யார் என்று கேட்கிறீர்களா? நீங்கள் ஆளுங்கணத்தாராகத் தேர்ந்தெடுக்க வேண்டிய மனிதர்களுடைய தகுதி என்னவென்று கேட்கிறீர்களா? ஐந்தே ஐந்து முக்கியமான பண்புகள் அவர்களுக்கு வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார்.''

குடிமக்களின் நலனைக் கருதி அரசர் தம் கடமைகளைச் செய்யக்கூடிய ஆளுங்கணத்தார் சான்றோராக இருந்தால் தான், நாட்டு மக்கள் நலமுற்று வாழ முடியும் என்பதை வள்ளுவரைக் கொண்டு மக்கள் மனத்தில் பதியும்படி விளக்கிக் கூறினான் இளம் புலவன்.

''பெருமக்கள் யார், அவர்களுடைய ஐந்து குணங்கள் எவை? அன்பு, நாணம் ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து பண்புகளைப் பெற்றவர்களுக்குத்தான் நீங்கள் இந்தக் குடவோலைக்குள் இடமளிக்க வேண்டும். அன்பு உள்ளவர்களையும் இல்லாதவர்களையும் கண்டுபிடிப்பது மிக மிக எளிது. எல்லாம் தமக்கே வேண்டும் என்று தன்னலம் பேணுபவர்கள் அன்பில்லாதவர்கள். பிறருக்காகத் தம்முடைய உழைப்பையும் பொருளையும் உயிரையும் கொடுக்கக் கூடியவர்கள் அன்புள்ளவர்கள். அன்பில்லாதவர்களை வெறும் எலும்பும் தோலும் போர்த்த பிணங்கள் என்று வள்ளுவர் கூறுவதால், ஒரு போதும் பிணங்களுக்கு ஒப்பான தன்னலக்காரர்களை நீங்கள் குடத்தில் ஓலையிட்டுத் தெரிந்தெடுத்து விடக் கூடாது.''

மக்கள் கூட்டம் தங்கள் தங்கள் பகுதியிலுள்ள ஆளுங்கணத்தாரைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. இவர்களில் மனிதர்கள் யார்? பிணங்கள் யார்? புதிய உண்மை ஒன்றைக் கண்டு விட்டவர்கள் போல் அவர்கள் தங்களுக்குள் பரபரப்புடன் பேசத் தொடங்கினார்கள்.

அவர்களைக் கையமர்த்தி விட்டு, மற்ற நான்கு தகுதிகளைப் பற்றியும் கூறினான் பைந்தமிழ்க் குமரன்: ''ஊர்ப் பழிக்கு அஞ்சி இழிசெயலைச் செய்யாதவர்களே நாணமுள்ளவர்கள். காலத்துக்கேற்ற கடமைகளை மக்களுக்குச் செய்யும் குணம்தான் ஒப்புரவு என்பது. மக்கள் துயரங்களைக் கண்ணால் கண்டவுடன் அவற்றைப் போக்கி அவர்களுக்கு இன்ப வாழ்வு தரக்கூடிய பண்புக்குத்தான் கண்ணோட்டம் என்று பெயர். கண்ணோட்டம் இல்லாதவர்கள் கண்களில் இரண்டு புண்ணுடைய குருபிக் குருடர்கள் என்பதால், அவர்களையும் அறவே விலக்க வேண்டும். உள்ளத்தில் கள்ளமில்லாமல் நன்மை பேசும் வாய்மையுடையவர்களாகவும் அவர்கள் இருக்க வேண்டும். இந்த ஐந்து தகுதி உடையவர்களின் ஆட்சியில் தான் நாடு செழித்து விளைபொருள் மிகுதியாகும். வாணிகஞ் செய்யும் செல்வர்களும் அரச நீதிக்கு அஞ்சி, எல்லோருக்கும் பொருள்களைப் பகிர்ந்து கொடுப்பார்கள். செல்வர்கள் என்றால் பொருள் தேடிப் புதைத்து வைக்கும் பூதங்கள் அல்ல. அதைப் பகிர்ந்து கொடுத்துப் புகழுக்குமேல் புகழ் சேர்ப்பவர்களையே 'தாழ்விலாச் செல்வர்கள்' என்கிறார் வள்ளுவர்.''

ஊர்ச் சபையினரைத் தெரிந்தெடுக்கும் வழக்கம் நெடுநாட்களாகவே பாண்டிய நாட்டில் இருந்தது. அவர்களையே மக்கள் தங்களுடைய 'பெருமக்கள்' என்றும், 'ஆளுங்கணத்தார்' என்றும் அழைத்து வந்தார்கள். ஆனால் இன்றுதான் அவர்களுக்கு ஓர் உண்மை பளிச்சென்று புலப்பட்டது. குலசேகர பாண்டியரின் செங்கோலின் ஒரு பகுதியே ஆளுங்கணத்தார் ஆவார்கள். அவர்கள் சான்றோர்களுக்குரிய ஐந்து தகுதிகளும் படைத்தவர்களாக இருக்க வேண்டும்!'

அடுத்தாற் போல் 'வெற்றித் திருமகள்' என்ற கூத்து நடைபெறுவதாக இருந்ததால், அதற்கு வேடம் புனைந்து கொள்வதற்காகக் கயல்விழியும் இளைஞனும் அரங்குக்குப் பின்னே சென்றார்கள். கூடியிருந்த புலவர்களில் ஐந்து பேர்கள் எழுந்து, ஒவ்வொருவரும் சான்றோருக்கு

இருக்க வேண்டிய ஒவ்வொரு பண்பினை யும் விளக்கிக் கூறினார்கள்.

மக்களில் சிலர் தங்களுடைய ஐந்து விரல்களையும் மடக்கி, ''அன்பு, நாணம் ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை'' என்று தங்களுக்குள் நினைவூட்டிக் கொண்டார்கள். இதை மறைவிடத்திலிருந்து கண்ட பைந்தமிழ்க் குமரன் கயல்விழிக் குச் சுட்டிக் காட்டினான்.

''சான்றோர்களை வளர்க்காத நாடு சுடுகாடு! இப்போது இங்கே வள்ளுவர் தமது இலக்கியப் புரட்சிக்கு விதை ஊன்றி விட்டார். புலவர் படை என்றவுடன் எள்ளி நகையாடினாயே,— கூட்டத்தைப் பார்!'' என்றான்.

''வீரத்தைப் பற்றியும் வெற்றி யைப் பற்றியும் நீங்கள் ஏதும் சொல்ல வில்லையே?''

''அதை உன்னுடைய ஆட்டக் கதையே சொல்லி விடும். நீ இத்தனை உள்ளங்களிலும் சத்தியம் என்ற தீயை மூட்டப் போகிறாய்!''

மூன்றாம் அத்தியாயம்

# உள்ளத்தில் மூண்ட தீ!

தீப்பந்தங்களின் ஒளி வெள்ளப் பெருக்கிடையில் அரங்கத்தில் ஆடும் மயிலெனத் தோன்றினாள் அழகு நங்கை. செந்தாழை நிறம், செங்கமல முகம், காதளவோடிய கயல், அன்ன நடை, மின்னலிடை; மென் தளர்க் கொடி யென அவள் குலுங்கி வந்தாள். மக்களின் உள்ளமும் குலுங்கியது.

கண்கள் கூர்மை பெற்று இமைப்பை மறக்க, தங்களது ஐம்புலன்களையும் குவிய விட்டு, மக்கள் அவள் உருவில் ஒன்றி யிருந்தார்கள்.

தலைவனாக வேடம் புனைந்து கொண்டிருந்த பைந்தமிழ்க் குமரன் மாறு வேடம் புனைந்து கொள்ளுவதில் மிகவும் வல்லவன் என்று தோன்றியது. போர் வீரனுக்குரிய தலையலங்காரத்துக்குள், செவிகளை ஒட்டினாற் போல் தன்னுடைய இளம் தாடியைப் பூந்துகிலால் மறைத்துக் கட்டியிருந்தான். முதல் வரிசையில் இருந்தவர்களுக்கே அவன் சற்று முன்பு இலக்கியம் பேசிய புலவன் தானா என்பது புதிராக இருந்தது.

பைந்தமிழ்க் குமரன் நடிப்புத் தலைவனாகத்தான் அரங்கத்தில் தோன்றுவதாக இருந்தான். ஆனால் அந்த இரவில் அவளுடைய நடனத்தை அருகிலிருந்து கண்ணுற்ற போது அவனால் நடிகனாக மட்டும் அங்கு உலவ முடியவில்லை. அவன் புனைந்த கதைப் பாடலை அவளது இதழ்கள் பாடின; கண்கள் பாடின; கரங்கள் பாடின. விரல்கள் பாடின. பாதங்கள் பாடின. அவனுடைய ஆவியிலிருந்து பிறந்த சொற்களை அவள் தன்னுடைய ஆவியில் இரண்டறக் கலக்கச் செய்து, தனது அங்கத்தின் ஒவ்வோர் அணுவின் வாயிலாகவும் இசைத்துக் கொண்டிருந்தாள். நடிப்புத் தலைவனாகத் தோன்ற நினைத்தவனை மெய்த் தலைவனாகவே மாற்றி விட்டாள் அவள்.

தலைவனும் தலைவியும் இன்மொழி பேசிக் களித்தது கண்டு, மது மயக்கம் கொண்டு விட்டது கூட்டம். 'உலகில் உண்மையாகவே இவ்வளவு இன்பங்களா நிறைந்திருக்கின்றன! அல்லது உலகம் தனது இன்பங்களை மட்டும் தனியே திரட்டி வந்து இளம் உள்ளங்களுக்குக் காணிக்கை யாக்குகிறதா?'

ஆயிற்று; காதல் கனிந்தது; தலைவனும் தலைவியும் இல்லற வாழ்வை விழைந்தார்கள். பாண்டித் திருமகள் என்ற தோற்றத்திலிருந்த கயல்விழி தனது எதிர்கால இல்லறம் பற்றி எத்தனை எத்தனை இன்பக் கனவுகள் காணுகிறாள்! அவள் அவனுக்கோர் ஆண் மகனைப் பெற்றுத் தருவாளாம்! அவன் ஐந்து அருங் குணங்களையும் பெற்ற சான்றோனாகத் திகழ்வானாம்! அறிவில் அவனைச் சிறந்தவனாக்குவானாம் தந்தை; ஆற்றலில் சிறந்தவனாக்குவாளாம் தாய்!

போர்முரசு அதிர்ந்தது. இல்லறக் கனவை நனவாக்காமலே போர்க்களம் செல்கிறான் வீர மறவன். ஒருவேளை அவன் திரும்பி வராவிட்டால், காலமெல்லாம் அவனுக்காகக் காத்திருந்து மறு பிறவியில் அவனை அடைவதாகச் சொல்லி அனுப்புகிறாள் கன்னி.

அவன் திரும்புகிறான். ஆனால் அவன் திரும்புவதற்குள்?....

சோழ நாட்டு வெறியர் சிலர் அவள் வீட்டைச் சூழ்ந்து கொள்ள, உள்ளே நுழைகிறான் ஒரு விலங்கு மனத்தினன். பதறித் துடிக்கிறாள் பேதை, தப்பியோடப் பார்க்கிறாள்; தற்கொலை செய்து கொள்ள முயல்கிறாள்; பொங்கிச் சீறுகிறாள்; விம்மிக் கதறுகிறாள்; அவனிடம் கெஞ்சுகிறாள். அவனுக்குத் தாயில்லையா? அவன் பெண்ணோடு பிறக்க வில்லையா? அவனுக்கும் ஒரு தாரமில்லையா?

ஐயோ! அவள் தவித்த தவிப்பு, துடித்த துடிப்பு, நடுங்கிய நடுக்கம்!

''திரௌபதிக்கு ஆடை தந்து மானம் காத்த கண்ணனே, நீ எங்கு சென்ருய்? சீதையை அழிக்கத் துணிந்தவனின் இதயத்தில் ஆயிரம் அம்புகளைப் பாய்ச்சிய இராமனே, நீ எங்கு சென்ருய்? போருக்குச் சென்ற வீர மறவனே, உன் செவிகளுக்கு உன் ஆவியின் குரல் எட்டவில்லையா? கண்ணகித் தெய்வமே, என்னையும் எரித்து விடு! அங்கயற்கண்ணியே, என் ஆவியை அணைத்து விடு!

''பாண்டிய நாடே, நான் உன்னைச் சபிக்கிறேன். வீட்டுக்கொருவன் வீரம் காப்பவனுக இருந்திருந்தால், இப்படி உன்னை அழிக்கத் துணிவானு அன்னியன்? பெண்டு பிள்ளையைக் காப்பாற்றவாவது, வீட்டுக்கொருவன் இருந்திருந்தால் உனக்கு இந்தக் கேடு ஆகுமா? எங்கே உன் வீரம்? எங்கே உன் மானம்? எங்கே உன் வாழ்வு?''

செயலிழந்து, உணர்விழந்து, வீழ்ந்து விட்டாள் அவள். கூண்டுக்குள் பாய்ந்து சிறகொடிந்த கிளியைப் பற்றி உயிர் குடிக்கும் பூனையாளுன் வெறியன். அந்தக் கணத்தில் திரை மட்டிலும் விழுந்திருக்கா விட்டால், அந்த வெறியனுக நடித்தவனையே ஆயிரம் சுக்கலாகக் கிழித்துப் போட்டிருப்பார்கள் மக்கள். தங்களை மறந்து கூட்டத்திலிருந்து குமுறி எழுந்தவர்களை மற்றவர்கள் கையமர்த்தி அது கூத்து என்பதை விளக்கினர்கள்.

போருக்குச் சென்ற தலைவன் உடலெங்கும் விழுப் புண்கள் சுமந்து வந்து சேர்ந்தான். அரங்கத்தின் ஒரு மூலைக்குள்ளிருந்து புகை மண்டி வந்து வெளியில் சுழன்றது. அவன் இறந்து விட்டால் அவனுக்காகக் கன்னியாகக் காத்திருந்து, மறு பிறவியில் அவனை அடைவேன் என்று கூறியவள், தனக்காகத் தீமூட்டிக் கொண்டிருந்தாள்.

''வீர மரணம் அடைய முடியவில்லை என்னுல்; வெட்டுண்டு கிடந்தவனை எப்படியோ எடுத்து வந்து உயிர் பிழைக்க வைத்து விட்டார்கள்'' என்று கூறிக் கொண்டே தன் தலைவியைத் தேடி வந்தான் அவன். ஆவலுடன் அவள் கரத்தைப் பற்றச் சென்றுன்.

படமெடுத்த கருநாகக் கூட்டமென அவளது கருங்கூந்தல் காற்றில் அலைய, அவள் கொற்றவைக் கொடுந்தேவியாகவே மாறி விட்டாள்.

''தீண்டாதீர்கள், என்னை! உடலால் மட்டுமல்ல, உள்ளத்தாலும் தீண்டாதீர்கள்! நான் நிறையழிந்தவள்; பழி சுமந்தவள்; பாவியிலும் பாவி!''

உள்ளங்கால் முதல் உச்சி வரையிலும் நடுங்க அவள் அவனை நோக்கிக் கரம் கூப்பினுள். அவள் விழிகள் இரண்டும் வெளியே சிதறுபவை போல் சுழன்றன. தலைவனின் வேடத்திலிருந்த, பைந்தமிழ்க் குமரன் மெய்யாகவே அவள் தோற்றத்தைக் கண்டு அஞ்சினுன்.

கூத்துடைத் தலைவனுக்கு உண்மை விளங்கி விட்டது. அவன் அடியற்ற மரம் போல் அரங்கத்தில் சாய்ந்தான். அவனது பாத தூளியைத் தனது விழிகளில் ஒற்றிக் கொண்டு, ''நான் தீக்குளித்து விட்டு உங்கள் ஆவியில் வந்து கலந்து கொள்ளுகிறேன்; பிறகு நாம் இருவருமே நமது வெஞ்சினத்தால் வஞ்சம் தீர்ப்போம்! அந்தக் கயவனின் சாம்ராஜ்யத்தையே சரிந்து விழச் செய்வோம்!'' என்று, மின்னலெனப் பாய்ந்து புகை வந்த திசையில் ஓடினுள் தலைவி.

தலைவன் நினைவு பெற்றெழுந்து அவளைத் தடுத்து நிறுத்துவதற்குள் அவள் தாவிவிட்டாள் நெருப்பில். கயல் விழியின் ஆடையில் பெரும் பகுதி தீப் பற்றிக் கொண்டது. (தொடரும்)

## குட்டிக் கதை

திடீரென்று டிக்கட் பரிசோதகர் வண்டிக்குள் நுழைந்து விட்டார். பிரயாணிகள் தங்கள் டிக்கட்டுகளை எடுத்துக் காண்பிக்க ஆரம்பித்தார்கள். ஒரு கிழவனுர் மாத்திரம் மிகவும் அவஸ்தைப்படுபவர் போல் காணப்பட்டார். சட்டைப் பையிலும் கைப் பையிலும் தேடித் தேடி வெறும் கையை வெளிக் கொண்டு வந்தார்.



பக்கத்திலிருந்த ஆசாமி அவரைக் கவனித்து விட்டு மடமடவென்று சிரித்தார். ''நல்ல ஆளையா! டிக்கட்டை எடுத்துப் பல் இடுக்கில் வைத்துக் கொண்டு பையில் தேடினுல் எப்படி அகப்படும்?'' என்ருர்.

கிழவர் சமாளித்துக் கொண்டார். ''அடடா! என்ன ஞாபக மறதி! பதற்றத்தில் பாதி டிக்கட்டைக் கடித்துக் கூடத் தின்று விட்டேனே? நல்ல வேளை! அடையாளத்துக்குக் கொஞ்சம் மீதி இருக்கிறது'' என்று சொல்லி டிக்கட்டைக் காண்பித்துப் பரிசோதகரின் ஒப்புதலைப் பெற்று உட்கார்ந்தார்.

டிக்கட் பரிசோதகர் பக்கத்து வண்டிக்குப் போனதும் கிழவர், ''என்ன செய்வது! பழைய டிக்கட்டிலே, தேதியை மறைக்க அதைத் தின்றுதானே தீர்க்க வேண்டியிருக்கிறது?'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டது பக்கத்திலிருந்த பல பேருக்குத் தெளிவாகவே கேட்டுத் திகைக்க வைத்தது.

## நாள் முழுவதும் நீடித்த பொலிவுடன் திகழ

# ரேணுகா

டால்கம் பவுடர்

நறுமணம் கமழும் ரேணுகா டால்கம் பவுடரில் சேர்க்கப்பட்டுள்ள ஆக்டமர் வியர்வையினுல் உண்டாகும் துர்நாற்றத்தை அறவே போக்குகிறது. ரேணுகா டால்கம் பவுடரில் மட்டுமே ஆக்டமர் சேர்க்கப்பட்டுள்ளது.

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்.
கல்கத்தா - 29 (இந்தியா)



துர்நாற்றத்தை அகற்றி புத்துணர்ச்சி அளிக்கிறது

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1



# tik-20

# டிக்-20

## மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது



கெய்கி



டாடா-பைஸன் தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
ராலிஸ் இந்தியா லிமிடெட்




சிரக்கோ சத்தியமோ கலவாத விஷயம் எடுத்துக்கொண்டு அதைப்பற்றிச் சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தாற்போல இரண்டு மணி நேரம் கேட்பவர்களுக்குக் கொஞ்சம் கூடச் சிந்திக்க அவகாசம் கொடுக்காத அசுர வேகத்தில் பேசி 'அப்ளாஸ்'களை வாங்கிக் கட்டிக் கொண்டு மேடையிலிருந்து இறங்கும் பேச்சாளர்கள் பலர் உண்டு. அந்த 'அப்ளாஸ்' ஒலியின் கடைசி ஒலித் துடிப்பு அடங்கு முன்னரே இதுவரையில் பேசியவர் எது பற்றிப் பேசினார் என்ற சந்தேகம் அந்த ரஸிகர்கள் இதயங்களில் எழுவதும் உண்டு!

கனமான கருத்து நிறைந்த விஷயம் ஒன்றை எடுத்துக்கொண்டு உள்ளத்திலே எத்தனையோ அழகான எண்ணச் சுழல்கள் இருந்தாலும் அவற்றை உருப்படியாகக் கோத்துப் பேச்சாக மாற்ற இயலாமல் திக்கித் திணறிச் சற்று மாற்றுக் குறைந்த அனுதாபக் கைதட்டலுக்குப் பாத்திரமாகிப் பேச்சை முடித்துக்கொள்பவர்களும் பலர் உண்டு.

ஆனால் எத்தகைய கனமான விஷயமாக இருந்தாலும் சரி, அதை எடுத்து அழகுபடக் கையாண்டு, கேட்பவர்களின் நினைவுகளிலே போதைக்குப் பதிலாகப் பொறுப்பான சிந்தனையைக் கிளறிவிட்டு, அநுதாபத்துக்குப் பதிலாக அன்பை அளவில்லாமல் பெற்றுக்கொண்டு, பேசி எத்தனை நாட்களானாலும் சரி, பேசி முடித்து எத்தனை மைல்கள் போனாலும் சரி, தன் நினைவை அந்த ரஸிகர்களின் இதயங்களிலே என்றும் இருக்கச் செய்யக் கூடிய சொற்பொழிவாளர்கள் நம்மிடையே வெகு சிலர்தான் உண்டு.

அந்தச் சிலரில் குறிப்பிடத் தக்கவரான ஒருவரைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பு சமீபத்தில் கிடைத்தது.

தென்னாப்பிரிக்க மக்கள், (இந்தியர்கள், தமிழர்கள் மாத்திரமில்லை; வெள்ளையர்கள் உட்படத்தான்!) என்றும் மறக்க முடியாத சொற்பொழிவுகளை நாற்றுக்கணக்கில் நிகழ்த்திவிட்டு, சத்தியத்திலும் சைவத்திலும் கருப்பு வெள்ளை என்ற பேதமில்லை என்பதை விளக்கிவிட்டு வெற்றிப் பெருமிதத்துடன் திரும்பி வந்திருக்கும் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம்தான் அந்த ஒருவர்!

மாவீரன் ஜூலியஸ் சீசரைப் பற்றிக் குறிப்பிடும்போது 'வந்தான், பார்த்தான், வென்றான்' என்பார்கள். திருவாசகமணி அவர்களையோ, தென்னாப்பிரிக்கத் தமிழர்கள் 'வந்தார், பார்த்தார், பேசி வென்றார்' என்று பாராட்டி விட்டார்கள்! முன்னவர் கத்தியால் வென்றார். பின்னவர் கருத்தினால் வென்றுவிட்டார்!

''தென்னாப்பிரிக்காவில் தமிழர்கள் எவ்வாறு வாழ்கிறார்கள்?'' என்ற கேள்விக்கு அவர் உற்சாகமாகவே பதிலளித்தார்.

''அரசாங்கம்தான் என்னவோ கருப்பர் வெள்ளையர் என்று கதறிக் கொண்டிருக்கிறது. ஆனால் தனிப்பட்ட முறையில் வெள்ளையர்கள் பாரதத்தினருடனும் மற்றவர்களுடனும் நேச உறவே காட்டி நல்ல முறையில் பழகுகிறார்கள். வெள்ளையர்களுக்குத் தனிப் பள்ளிக்கூடம், வெள்ளையர்களல்லாதவர்களுக்குத் தனிப் பள்ளிக்கூடம். ஆனால் சர்க்காரே நடத்தும் இந்தப் பள்ளிகளில் தரத்தில் ஏதும் வித்தியாசம் கிடையாது. தமிழர்கள் தங்கள் சொந்த அலுவல்களிலும் துறைகளிலும் சுபிட்சமான வாழ்க்கையையே நடத்துகிறார்கள். இப்போது தோன்றி வரும் தமிழ் இளைஞர் பரம்பரைக்குத் தமிழ் என்று ஒரு பாஷை இருப்பதாகத் தெரியாது! வீட்டில் இருக்கும் பெரியவர்கள்தான் அவ்வப்பொழுது விடாமல் தமிழ் பேசி வருகிறார்கள். மற்றப்படி 'மம்மி, டாடி, ஆண்டி' என்னும் ஆங்கில மோஸ்தரில்தான் வாழ்க்கை நடைபெறுகிறது'' என்றார்.

''விருந்தினர்களை உபசரிப்பதில் தென்னாப்பிரிக்காவாழ் இந்தியர்களுக்கு இணை யாருமில்லை! பசியால் உபாதைக்கு உள்ளாவது சகஜம். ஆனால் உபசரிப்பினாலும் உபாதைக்கு உள்ளாக முடியும் என்பதை அங்கு தெரிந்துகொண்டேன்! என்ன உபசாரம்!—என்ன விருந்து! நல்ல வேளை! நாவை, சொற்பொழிவுகளின் பிரத்தியேக உடைமையாக்கிவிட்டு, சொட்டும் சூரியகாந்தி எண்ணெய் நிறைந்த விருந்துப் பண்டங்களிலிருந்து விலக்கினேனோ பிழைத்தேனோ! அங்கு இருந்த பத்து மாத காலத்தைக் கூடியவரையில் வற்றல் குழம்புடனும் அப்பளத்துடனும் அதிகம் பகிர்ந்துகொண்டு தப்பித்தேன்'' என்றும் சொன்னார்.

சென்ற ஆண்டு ஆகஸ்ட் மாதம் இருபத்தியோராம் தேதி மாலை, டர்பன் நகர மண்டபம் இதுவரை கண்டிராத ஜனத்திரளால் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. எல்லாச் சமூகத்தினரும் ஆவலுடன் ஒன்றுகூடி சமயத்

தின் தூதுவராக, கலாசாரத்தின் பிரதிநிதியாகத் தங்கள் முன்வந்து நின்று சொற்பொழிவாற்றவிருக்கும் நபரைப் பற்றிக் கற்பனை செய்வதில் காலம் ஓடுவதையும் பொருட்படுத்தாமல் காத்திருந்தார்கள்.

அன்று பார்த்து விமானம் சற்றுத் தாமதமாகவே வந்தது. விமான தளத்திலிருந்து நேராக மேடைக்கு வந்து சேர்ந்த நபரைப் பார்த்த அந்த நகர மக்கள் ஒரு கணம் மனம் தளர்ந்தார்கள். 'இந்தத் தட்டுச்சுற்று வேஷ்டியும் ஜிப்பாவும் அணிந்த ஆசாமிக்காகவா காத்திருந்தோம்' என்ற எண்ணம் தலை தூக்க ஆரம்பித்தது.

ஆனால் சுருக்கமான அறிமுகத்தைத் தொடர்ந்து அந்த ஜிப்பாக்காரர் கடல் மடை திறந்த வெள்ளம் போல் ஆங்கிலத்தில் கணீரென்று பேச ஆரம்பித்து, சற்று முன் அவையில் உள்ளோர்களின் உள்ளங்களிலே எழுந்த எண்ணத்தைக் கணப்பொழுதில் கரைத்து அவர்களைச் சிலையாக அமர்த்தி விட்டார். அவர்களும் காலம் என்று ஒன்று இருக்கிறது, கடிகாரம் என்று ஒன்று இருக்கிறது என்பதை மறந்து உட்கார்ந்திருந்தனர்.

அந்தக் கணத்திலிருந்து அப்புறம் சுமார் பத்து மாத காலம் வரையில் அந்த ஜிப்பாக்காரரின் ஆங்கில, தமிழ்ச் சொற்பொழிவுகளைக் கேட்டு ரசிக்க அந்த நாட்டின் பல பகுதிகளில் வாழ்ந்த பல சமூகத்தினரும் காத்திருந்தார்கள். வெளிநாடாயிற்றே, ஆடைகளுக்கு மதிப்புக் கொடுக்கும் ஆங்கிலேய பாணியில் வாழும் மக்களாயிற்றே என்றெல்லாம் நினைத்துத் தம்மையும் சூழ்நிலைக்கு ஒப்ப மாற்றிக் கொள்ளாமல் தமது சொந்தப் பாணியிலேயே சைவத்தைப் பற்றியும் வைஷ்ணவத்தைப் பற்றியும், திருக்குறள் பற்றியும் திருவாசகம் பற்றியும் கேட்போர் உள்ளங்களைக் கவ்வும் விதத்தில் பேசிப் பிற நாட்டார்கள் முன் தமிழ் நாட்டின் பெருமையை உயர்த்தியவர் திருவாசகமணி.

ஆங்கிலத்தையும் தமிழையும் ஒரே பாணியில் சரளமாக மலை அருவி கொட்டுவது போல் பேசக்கூடிய திறமை திருவாசகமணியிடம் இருக்கிறது. ஒரு மொழி விஷயத்தை வியாக்கியானமாக மற்றொரு மொழியில் தெளிவாகக் கொடுக்க இதனால் ஹேதுவாகிறது. ஆங்கிலத்தில் பேசிக்கொண்டு வரும்போதே தமிழ்க் காப்பியங்களிலிருந்து அவர் மேற்கோள் கொடுப்பதோ, தமிழில் பேசி வரும்போது ஆங்கில விளக்கங்கள் கொடுப்பதோ, திறமை படைத்த சங்கீத வித்வான் ஆலாபனையில்மேல் பஞ்சமத்தைத் தொடுவது போலவும், சுருதி பேதம் செய்து காண்பிப்பது போலவும் உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கிறது. திருக்குறளையும் திருவாசகத்தையும் சுவை குன்றாமல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவராயிற்றே!

தென்னாப்பிரிக்காவில் ஹிந்துக்கள் இருக்கிறார்கள், மகம்மதியர்கள் இருக்கிறார்கள், கிறிஸ்தவர்கள் வாழ்கிறார்கள். அங்கே திருவாசகமணி சைவத்தைப் பற்றியும் மாணிக்கவாசகரைப் பற்றியும் மாத்திரம் பேசவில்லை! அல்லாவையும் குரானையும் பற்றிப் பேசினார். ஏசுவையும் பைபிளையும் பற்றிப் பேசினார். எல்லா மதங்களுக்கும் அடிப்படையான ஒரே பரம்பொருள் கருத்தை அலசினார். ஒவ்வொரு சமூகத்தினரும் வியப்பில் ஆழ்ந்தார்கள். அவர்கள் இதுவரை 'வேற்றுமை'ச் சொற்பொழிவைத்தான் நிறையக் கேட்டிருக்கிறார்களே தவிர, ஒற்றுமைச் சொற்பொழிவை இப்படி விளக்கமாகக் கேட்டதில்லையே!

இதனால்தான் 'பிற சமூகத்தினர் உள்ளங்களிலே தமிழர்களைப் பற்றிய ஓர் உயர்வான எண்ணத்தைத் தோற்றுவித்து விட்டார்' என்று அங்கு வாழும் தமிழர்கள் பெருமிதத்துடன் இப்போது கூறிக் கொள்கிறார்கள். 'விபூதி' என்றால் என்ன என்று கேட்ட தமிழர்கள் இப்போது திருவாசகமணியின் விஜயம் காரணமாக 'விடேன் தொடேன்' என்று விபூதி பூசிக் கொள்கிறார்கள். புலால் ஒதுக்கும் விஷயத்தில் மாத்திரம் அவர்கள் இவருடைய வேண்டுகோளைக் கொஞ்சம் ஒதுக்கி விட்டார்களாம்!

அந்த நாட்டு ஆங்கிலேயர்களோ 'மகாகனம் சீனிவாச சாஸ்திரியின் சரியான வாரிசு' என்று இவருடைய ஆங்கிலப் பிரசங்கங்களைக் கேட்டு மகிழ்ந்தார்களாம்.

தென்னாப்பிரிக்கத் தமிழர்கள் தாங்கள் பேசும் சொற்பத் தமிழிலும் விடாப்பிடியாக உபயோகிக்கும் ஒரு வார்த்தை 'கணக்கு' என்பது. இந்தக் கணக்குக்கும் பள்ளிக்கூடக் கணக்குக்கும் ஸ்நானப் பிராப்திகூட இல்லை. 'ரயில் நேரத்திற்கு வந்தது, இந்தப் பொம்மை அழகாக இருக்கிறது, அவர் அற்புதமாகப் பேசினார்' என்பதற்குப் பதிலாக 'ரயில் கணக்காக வந்தது, இந்தப் பொம்மை கணக்காக இருக்கிறது, அவர் கணக்காகப் பேசினார்' என்றுதான் சொல்லுவார்கள். எந்த ஒரு திருப்திகரமான செயலையோ, விஷயத்தையோ குறிப்பிட அந்தக் 'கணக்கு' என்ற பதத்தைப் பயப்படாமல் தாராளமாகவே உபயோகிக்கிறார்கள். அவர்கள் பாணியிலேயே குறிப்பிட்டால் திருவாசகமணி கணக்காகப் பேசி, கணக்காக அவர்கள் உள்ளங்களைக் கொள்ளைகொண்டு, கணக்காக இந்த ஆண்டு ஜூன் மாத இறுதியில் தாய் நாடு திரும்பியிருக்கிறார்.

சட்டப் படிப்பில் தேறி, அரசியலில் மிதந்து, தினசரிப் பத்திரிகை ஆசிரியத் துறையில் நீந்தி, அரசாங்கப் பிரசாரகராக நடந்து எத்தனையோ அநுபவம் பெற்ற திருவாசகமணி அவர்கள் இன்று சமயத் துறையில் திளைத்து, தமிழர்களின் பண்பாட்டையும், பக்தியையும், விளக்கும் தூதுவராகப் பணியாற்றுகிறார் என்றால் மிகையாகாது. அவருடைய பணி இரட்டை வழிப் பணி. வெளிநாட்டிலிருப்பவர்களுக்குத் தாயகத்தின் பெருமையைத் தாங்கிச் செல்கிறார். வெளிநாட்டார்களின் பாராட்டுதல்களைத் தாயகத்துக்குக் கொண்டு வருகிறார்.

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்று சொல்வார்கள். 'திருவாசகமணியின் பேச்சை ரசிக்காதார் ஒரு பேச்சையும் ரசியார்' என்று நிச்சயமாகவே கூறலாம். — **கோமதிசுவாமிநாதன்**




# 11 ஆளப்பிறந்தவன்

கதை: ராஜி
சித்திரம்: வினு













வேலை அரண்மனையில் இருப்பதால் நானும் அங்குதான் இருப்பேன் என்று மந்திரியும் சேனாபதியும் என்னைக் கொண்டாடு வார்கள்.


சோழா! என்னை விட நீயே கொடுத்து வைத்தவன். எந்த கட்டுக் காவலும் இன்றி உன்னால் எங்கும் சென்று எதிலும் கலந்து கொள்ள முடிகிறது. அது... என்ன...?
கரடி வித்தைக் காரனாக இருக்கும்.


இவ்வளவு பெரிய மிருகம் இவனிடம் எப்படி அடங்கி ஆடுகிறது பார்! சோழா!


ஐயா! இந்தக் கரடி உங்களை மறக்கவே மறக்காது!
இவன்தான் சர்க்கரையோடு கலந்த தேனை வைத்திருக்கிறான்.


இது உன்னை விட்டு ஓடிப் போகவில்லையா?
பழகிட்டா இது நாய் மாதிரி நாலுங்க. எங்கே போனாலும் இப்படி வாயால் ஊதி அழைத்தால் ஓடி வந்து விடும்.
இப்படி யார் அழைத்தாலும் வந்து விடுமோ?
அது எப்படிங்க? அதுக்கு வேண்டப்பட்டவங்க கூப்பிட்டாத்தான் வரும். நீங்க தேன் கொடுத்தீங்க. இனிமே எங்கே இருந்தாலும் உங்க குரல் கேட்டால் ஓடி வந்து விடும்.


கவலைப் படாதே சோழா. என்னை யாரும் அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்கள்.....
நண்பா! இருட்டும் நேரமாகி விட்டதே, தனியாகவா போகிறாய்?

காட்டின் வழியே போகும் போது விக்ரமன் ஆட்கள் வலைவீசிப் பிடித்து விடுகிறார்கள்...












அவர்கள் பேச்சு ஜெயசிம்மனின் செவி யில் ஒரு யுக்தியைப் பளிச்சிட வைக்கிறது. உதட்டைக் குவித்து ஒலி எழுப்புகிறான்.







தொடரும்

"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்-ப்ரின்ஸ்' பிளேடிலும் ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போல் தானாகும்! அவ்வளவு மழமழப்பானது... அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது... உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று, அந்தப் பரவசமான தூய்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது... ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடிலும் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இன்று, மேலும் மேலும் அதிகமான மக்கள் ப்ரின்ஸ் பிளேடை உபயோகிக்கிறார்கள்... நீங்கள் இதுவரை மாற்றிக்கொள்ளவில்லையானால், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




# ப்ரின்ஸ் பிளேடு



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: முல்லர் & பிப்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# பாமினிப் பாவை

## கௌசிகன்

### 4. சதியாலோசனையா?

திருமலையின் உள்ளம் எரிமலையாகக் கனன்று கொண்டிருந்தது. வேங்கட விலாச மண்டபத்திலே மனம் புழுங்கியபடி உறுமும் புலியென உலாவிக் கொண்டிருந்த விஜயநகர சாம்ராஜ்யத்தின் மதியமைச்சனான அவன் சட்டென்று நின்றான். தலையைத் தாழ்த்தியபடி வாலைச் சுழற்றிக் கொண்டு, பாய்ந்து வரும் ஒரு காளையின் வெண்கல உருவம் அந்த மண்டபத்தில் அழகுக்காக வைக்கப்பட்டிருந்தது. அதன் கூரான கொம்புகளுக்கிடையே தனது இடக் கரத்தின் உள்ளங்கையை ஊன்றியபடி வலக் கரத்தின் கட்டை விரலை இடைக் கச்சையில் செருகிக்கொண்டு நின்ற திருமலை அந்த வெறி கொண்ட காளையை எதிர்க்கும் மற்றொரு காளை போலக் காட்சியளித்தான். கடைந்தெடுத்த வெண்கலச் சிலையென உருண்டு திரண்ட கட்டமைந்த உடல். வேலும், வாளும் பாய்ந்ததனால் ஏற்பட்ட விழுப் புண்கள் அந்த மேனிக்கு இன்னும் அழகூட்டிக் கொண்டிருந்தன. முறுக்கிவிட்ட மீசை. அனலைக் கக்கிக் கொண்டிருக்கும் அகன்ற விழிகளைப் போலவே அந்த அகன்ற மார்பில் புரளும் ஒற்றை வடமான ரத்னஹாரம் ரத்த ஒளியைச் சிந்திக்கொண்டிருந்தது. ஆஜானுபாகுவான அவனால் அந்த மண்டபத்துக்கே ஒரு தனிக் கம்பீரம் ஏற்பட்டிருந்தது.

''இப்படியே போய்க் கொண்டிருந்தால் இன்னும் கொஞ்ச நாட்களில் விஜயநகரம் பாமினியின் ஒரு பகுதியாகி விடவேண்டியதுதான்!'' மீசை துடிக்கப் பேசினான் திருமலை.

அமைச்சனான அண்ணாவின் கோபத்தினால் பாதிக்கப்படாத வேங்கடாத்திரி, ஆடும் பாவைச் சிலையொன்றின் அழகிலே ஈடுபட்டவனாக அதைப் பார்த்தபடியே, ''அதுகூடச் சிரமமான காரியம் அண்ணா! கால தாமதத்தோடு கலகங்களுக்கும் ஈடுகொடுத்தாகவேண்டும். அதை விடச் சுலபமாக விஜய நகரத்திலேயே பாமினியை உருவாக்கிக் கொண்டிருக்கிறார் பெத்தண்ணா'' என்றான் வேங்கடாத்திரி. விஜயநகர சாம்ராஜ்யத்தின் பிரதம சேனாபதி, கடலனைய படைகளின் காவலன் அவன். ஒரு கலா ரசிகன்; அழகைக் கண்டால் அவன் பித்தனாகி விடுவான்.

அரவீட்டுச் சோதரர்களில் கடைக் குட்டியான அந்தக் கலாரசிகன் இப்போது அந்த ஆடலழகியைச் சுற்றிச் சுற்றி வந்து, வெறியூட்டும் அழகை அவள் அங்கங்களில் எப்படியெல்லாம் சிற்பி தேக்கி வைத்திருக்கிறான் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தான்.

''வேங்கடா! என்ன சொல்லுகிறாய் நீ?'' என்று இடி முழக்கம் செய்த திருமலை அந்தச் சிலைக்கும் அவனுக்குமிடையே பாய்ந்து வந்து நின்று கொண்டான். அழகை ரசிக்கும் தன் தம்பியின் இந்த அசட்டுத்தனத்தைக் கண்டு ஆத்திரமாக வந்தது அவனுக்கு.

வேங்கடாத்திரி அந்த மூவரிலே நல்ல அழகன்; இளைஞன். உருவத்திலே திருமலையை விடச் சற்றுச் சிறியவனாகக் காணப்பட்டாலும் தளபதிக்கேற்ற மிடுக்கும் கம்பீரமும் அதில் கலந்து நின்றன. கையில் வாளேந்திப் போர்க்களத்திலே புகும்போது ருத்திரமூர்த்தியாகி விடும் வேங்கடாத்திரி மற்றச் சமயங்களில் பழகுபவரின் உள்ளங்களைக் கவருவதில் அந்தக் கார்முகில் வண்ணனான கண்ணனுக்கு நிகரானவன்.

சிங்காரிச் சிலைக்கு முன்னே சிலிர்த்து நிற்கும் சிறுத்தை என வந்து நின்ற தன் அண்ணனை நிமிர்ந்து பார்த்த வேங்கடாத்திரி ''என்ன அண்ணா! உங்களுக்குப் புரியாதபடி நான் எதையும் மூடிமறைத்துப் பேசவில்லையே. இப்போது நம் சாம்ராஜ்யத்துச் சேனையில் எத்தனை முகமதிய வீரர்கள் இருக்கிறார்கள் என்று தெரியுமா உங்களுக்கு?'' என்று கேட்டான்.

''அதைச் சொல்லுகிறாயா?'' என்று எதையோ புதிதாக எதிர்பார்த்த திருமலை ஏமாற்றத்துடன் நகரலானான். ''அதற்கு நம் அண்ணா ராமராயரைக் குறை கூறிப் பயனில்லை. நமது மூதாதையரான இரண்டாம் தேவராயர் காலத்திலேயே இந்தக் கலப்படம் ஆரம்பமாகி விட்டதே. அது இப்போது அதிகமாகி இருக்கலாம், அவ்வளவுதான்.'' தம்பியை ஆழங்காண முற்பட்டான் திருமலை.

அண்ணனின் அந்தரங்கத்தைப் புரிந்து கொண்டவனாகப் பேசினான் வேங்கடாத்திரி. ''ஆசைக்காகவும் அழகுக்காகவும் புலிக் குட்டியை வளர்க்கக் கொண்டு வருகிறான் ஒருவன். ஆனால் அது காலமெல்லாம் குதித்து விளையாடும் குட்டியாகவே இருக்க வேண்டும் என்று கனவு காணுபவனைப் போல் இருக்கிறது உங்கள் பேச்சு. வளர்த்தவனின் உதிரத்தையே ருசி பார்க்கும் பாயும் புலியாக வளர்ந்து விடாதா அந்தக் குட்டி? தேவராயர் விதைத்த விஷ வித்து இன்று விருட்சமாகித் தழைத்து விட்டதண்ணா. தழைத்து விட்டது! ஆலங் கன்றை ஒரு கையால் அசைத்துப் பிடுங்கி விடலாம். ஆனால் விழுது

விட்டு வளர்ந்து விட்ட ஆலமரத்தையோ? அன்று தர்மத்தைக் காப்பதற்காகத் தோன்றிய சாம்ராஜ்யத்தின் நிழலிலே இன்று அதர்மங்கள் செழிக்க ஆரம்பித்து விட்டன.''

அமைதியாக ஓடும் ஆறு, வெள்ளத்தால் வீங்கியதும் எப்படிப் பயங்கரமாகத் தோற்றமளிக்குமோ அப்படி மாறினான் வேங்கடாத்திரி. உணர்ச்சி வசப்படும் போதும், விஷயங்களைக் காரண காரியங்களோடு விளக்கும் போதும் அவனது தோற்றத்தில் உள்ள அந்த ஆழ்ந்த அமைதி மறைந்து போகும்.

''அன்று தேவராயர் இந்தியப் படையில் முகமதியர்களைச் சேர்த்தது எதற்காக? அந்த அந்நியர்கள் இந்திய வீரர்களை ஒவ்வொரு போரிலும் வெற்றி கொண்டார்களே அதன் ரகசியத்தை அறியவும், அந்தப் போர்க் கலையை நம் வீரர்களும் தெரிந்து கொள்ளட்டும் என்றும்தான் அந்த ஏற்பாட்டைச் செய்தார். ஆனால் இன்றைக்கோ..... கோல்கொண்டாவிலே குழப்பமா? பீஜப்பூரிலே பூசலா? அகமது நகரிலே அரசுரிமைப்போரா? இங்கெல்லாம் துரோகிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு நாட்டை விட்டுத் துரத்தப்படும் தளபதிகளுக்கும் அவர்களைச் சார்ந்த முகமதிய வீரர்களுக்கும் அடைக்கலம் கொடுப்பது விஜயநகரம். அந்நாட்டுத் துரோகிகள் இந்நாட்டிலே விசுவாசிகளாக வரவேற்கப்படுகிறார்கள். இங்கு சுகவாசிகளாக வாழும் அவர்களுக்குப் பட்டங்கள், பதவிகள், ஜாகிர்கள், படைத் தலைமை — இப்படிப் பலப் பல......!''

தம்பியைப் பேச விட்டுக் கேட்டுக் கொண்டிருந்த அமைச்சன் திருமலையைச் சிந்திக்க வைத்து விட்டான் வேங்கடாத்திரி.

'''விஜயநகரத்திலேயே பாமினியை உருவாக்கி வருகிறீர் பெத்தண்ணா' என்று கூறியதன் காரணம் இப்போது புரிகிறதா? வேதவிற்பன்னரான வித்யாரண்யர் உருவாக்கிய விஜய நகரத்திலே துருக்கிவாடா என்ற ஒரு பகுதியை முகமதியர்களுக்காகவே ஒதுக்கி விட்டிருக்கும் நம் இனத்தலைவரின் பரந்த மனப்பான்மையைப் பற்றி அந்நிய நாட்டார் பாராட்டிச் செல்லலாம் அண்ணா. ஆனால் விருபாட்சர் கோயிலிலும் விட்டலநாதர் ஆலயத்திலும் சாயங்கால பூஜையின் கண்டாமணி ஒலியை அமுக்கிக் கொண்டு துருக்கிவாடாவில் உள்ள மசூதியின் உப்பரிகையிலிருந்து தொழுகைக்கு அழைக்கும் பக்கிரியின் குரலும் கலந்து வருகிறதே. அதைக் கேட்டு எத்தனை இந்துக்களின் ரத்தம் கொதிக்கிறது, தெரியுமா?''

தம்பியின் ஆவேசமான பேச்சைக் கேட்டு மனத்துக்குள் ஆனந்தப்பட்டுக் கொண்டான் திருமலை. தன் எண்ணம் கைகூடும் என்ற நம்பிக்கை பிறந்தது. ஆனால் அவசரப்படவில்லை. அமைதியாகவே அமர்ந்திருந்தான். தம்பியோ நிறுத்தவில்லை. தொடர்ந்தான்.

''இது மட்டுமா? எந்த நாட்டிலே பசுவைத் தெய்வமாகப் போற்றி வழிபடுகிறோமோ அங்கு அதிகாலை வேளையில் கோயில்களில் கோபூஜை நடந்து கொண்டிருக்கும் போது அதே நாட்டின் மற்றொரு பகுதியில் துருக்கிவாடாவில் — பசு மாட்டைக் கொன்று பங்கு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கொடிய செயலுக்கு நம் அரசாங்கமே அனுமதி அளித்திருக்கிறதே, அண்ணா! அதைச் சொல்லுங்கள்!''

வெள்ளம் வடிந்த நதியைப் போலப் பழைய அமைதியுடன் பேசலானான் வேங்கடாத்திரி: ''இப்படி நாம் வேதனைப்படுவதற்கு ஆயிரம் விஷயங்கள் இருக்க அலி ஆதில்



ஷாவைப் பெத்தண்ணு அன்பு மகளுக அர வணைத்துக் கொண்டு விட்டார் என்பதற்காக ஆத்திரப்பட்டீர்களே. அப்படிப் பார்க்கப் போனுல் நமது மூதாதையர்களில் ஒருவரான முதலாவது தேவராயர் பாமினி சுல்தானுக் குப் பணிந்து போனதோடல்லாமல் தமது அருமை மகளை அவனுக்குப் பரிசம் போட்டுப் பாணிக்கிரகணமும் செய்து கொடுத்ததை மறந்திருக்க மாட்டீர்கள் என்று நினைக்கி றேன். அந்தச் செயலுக்கொன்றும் இது குறைந்து போய் விடவில்லை என்பது என் அபிப்பிராயம்.'' மீசையைச் சுருட்டி விட்ட படியே குறும்பாகச்சிரித்தான்வேங்கடாத்திரி.

அதில் ஷாவிற்கு அண்ணு அளித்த கௌரவத்தினுல் கொந்தளித்த உள்ளத்தவ னுக வந்த திருமலை — ஏதேதோ பேசித் தன் திட்டத்துக்குச் சாதகமாகத் தம்பியைத் திருப்ப வேண்டும் என்ற ஆவலுடன் ஆலோசனை மண்டபத்துக்கு வேங்கடாத் திரியை வரவழைத்த திருமலை — தான் பேசா மல் தம்பியின் பேச்சைக் கேட்டபடி உட் கார்ந்திருந்தான். பனி மலை வெடித்துச் சிதறிய போது எரிமலை அடங்கி விட்டது. அடங்கிய திருமலை அமைதியாகச் சொன்னுன்.

''வேங்கடாத்திரி! நம் அண்ணுவின் மீது நீ இத்தகைய குற்றச்சாட்டுக்களைச் சுமத்து வதை நான் ஏற்க முடியாது.... இன்றைக்கு நீயும் நானும்......''

'' குற்றச் சாட்டுக்களா? கொடுமை ! கொடுமை!'' அண்ணுவைப் பேச விடாமல் குறுக்கிட்டான் வேங்கடாத்திரி. ''நாட்டின் இன்றைய நிலையை விளக்கினேனே தவிர இதற்கெல்லாம் அண்ணுவைக் குற்றவாளி யாக்குவது என் நோக்கமல்ல.'' திருமலையைக் குழப்பவாளுன் தளபதி.

''இன்றைக்கு அரவீட்டாரின் ஆதிக்கத் தில் சாம்ராஜ்யம் இருக்கிறதென்றல் அதற்கு நம் அண்ணுவின் அரசியல் சாகஸங்கள்தான் காரணம் என்பதை நாம் மறந்து....''

''மறக்கவும் இல்லை; மறுக்கவும் இல்லை... ஆனல்.....''

''நமது படைகளிலே ராமராயரிடம் விசு வாசமுள்ள முகமதியர்கள் பெருமளவில் இருப்பதனுல்தான் இன்று விஜயநகரத்துப் பாளையக்காரர்களும் பெருங்குடி மக்களும் அண்ணுவின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டு பேசாமல் இருக்கிறர்கள். நீயும் நானும் இன் றைக்குச் சாம்ராஜ்யத்தில் உன்னத நிலையில் உட்கார்ந்திருக்கிறேம் என்றல்....''

''அண்ணு!'' அமைதியாகக் கூப்பிட்டான் வேங்கடாத்திரி. ''என் பேச்சை நீங்கள் தவருகப் புரிந்து கொண்டு விட்டீர்கள்.... அண்ணுவின் செய்கையால் ஆத்திரமடைந்த வர் நீங்கள். ஆனல் அதற்கு விளக்கம் தந்து பேசியவனே நான். ஒரு பக்கத்தை விளக்கிய எனக்கு அதன் மறுபக்கத்தின் நிலையும் தெரி யும் அண்ணு! அச்சுதராயர் காலத்திலிருந்து சதாசிவ ராயர் காலம் வரை பட்டத்துக் குரியவரைப் பொம்மையாக்கி விட்டுப் பதவி யைக் கைப்பற்றி ஆட்சி செலுத்தும் நம் அண்ணுவின் சாமர்த்தியத்தை அரசியல் அறிவு படைத்த அத்தனை பேரும் பாராட் டத்தான் செய்வார்கள். பாமினி சுல்தான் களில் யாரும் பலம் பெற்று விடக் கூடாது என்பதில் அக்கறை காட்டி அவர்களின் உள் நாட்டுப் பூசல்களில் புகுந்து, அவர்களுக்கு உதவுவது போல உதவி ஆனல் அதே சமயத் தில் தம் பலத்தையும் மதிப்பையும் பெருக் கிக் கொண்டு வருகிறர் நம் அண்ணு. இன் றைக்கு உங்களை ஆத்திரப்படும்படி செய்த ஆதில்ஷாவின் விஷயமும் இப்படிப்பட்ட காரியங்களில் ஒன்ருகத்தான் இருக்கும்.''

அண்ணு ராமராயரின் செய்கையில் அநீத மானது ஏதுமில்லை என்னுமளவுக்கு இப்போது வேங்கடாத்திரியின் விளக்கம் விரிவா யிற்று. என்றைக்குமே அவனைத் திருமலையால் புரிந்து கொள்ள முடிந்ததில்லை. இன்றைக்கும் அதே நிலையில்தான் குழம்பலானுன். அண்ணு ராமராயரின் செய்கைகளை வேங்கடாத்திரி கண்டிக்கிருனு ஆதரிக்கிருனு என்றே புலப்பட வில்லை. 'நம் உணர்ச்சிகளை இவனிடம் ஏன் காட்டிக் கொண்டோம்' என்று நினைக்கு மளவுக்குத் திருமலையைத் திகைக்க வைத்து விட்டான் வேங்கடாத்திரி.

''வேங்கடா! அந்நியர்களின் விஷயத்தில் அண்ணு கையாளும் தந்திரங்களை அரசிய லோடு நிறுத்திக் கொள்ளுவார் என்று நினைத்திருந்தேன். ஆனல் அது இப்படி அந்தப்புரம் வரை வந்து ஆதில்ஷாவைச் சுவீ காரப் பிள்ளையாகக்கொள்ளும் வரை போனது தான்........'' தான் கூறும் காரணம் வேங்கடாத்திரியின் விளக்கத்துக்குப் பிறகு பலவீனப்பட்டுப் போனதை அவன் நெஞ்சம் உணராமல் இல்லை.

வேங்கடாத்திரி பொருள் பொதிந்த புன்முறுவலோடு கூறினுன். ''அரசியலே அந்தப்புரத்திலிருந்துதானே ஆரம்பமாகிறது? அல்லது இப்படியும் கூடக் கூறலாம் — அந்தப் புரத்துக்காகத்தானே அரசியலே உருவாக்கப் பட்டுள்ளது? அப்படி இருக்க நீங்கள் அவ் விரண்டையும் பிரித்துப் பேசுவதுதான் எனக் குப் புரியவில்லை.....''

''நான் சொல்ல வந்த விஷயமே வேறு. ஆதில்ஷாவை அடக்க நிஜாம்ஷாவையும் குதப் ஷாவையும் தூண்டி விடலாம். நிஜாம் ஷாவைப் பயமுறுத்த குதப்ஷாவுடனும் ஆதில்ஷாவுடனும் குலாவட்டும். பரீத்ஷா வையும் இமத்ஷாவையும் பக்கபலமாகக் கொண்டு குதப்ஷாவைக் கோல்கொண் டாவை விட்டே விரட்டத் திட்டம் வகுக்கட் டும். ஆனல் அவர்களையே நம்மில் ஒருவ ராக்கிக் கொள்ளுவதை அரசியல் தந்திரம் என்று கூறி நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ள வேண்டாம் என்றுதான் கூறுகிறேன்.''

''அரசியல் நீதி நீங்கள் கூறும் கட்டுப்பாட் டுக்குள் இயங்குவதில்லை. உங்கள் வாதம் எனக்குப் பழைய சம்பவமொன்றை நினைவு படுத்துகிறது. அண்ணுவுக்கும் அதற்குள் மறந்திருக்காது என்று நினைக்கிறேன். நீங் களும் நானும் புரட்சிக் கொடி உயர்த்தி அதோனிக் கோட்டையைக் கைப்பற்றி ஆர்ப்பாட்டம் செய்தோமே அண்ணுவுக்கு எதிராக; அதன் முடிவு என்னவாயிற்று ? கோல்கொண்டா இப்ராஹிம் குதப்ஷாவின் உதவி கொண்டு அண்ணு நம்மைச் செயலற்ற வர்களாக்கி விடவில்லையா? குனிந்த தலை யோடு குன்றிப் போய்க் கைதிகளாக நின்ற நம்மைப் பெருந்தன்மையோடு அண்ணு மன்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கே
யின் தரம், ஒரு அழகுசாதன டால்க்...
ஒரு குழந்தைக்கான பவுடர்
இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின்
குளுமையான, பூவிதழ்போன்ற
மென்மையான ஸ்பரிசத்தை
நீங்கள் உணரும்பொழுது ஒரு
பூச்செண்டிற்குள் இருப்பது போலவே
தோன்றும். உடல் முழுவதும் தடவிக்
கொண்டு அதன் ஊற்றுப்பெருக்
கென எழும் புதிய நறுமணத்தில்
திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுட
னும் சுகமுடனும் வை
த்திருங்கள். காஷ்மீர்
பொக்கே, எந்த ஒரு
விசேஷ குழந்தைக்
கான பவுடரைப்
போலவே, மிருதுவும்
பட்டுப்போன்றது
மானது. நீங்கள் இரு
வருமே உபயோகிக்
கக்கூடிய அவ்வளவு
சௌகரியமான ஒரே
பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!

CB.G.19 TAM.

அஜீரணத்தால்
அவஸ்தைப்பட
வேண்டாம்!

# ஹயூலெட்ஸ் மிக்சர்

## அருந்தி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

வேலை மும்மரமும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன; பசியை மந்திக்கச்செய்து, தளர்ச்சியூட்டுகின்றன. ஹ்யூலெட்ஸ் மிக்சர் விரைவில் நீடித்த பரிகாரம் அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது. வாயுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட சிறந்தது. வயிற்றுப்போக்குக்கு அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ்மிக்சர் குணமளிக்கும்.

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது.**




C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86 A. நைனியப்ப நாயக் தெரு, மதராஸ் 3

JWT/CJH/1821

வித்தாலும் அவர் உள்ளத்திலும் சரி, நம உள்ளங்களிலும் சரி, அது மறையாத வடுவாகி நின்று விடவில்லையா?''

''தம்பி.....!'' என்று வேங்கட விலாசமே வெல வெலத்துப் போகக் கத்தினான் திருமலை. அவன் கண்களில் ரத்தம் தெறித்தது. மண்டபத்துக்கு வரும் போது எப்படிக் குமுறும் கோலத்தோடு வந்தானோ அதே நிலைக்குத் திரும்பியது அவன் தோற்றம்.

''எதை நான் ஒரு கெட்ட கனவாக எண்ணி மறந்து விட வேண்டும் என்று நினைக்கிறேனோ அதையே என்னைச் செயலற்றவனாகச் செய்ய ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துவது உன் வழக்கமாகி விட்டது. அந்தக் கசப்பான நிகழ்ச்சியின் காரண காரியங்களில் என்னோடு உனக்கும் பங்குண்டு என்பதை மறந்து விடுகிறாய். சாம்ராஜ்யத்தின் தளபதி என்ற முறையில் அண்ணாவின் செயல் பற்றிய உன் அபிப்பிராயத்தை அறிய விரும்பினேனே தவிர தம்பி என்ற உறவு முறையில் உன்னோடு சேர்ந்து சதித்திட்டம் வகுக்க வரவில்லை'' என்று கூறி வெளியேறினான் திருமலை.

ஆடும் பாவைச் சிலையை அணைத்தபடி, திருமலை போவதைப் பார்த்துக் கொண்டிருந்த வேங்கடாத்திரியின் முகத்திலே ஏளனப் புன்னகை இழையோடியது. உள்ளத்திலோ, 'அண்ணா! ஒரு தடவை அவமானப் பட்டது போதாதா? ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஆசை இன்னும் உங்கள் மனத்தை விட்டுப் போக வில்லையே. அலி ஆதில்ஷாவைப் பெத்தண்ணா மகனாக வரித்துக் கொண்டதைச் சாக்காகக் கொண்டு கலகம் விளைத்து மக்களின் ஆதரவைப் பெறமுடியுமா என்று கலந்தாலோசிக்கவே என்னை வரவழைத்தீர்கள் என்பதை நான் அறிவேன். நாட்டின் நிலை எப்படி இருந்தாலும் அண்ணா ராமராயரை அசைக்க முடியாதண்ணா. அசைக்க முடியாது! ஒரு தடவை உங்கள் போதனையிலே புத்தி இழந்து புரட்சி செய்து பட்ட அனுபவம் போதாதா? சாம்ராஜ்யமே எதிர்த்து நின்றாலும் பெத்தண்ணாவுக்குப் பக்கபலமாகவே நிற்பான் இந்த வேங்கடாத்திரி. ஆனால் அண்ணா ராமராயர் என் செயல்களைச் சந்தேகக் கண் கொண்டு பார்க்காதிருக்க வேண்டும்......' என்று பலவாறாகச் சிந்தனை செய்தபடியே தன் அரண்மனையை நோக்கி நடக்கலானான் வேங்கடாத்திரி.

**வி**ஜயநகர சாம்ராஜ்யத்தின் முடிசூடா மன்னராக விளங்குபவர் அரவீட்டு மரபில் உதித்த ஆற்றல் மிகுந்த ஈடு இணையற்ற வீரர் ராமராயர். அரவீட்டு புக்கர் என்பவரின் பேரனும் ரங்கராயரின் மகனுமான இவருடைய தம்பிகள்தான் திறமை மிக்க திருமலையும், வெல்ல முடியாத வேங்கடாத்திரியும். இத்தகைய தம்பிகளைப் படைத்த ராமராயர் எந்தப் படையெடுப்பிலும் தோல்வி கண்டறியாதவர். தம் வாழ்நாளில் மூன்று மன்னர்களின் ஆட்சியைக் கண்டவர். கடைசி இரண்டு பேர் பெயரளவுக்குத்தான் மன்னர்களாக இருந்தார்களே தவிர நாட்டின் அதிகாரம் முழுவதும் மகா மண்டலேசுவரரான ராமராயரிடமே இருந்தன.

இளமையில் ராமராயர் போர்க் கலையில் ஆற்றலும் அரசியலில் அனுபவமும் பெறக் கோல்கொண்டா கல்தான் குலி குதப் உல் முல்க்கின் படையில் பணியாற்றப் புகுந்து தமது வீர வாழ்வைத் தொடங்கினார். ஆனால் அவமானப்படுத்தும் கல்தானிடம் தன் மானத்தை இழக்க விரும்பாமல் கோல் கொண்டாவிலிருந்து வெளியேறி விஜயநகரத்துக்கு வீரத் திருமகனாக அவர் வந்து சேர்ந்த போது இரு கைநீட்டி வரவேற்றுப் படைத் தலைமையும் அளித்தார் மஹாராயரான கிருஷ்ணதேவர். தனது திறமையையும், வீரத்தையும் காட்டப் பல சந்தர்ப்பங்கள் கிடைத்தன ராமராயருக்கு.

கிருஷ்ண தேவராயரின் படைகள் சென்ற பக்கமெல்லாம் வெற்றி வாகை சூடிவந்தன. விஜயநகரத்தின் மகத்தான பொற்காலத்தை உருவாக்கியவர் கிருஷ்ண தேவராயர் என்றால் அவருக்குப் பக்கபலமாகப் பல போர்களில் பங்கு கொண்டவர் ராமராயர். அரவீட்டு ஆண் மகனின் வீரத்தை வியந்து பாராட்டிய கிருஷ்ண தேவராயர் தமது செல்வ மகள் திருமலாம்பாளையே அவருக்குத் திருமணம் செய்து கொடுத்துக் கௌரவித்தார். விஜயநகரத்து அரச குடும்பத்தினருக்கு 'அலியா' (மருகர்) வானார் ராமராயர்.

அரசியல் தீர்க்கதரிசனம் பெற்ற ராமராயர், வருங்காலத்தைப் பற்றி வளமான எண்ணங்களை வளர்த்துக் கொண்டிருந்த அரவீட்டு முதல்வர், தம் உடன் பிறந்தவர்களின் வாழ்வே தம் உயர்வு என்பதை உணர்ந்து தம் தம்பிகளான திருமலை, வேங்கடாத்திரி இருவரையுமே உன்னத நிலைக்குக் கொண்டு வந்தார். ராயரின் படையணியில் பொறுப்புள்ள புள்ளிகளாகத் திகழ்ந்தார்கள் அவ்விருவரும். அண்ணா ராமராயரைப் போலவே தம்பி திருமலையும் கிருஷ்ண தேவராயரின் அன்புக்குப் பாத்திரனாகி அவரது இரண்டாவது மகள் வெங்கலாம்பாளை மணந்து ராயரின் மாப்பிள்ளையானான்.

இப்படி அந்தப்புரத்து ஆதரவும் அனுதாபமும் அரவீட்டுச் சோதரர்களுக்கு இருந்தும்கூட கிருஷ்ண தேவராயர் தமக்குப் பின் தமது தம்பி அச்சுதராயரையே அரியணைக்குச் சிபாரிசு செய்து விட்டுப் போனார். ராமராயரின் வீரத்தை அறியாதவரா மகாராயர்? இல்லை. அப்படியானால்? கிருஷ்ணதேவராயர் தம் சாம்ராஜ்யத்தின் வாழ்வும் பலமும் அரசவைப் பெருங்குடி மக்கள், பாளையக்காரர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பில்தான் இருக்கிறது என்பதை உணர்ந்தவர். அவர்களது விருப்பத்துக்கு மாறாக எதையும் செய்ய விரும்பாதவர். ஆகவே ராமராயர் தமது மருமகராக இருந்தும் அவர் துளுவ மரபைச் சேர்ந்தவரல்ல என்ற ஒரே காரணத்துக்காக அவரைத் தமது அவைப் பெருமக்கள் ஆதரிக்க மாட்டார்கள் என்று அறிந்தே அச்சுதராயருக்கு அரியணையை அளித்தார்.

பின்னால் அச்சுதராயரைச் சிறையிலிட்டு ஆட்சிப் பொறுப்பை ராமராயர் கைப்பற்றினாலும்கூட அரியணையிலே உட்காரமுடியவில்லை. மகாராயர், மாமன்னர் என்ற பட்டங்களையும் அவரால் பெற முடியவில்லை. ராணிகளும் அரச குடும்பத்துப் பெண்களும் தங்கள்

மருமகர் மன்னராவதை விரும்பினாலும்கூடப் பெருங்குடி மக்களின் பலத்த எதிர்ப்பிருந்தது. மகா மண்டலேசுவரராக இருந்தாலும் மகத்தான காரியங்களைச் சாதிக்க முடியும் என்று நிரூபித்து மன்னரை விடச் செல்வாக்கும் பலமும் பொருந்தியவராக வாழ்ந்து வந்தார், அரவீட்டு முதல்வர். எத்தனை பூசல்கள், சதிகள், சண்டைகள், சூழ்ச்சிகள்? எல்லாவற்றுக்கும் ஈடுகொடுத்தார் ராமராயர். அச்சுதராயருக்குப் பிறகு கிருஷ்ணதேவராயரின்மற்றொரு சகோதரரான ரங்கராயரின் மகன் சதாசிவ ராயரைப் பொம்மை அரசனாக்கிவிட்டுப் பொறுப்பை விட்டுக் கொடுக்காமல் புகழுடன் வாழ்ந்து வரலானார் ராமராயர். அந்தப்புரத்திலே ஆடலையும் பாடலையும் ரசித்துக் கொண்டிருந்தான் அரசன். ஆட்சியையும் அரசியல் சூட்சியையும் அதிகார போதையையும் ரசித்துக் கொண்டிருந்தார் அலியா ராமராயர்.

கிருஷ்ண தேவராயர், அச்சுதராயர், இப்போது சதாசிவராயர் ஆகிய மூன்று மன்னர்களின் ஆட்சியைக் கண்ட அரவீட்டு முதல்வர் அறுபது வயதைத் தாண்டி விட்டாலும், இருபது வயது இளைஞரின் மிடுக்கோடு சாம்ராஜ்யத்தை நிர்வகித்து வந்தார்.

கட்டுக் குலையாத உடல், கம்பீரமான தோற்றம், முதுமையின் முத்திரைகள் பதியாத முகம். முறுக்கி விட்ட மீசை. விரோதியும் வியந்து பாராட்டும் வீரம் செறிந்த நடை. பரந்த மனப்பான்மை கொண்ட மகாமண்டலேசுவரரின் விரிந்த மார்பகத்திலேயுள்ள விழுப் புண்களை மறைத்தபடி பொன்னாபரணங்கள் புரண்டு கொண்டிருக்கும். இது தான் ராமராயர்.

பொன்னிழைகளால் ஓரங்களில் பூவேலை செய்யப்பட்ட தூய வெண் பட்டாடையைத் துவளத் துவளக் கச்சமாக அணிந்திருந்த ராமராயர், தோளிலிருந்து துவளும் பட்டுப் பீதாம்பரம் பின்புறம் புரள, முன்புறம் அதை இடக்கரத்தில் ஒயிலாகத் தாங்கியபடி அந்தப்புரத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார். காலில் அணிந்திருந்த பாதரட்சை ராயரின் நடைவேகத்துக்கு ஏற்பப் 'பராக், பராக்' என்று கட்டியம் கூறுவது போல ஒலி எழுப்பிக் கொண்டிருந்தது.

விருபாட்சர் ஆலயத்திலிருந்து திரும்பியவர், அந்தரங்க அறையிலே காத்திருந்த பாளையக்காரர்களைச் சந்தித்து அவர்களுடன் உரையாடியபின் தம் இள மனைவி சத்திய பாமாவின் இருப்பிடத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். ராயரின் வருகையைத் தெரிவிக்கப் பணிப் பெண்கள் விரைந்தார்கள்.

இன்முகத்தோடு எதிர்கொண்டழைத்த இளமனைவியின் இடையைச் சுற்றி அணைத்தபடி இருக்கையில் அமர்ந்தார் ராமராயர். இந்த வேளையில் வந்தால் தன் கணவர் அங்குதான் உணவருந்துவார் என்று தெரியும் தேவிக்கு. ஆகவே விழியால் மொழி பேசி விருந்துக்கு ஏற்பாடு செய்தாள்.

ராமராயர் தம் தோள் மீது துவண்டு சரியும் பட்டுப் பீதாம்பரத்தை அகற்றிய போது அந்த அகன்ற மார்பிலே அப்பிக் கிடந்த விருபாட்சர் ஆலயத்து ஆண்டவனின் சந்தனம் கமகமத்தது. அதன் இனிய மணத்திலே கிறங்கி நிற்கும் தம் இள மனைவியைப் பார்த்து, ''என்ன சத்தியபாமா, நான் இன்றைக்கு இங்கே வருவேன் என்று உனக்குத் தெரியுமா, என்ன? அலங்காரமெல்லாம் பலமாக இருக்கிறதே!'' என்றார் அவளைத் தம் மார்பிலே சாய்த்துக் கொண்டே.

''தினமும்தான் உங்களை எதிர்பார்த்து இம்மாதிரி அலங்காரங்களைச் செய்து கொள்கிறேன். ஆனால் ஏதோ ஒரு நாளைக்குத்தான் உங்கள் கவனம் இந்தப் பக்கம் திரும்புகிறது'' என்று குற்றம் சாட்டினாள் மஞ்சத்தில் சாய்ந்திருந்தவரின் மார்பிலே சாய்ந்தபடி துவளும் கொடியாக விருந்த சத்தியபாமா.

ஆழம் காண முடியாத தம் அகன்ற மார்பிலே நெளியும் மனைவியின் கருங் குழலை ஒரு கரத்தால் நீவியபடியே மறு கரத்தால் பக்கத்தில் உள்ள பழத் தட்டிலிருந்து திராட்சைக் குலையை எடுத்துச் சுவைத்துக் கொண்டே ''உன்னைப் போல் ஒன்பது பேர்கள் என் வரவுக்காக ஏங்கிக் கொண்டிருந்தாலும் ராஜ்ய லட்சுமியின் ஆலிங்கனம்தான் எனக்குச் சுகமாக இருக்கிறது. என்ன செய்யலாம், சொல்....'' என்றார் ராமராயர் குறும்பாக.

நிமிர்ந்து உட்கார்ந்தாள் கோதை.

ராஜ்யலக்ஷ்மி தன் கணவனை எப்படி அலைக்கழிக்கிறாள் என்பதை எண்ணிப் பார்த்தாள். வேறு எவரும் பேசத் துணியாத விஷயத்தை இளைய மனைவி என்ற ஒரே உரிமையில் தைரியத்துடன் பேசலானாள்.

''அது சரி, ஆதில்ஷாவிடம் தாங்கள் காட்டிய அன்பு பற்றியே அரண்மனை யெங்கும் பேச்சாக இருக்கிறதே.....''

''அரண்மனையில் மட்டும்தானா? நாடு நகரம் வீடு வாசல் எங்குமே என்னைப் பற்றி, என் செயலைப் பற்றி விபரீத வியாக்கியானங்கள் நடந்து கொண்டுதான் இருக்கும். என்னைப் புரிந்து கொள்ளாதவர்கள் பொங்கிக் கொண்டிருப்பார்கள். என்னைப் புரிந்து கொண்டிருக்க வேண்டிய என் தம்பிகளை இன்று வேங்கட விலாச மண்டபத்திலே சந்தித்து விவாதித்தார்களாம். கேள்விப்பட்டேன்.....'' என்ற ராயரின் முகத்திலே சிந்தனைக் கீற்றுக்கள் ஓட ஆரம்பித்தன.

இதற்குள் பணிப் பெண்கள் தங்க வட்டிலிலே பொற் கிண்ணங்களைப் பரப்பி, புத்துருக்கு நெய்யிலே தயாரித்த உணவு வகைகளை அதில் கொண்டு வந்து பரிமாறினார்கள். முக்கனியும் சர்க்கரையும் தேனும் கொண்டு வந்தார்கள். கற்கண்டும் மிளகு மிட்டுக் காய்ச்சிய பாலைக் கையில் ஏந்தி நின்றாள் மற்றொருத்தி. ராயர் உணவைச் சுவைக்கலானார். அவர் சிந்தனையோ அரசியலைச் சுவைத்துக் கொண்டிருந்தது.

''இத்தனை பெரிய எதிர்ப்புக்களுக்கு மிடையே இப்படிப்பட்ட காரியங்களை ஏன் செய்கிறீர்கள்?'' ராஜ்ய லக்ஷ்மியிடமிருந்து அவரை எப்படியேனும் விடுவித்துத் தன்னிடம் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் இப்படிக் கேட்டு வைத்தாள் சத்தியபாமா.

கடகட வென்று சிரித்தார் ராயர். ''எதிர்ப்புக்கள் இருக்க வேண்டும் தேவி. அப்போதுதான் அதைச் சமாளித்து ஏற்றம்

பெறும் வாய்ப்பு இருக்கும். பாமினி சுல்தான்கள் ஐவரையும் ஒன்று சேரவிடாமல் ஆனால் அவர்கள் விஜயநகரத்திடம் அச்சங் கொண்டு அதன் நட்பை நாடி வரும்படி செய்ய வேண்டும். அதற்காகத்தான் இப்படி ஏதேதோ செய்து வருகிறேன்.'' ஆகாரத்தை முடித்துக் கொண்டு எழுந்திருந்தார் ராயர்.

தாம்பூலத்தைத் தயார் செய்து கொண்டிருந்த சத்தியபாமா, ''உங்கள் திட்டங்களை மீறி அவர்கள் ஒன்று சேர்ந்து விட்டாலோ?'' என்று கேட்டாள்.

''ஒன்று சேரக் கூடாது. சேரவும் விடமாட்டேன். இதில்தான் ராமராயரின் லட்சியமே இருக்கிறது'' என்றவரிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்செழுந்தது. மனைவி மடித்துக் கொடுத்த மணம் கமழும் தாம்பூலத்தைச் சுவைத்தபடி உட்கார்ந்திருந்த ராயரின் பார்வை தூண்டாவிளக்குகளின் அசையாமல் எரியும் சுடர்களில் பதிந்திருந்தது.

''இந்து முஸ்லீம் என்ற வேறுபாடகற்றி ஒரு புதிய தென்னகத் தேசியத்தை உருவாக்கப் பாடுபடுகிறேன். என் இந்த லட்சியக் கனவு ஈடேறுமானால் இணையற்ற புகழுக்கும் பெருமைக்கும் உரியவனாவேன். இல்லாவிடில்..... அழிவு..... மகத்தான அழிவு... உலகம் என்றுமே கண்டும் கேட்டுமிராத பயங்கரமான அழிவுதான். அதையும்கூட என்னால் கற்பனை செய்து பார்க்க முடிகிறது'' என்ற போது அந்தக் கூடத்திலுள்ள விளக்குகளின் சுடர்களும் நடுங்குவது போல அசைந்தன. கலவரத்துடன் கணவனின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த சத்தியபாமாவின் கண்களும் கலங்கின.

சட்டென்று திரும்பிய ராமராயர் தம் தேவியின் களையிழந்த முகத்தைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தார். ''பயந்து விட்டாயா கண்ணே? விஷப் பரீட்சைதான்..ஆனால் அதை வெற்றியாக்கிக் கொள்ளும் ஆற்றல் உன் கணவனுக்கு உண்டு. கவலைப்படாதே'' என்று கூறி அவள் கண்ணீரைத் துடைத்தார்.

அப்போது காரிகை ஒருத்தி சிரம் தாழ்த்தி வாய் புதைத்து வந்து வணங்கி நின்றாள். என்ன என்று கேட்காமல் கேட்டு ஏறுபோல எழுந்து நின்றார் ராயர்.

''தங்கள் அந்தரங்க அறையிலே முக்கியமான செய்தியைத் தாங்கிக் காத்திருக்கிறார் தங்கள் இளவல் தளபதிராயர் அவர்கள்'' என்றாள் அவள் நிமிராத தலையுடன். புருவங்களைச் சுருக்கி ஒரு விநாடி ஏதோ யோசனையில் ஆழ்ந்தவர் மறு விநாடி பட்டுப் பீதாம்பரம் தரையில் புரளத் தம் அந்தரங்க அறையை நோக்கி நடந்தார். உள்ளே நுழைந்த அவர் வேகம் எதையோ கண்டதும் தடைப்பட்டது. அறையின் நடுவே அழகே உருவான ஒரு பெண் ஜ்வலிக்கும் கண்களுடன் நிறுத்தப்பட்டிருந்தாள். ஆம், அவளாக அங்கு வந்து நிற்கவில்லை. இரண்டு காவல் கன்னிகளுக்கிடையே கட்டுண்ட நிலையில் அவளைக் கண்ணுற்ற ராயரின் கண்கள் வியப்பினால் விரிந்தன. ராயரைக் கண்ட அந்தப் பாவையோ சீறும் பாம்பெனச் சினந்தவள் தன் செயலற்ற நிலையில் அதைப் பெருமூச்சாக்கி உடலைச் சிலிர்த்துக் கொண்டாள்.

**(தொடரும்)**

# திரைத் துணுக்கு

## ஸவுத் பஸிபிக்.

**1940**ம் வருஷம். இரண்டாம் உலக யுத்தம் தீவிர கட்டத்தை அடைந்திருந்த தருணம். பஸிபிக் தீவுகளுள் ஒன்றுக்கு அமெரிக்க லெப்டினென்ட் ஒருவர் ஜப்பானியப் படைகளின் நடமாட்டங்கள் பற்றி உளவறிந்து போக வருகிறார். அப்போது நடைபெறும் சம்பவங்கள்தான் ''ஸவுத் பஸிபிக்'' என்கிற சிரிப்பூட்டும் இசைச் சித்திரமாக உருவாகியிருக்கிறது. சென்னையில் உள்ள 70 எம். எம். தியேட்டரான 'ஸபைய'ரில் வெளியாகப் போகும் படங்களுள் ஒன்று இது.

வழக்கமான ஆங்கிலப் படங்களைவிட அதிக நீளமானதும் தரத்தில் உயர்ந்ததும் இசையில் சிறந்ததுமான இப்படத்துக்கு எத்தனை நாட்கள் ஷூட்டிங் நடந்தது தெரியுமா? சரியாக எழுபத்தி மூன்றே நாட்கள்தான். ஹவாய் தீவில் 33 நாட்கள் ஷூட்டிங் நடந்தது: ஸ்டுடியோக்களில் 40 நாட்கள் நடந்தது. அதாவது பல நாட்களில் இரண்டு இடங்களிலும் ஒரே தருணத்தில் ஷூட்டிங் நடைபெற்றிருக்கிறது. அந்த அளவுக்குக் கச்சிதமாகத் திட்ட மிட்டுத் தயாரித்திருக்கிறார்கள் படத்தை. மூன்று வருஷம் ஐந்து வருஷம் என்று ஷூட்டிங் இழுக்கடிக்கும் நம் படங்களைப் பற்றி என்ன சொல்ல?



சாதாரணமாக நம் ஸ்டுடியோக்களில் பாடல்களை முன்கூட்டியே ஒலிப்பதிவு செய்து கொண்டபோதிலும் படப்பிடிப்பை முதலில் முடித்துக்கொண்டு பிறகுதான் பலதரப்பட்ட காட்சிகளுக்கு ஏற்பப் பின்னணி இசையை அமைப்பார்கள். ஆனால், பாடல்கள் மட்டுமின்றி முழுப் படத்தின் பின்னணி இசைகூட ஷூட்டிங் ஆரம்பமாவதற்கு முன்னமேயே ரிகார்ட் செய்யப்பட்டது. ஸவுத் பஸிபிக்கின் இன்னொரு விசேஷம். திரை உலக சரித்திரத்தில் இது ஒரு புதுமை. பின்னணி இசை ரிகார்டை இயக்கிவிட்டுப் பின்னர் நடித்ததால் நடிக நடிகையரின் நடமாட்டங்கள் இம்மியளவும் பிசகின்றி இசையுடன் ஒத்துப் போய் இழைந்தன. அத்துடன் அந்த அந்தக் கட்டத்துக்கு ஏற்ப நடிக நடிகையர் உணர்ச்சிவசப்படவும் இசை உதவியது.

# நீண்ட நடை பயணங்கள்





கிறிஸ்து சகத்துக்கு இரண்டு நூற்றாண்டுகள் முந்தியே சீனாவில் புத்த மதம் புகுந்து விட்ட தென்றாலும், கி. பி. மூன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்துதான் அது அங்கு வேகமாகப் பரவத் தொடங்கியதென்று சொல்ல வேண்டும். இதற்குக் காரணமாக இருந்தவர்கள் இந்தியாவிலிருந்து சென்ற பௌத்த சந்நியாசிகள். இவர்கள் சீனாவுக்குச் சென்று, சீன மொழியில் நல்ல புலமை பெற்றுக் கொண்டு, தாங்கள் எடுத்து வந்த புத்த மத கிரந்தங்கள் பலவற்றைச் சீன மொழியில் மொழிபெயர்த்து விரிவுரைகளுடன் வெளியிட்டு உதவினார்கள்; இவர்களால் சீன இலக்கியமும் வளமை பெற்றது.

இந்த நற்பணிக்காக இவர்கள் மேற்கொண்ட முயற்சிகளும், சந்தித்த இடையூறுகளும், அனுபவித்த துன்பங்களும் எத்தனை எத்தனையோ! இந்தியாவிலிருந்து சீனாவுக்கு இவர்கள் நாட்கணக்கிலல்ல, வருஷக் கணக்கில், நூற்றுக்கணக்கான மைல்களல்ல, ஆயிரக்கணக்கான மைல்கள் நடந்து சென்றார்கள். நரேந்திர யசஸ் என்ற ஒரு பண்டிதன், சுமார் ஐம்பதினாயிரம் மைல்கள் நடந்து சென்று சீனாவை அடைந்திருக்கிறான். இதற்கு ஏறத்தாழ நாற்பது வருஷ காலம் பிடித்தது. வழியில் ஐம்பது ராஜ்யங்களுக்கு அதிகமாகப் பார்த்திருக்கிறான். ஆங்காங்கு தங்கியும் அறிஞர்களோடு பழகியும் அனுபவம் பெற்று, சீனாவை அடைந்து அநேக புத்தமத கிரந்தங்களை மொழிபெயர்த்து உதவினான். இவனைப்போல் எத்தனையோ பேர்கள் நீண்ட நடைபயணத்தை மேற்கொண்டிருக்கிறார்கள். இவர்களைப் போலவே சீனாவிலிருந்தும் அநேக அறிஞர்கள் இந்தியாவுக்கு வந்து, புத்த மதத்தைப் பற்றி இன்னும் அதிகமாகத் தெரிந்து கொண்டு திரும்பியிருக்கிறார்கள். இவர்களில் குறிப்பிடத் தக்கவன், முதன்முதலாக, வட இந்தியாவில் மேற்குக் கோடியிலிருந்து கிழக்குக் கோடி வரையில் யாத்திரை செய்த பாஹியான் என்பவன்.

பாஹியான், சீனாவின் கிழக்குப் பகுதியில் உள்ள ஷான்ஸி மாகாணத்தில் கி.பி. 333ம் வருஷம் பிறந்தான் என்பர். இவனுடைய இயற்பெயர் குங். மூன்றாவது வயதிலேயே பௌத்தபிட்சுவாகி விட்டான். அப்பொழுது



வெ. சாமிநாத சர்மா

# ஆறு ஆண்டுகள் நடந்த அறிஞர்

இவனுக்கு வழங்கப்பட்ட பெயர்தான் பாஹியான் என்பது. இதற்கு 'தரும சொரூபி' என்று பொருள் கூறுவர். சிறு வயதிலேயே எவ்வளவு சமயப் பற்று உள்ளவனு யிருந் தான் என்பதை இது நன்கு புலப்படுத்துகிறது.

பாஹியான் இளமை கழிந்ததும், சாங் கான் என்ற ஊரில் (இது தற்போது ஸியான் என்று அழைக்கப்படுகிறது.) தங்கி சமயக் கல்வி பயின்றான். பிறருக்குப் போதிக்கின்ற அளவுக்கு அதில் நல்ல தேர்ச்சியும் பெற்றான். சுமார் அரை நூற்றாண்டுக் காலம் இப்படிக் கழிந்தது. ஆயினும் இவன் உள்ளத்தில் குறை இருந்து கொண்டிருந்தது.

சீனாவில் பௌத்த மடாலயங்கள் பல ஏற்பட்டு வந்தனவாயினும், அவை எந்தெந்த ஒழுங்கு முறைகளுக்குட்பட்டிருக்க வேண் டும், அங்கு வதியும் பிட்சுகள் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் யாவை? அவர்கள் செய்ய வேண்டிய அநுஷ்டானங்கள் என் னென்ன முதலியவை ஒரு நிர்ணயத்துக்குட் படாமலும், தெளிவாகத் தெரியாமலும் இருந் ததே இவன் மனக் குறைக்குக் காரணம். இதற்காக இந்தியா சென்று அங்குள்ள பௌத்த மடாலயங்களின் விதிகளையும் ஒழுங்குமுறைகளையும் அறிந்து வந்து, அவற் றைச் சீன மடாலயங்களிலும் அநுசரிக்கச் செய்ய வேண்டும் என்று விரும்பினான். தவிர, அங்கு புத்தமத சம்பந்தமான மூல நூல்கள் பல கிடைக்குமென்றும், அவற்றில் சிலவற்றை யேனும் கொண்டு வந்து சீன மொழியில் மொழி பெயர்த்து வெளியிட வேண்டும் என்றும் ஆசைப்பட்டான். பொது வாக இவனுக்குச் சிறு வயதிலிருந்தே புத்தர் பிரான் அவதரித்தருளிய புண்ணிய பூமியான பாரத நாட்டுக்கு ஒரு முறையேனும் சென்று வரவேண்டுமென்ற ஆவல் மிகுந்திருந்தது.

இவற்றை யெல்லாம் முன்னிட்டு இவன் கி. பி. 399ம் வருஷம் நான்கு நண்பர்களுடன் சாங்கானிலிருந்து புறப்பட்டான். அப்போது இவனுக்கு அறுபத்தைந்துக்கு மேல் ஆகியிருந் தது. புறப்பட்டபோது கூட வந்த நால் வரைத் தவிர வழியில் வேறு நால்வர் இவ னுடன் சேர்ந்து கொண்டனர். ஆனால் இவர் களில் இருவரைத் தவிர, மற்றவர்கள் கடைசி வரை இவனுடன் இருக்கவில்லை. இரண்டு பேர்கள் வழியிலேயே இறந்து விட்டனர். நான்கு பேர்கள் நடை பயணத்தைத் தாங்க முடியாமல் சீனாவுக்குத் திரும்பி விட்டனர்.

சாங்கானிலிருந்து புறப்பட்ட பாஹியான் வடமேற்காக நூற்றுக்கணக்கான மைல்கள் சென்றான். வழியில் மிகுந்த பரப்புடைய கோபி பாலைவனத்தின் தெற்குப் பகுதியைக் கடக்க வேண்டி யிருந்தது. இந்தப் பாலை வனத்தில் எப்பொழுதும் ஒருவித அனல் காற்று வீசிக் கொண்டிருக்கும். பட்சிகள்



கூடப் பறப்பதற்கு அஞ்சும். இதில் சென்ற யாரும் உயிர் பிழைத்தது கிடையாது. ஆனால் பாஹியான் புத்தர்பிரானின் கருணையில் நம்பிக்கை வைத்து, சுமார் முப்பத்தைந்து நாட்களில் இந்தப் பாலைவனத்தைக் கடந்தான். இதற்குப் பிறகு 'உலகத்தின் கூரை' என்று அழைக்கப்படுகிற பாமிர பிரதேசத்தைக் கடக்க வேண்டியிருந்தது. சுமார் பதினெட்டாயிரம் அடிக்கு மேல் உயரம் உள்ள இந்தப் பிரதேசம் வருஷம் முழுதும் உறைந்து கிடக்கும்; விஷ ஜந்துக்கள் நிறைந்து கிடக்கும். இத்தகைய பிரதேசத்தை ஒரு மாத காலத்துக்குள் கடந்து விட்டான் பாஹியான்.

இதற்குப் பிறகு மத்திய ஆசியாவில் உள்ள பல நாடுகளின் வழியாக நூற்றுக்கணக்கான மைல்கள் நடந்து வந்து, காந்தாரம், புருஷ புரம் என்கிற பெஷாவர், தட்ச சிலம், வட மதுரை, சிராவஸ்தி முதலிய பௌத்த ஸ்தலங்களைப் பார்த்துக் கொண்டு பாடலிபுத்திரம் என்ற நகரத்துக்கு வந்து சேர்ந்தான். இங்கு சுமார் மூன்று ஆண்டு காலம் தங்கி, வடமொழி கற்று அதில் நல்ல தேர்ச்சியும் பெற்றான்; புத்தமத சம்பந்தமான சில நூல்களைச் சேகரித்துக் கொண்டான்.

இவன் பார்த்த பாடலிபுத்திரம் எப்படி இருந்தது? ''மத்திய (மகத) ராஜ்யத்திலுள்ள எல்லா நகரங்களைக் காட்டிலும் இந்தப் பாடலிபுத்திரம்தான் மிகப் பெரிது. இங்குள்ள மக்கள் செல்வச் செழுமை உடையவர்களா யிருக்கிறார்கள்; நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதில் ஒருவரோடு ஒருவர் போட்டி போடுகிறார்கள். சில பெரியதனக்காரர்கள், தரும வைத்திய சாலைகள் ஏற்படுத்திவிருக்கிறார்கள். ஏழைகள், அங்கவீனர்கள் ஆகிய பலரும் இங்கு சென்று இலவசச் சிகிச்சை பெறுகிறார்கள். இங்கு பணி புரியும் வைத்தியர்கள், நோயாளிகளின் தேவைகளைக் கவனித்துச் சிகிச்சை செய்து அனுப்புகிறார்கள்.''

பாஹியான் வந்த காலத்தில், பாடலிபுத்திரத்தைத் தலைநகரமாகக் கொண்டு மகத ராஜ்யம் உள்பட மத்திய இந்தியா முழுதும் குப்த மன்னர் பரம்பரையைச் சேர்ந்த இரண்டாவது சந்திரகுப்தனுடைய ஆளுகைக்குட்பட்டிருந்தது. (கி. பி. 376—414) இவனுடைய ஆஸ்தானத்தில்தான் காளிதாஸ மகாகவி புகழுடன் விளங்கினரென்பர். இந்த ராஜ்யத்தைப் பற்றிப் பாஹியான் பின்வருமாறு கூறுகிறான்: ''ஜனங்கள் மகிழ்ச்சி உடையவர்களாகவும் திருப்தியுடையவர்களாகவும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அரசாங்கத்தின் நிர்ப்பந்தம் எதுவும் இவர்களுக்கு இல்லை. அரசனுக்குச் சொந்தமான நிலங்களை உழுது பயிரிடுகிறவர்கள் மட்டும் மகசூலில் ஒரு பகுதியை வரியாகச் செலுத்துகிறார்கள். இவர்கள் விரும்புகிற இடத்தில் இருக்கலாம்; விரும்புகிற இடத்துக்குப் போகலாம். மரண தண்டனை விதிக்காமலேயே அரசன் நீதி செலுத்துகிறான். அரசனுடைய சேவையில் இருப்பவர்களுக்குச் சம்பளமும், சேவையிலிருந்து விலகிய பிறகு 'பென்ஷனும்' ஒழுங்காகக் கொடுக்கப்படுகின்றன. ஜனங்கள் உயிருள்ள பிராணிகளை வதை செய்வது கிடையாது; மதுபானப் பழக்கத்தையும் காணோம்.''

மத்திய இந்தியாவில் உள்ள முக்கியமான பௌத்த ஸ்தலங்களையெல்லாம் பார்த்துக் கொண்டு, பாஹியான், கி. பி. 411ம் வருஷம் வங்காளத்தின் தென்கோடியில் உள்ள தாமிர லிப்தி அல்லது தாம்லுக் என்று அழைக்கப்பட்ட துறைமுகப் பட்டணத்துக்கு வந்து, அங்கிருந்து கடல் வழியாகப் பதினான்கு நாட்களில் இலங்கை போய்ச் சேர்ந்து விட்டான்.

இலங்கையில் சுமார் இரண்டு வருஷகாலம் தங்கி, புத்த மத சம்பந்தமான அநேக அரிய சுவடிகளைச் சேகரித்துக் கொண்டான்; பல தலங்களுக்கும் சென்று ஆன்ம துலக்கம் பெற்றான். இந்த நிலையில், தாய்நாடு திரும்ப வேண்டும் என்ற ஆவல் இவனை ஆட்கொண்டது. எனவே கி. பி. 413ம் வருஷம், இலங்கையிலிருந்து சுமார் இருநூறு பிரயாணிகளுடன் புறப்பட்ட ஒரு வியாபாரக் கப்பலில் சீனவுக்குப் பிரயாணமானன்.

கடற் பயணத்தின்போது, கப்பல், புயற்காற்று போன்ற ஏதேனும் ஓர் ஆபத்தில் சிக்கிக் கொள்ளுமானால், அப்பொழுது உதவிக்காக, அந்தக் கப்பலுக்குப் பின்னால் ஒரு படகை இணைத்துச் சேர்த்துக் கொண்டு போவது வழக்கம். இதன்படி பாஹியான் ஏறிச் சென்ற கப்பலுக்குப் பின்னால் ஒரு படகு இணைக்கப்பட்டிருந்தது. கப்பலும், இந்துமகா சமுத்திரத்தில் கிழக்குப் பக்கமாக எவ்வித தடங்கலும் இல்லாமல் இரண்டு நாள் சென்றது. மூன்றாவது நாள் திடீரென்று ஒரு புயற்காற்று அடிக்க ஆரம்பித்து விட்டது. கப்பல் அதில் சிக்கிக் கொண்டது. கப்பலின் அடிப்பாகத்தில் ஒரு துவாரம் ஏற்பட்டு அதன் வழியாகக் கடல் நீர் கப்பலுக்குள் புகவும் தொடங்கி விட்டது. கப்பலிலிருந்தவர்கள் பயந்து போய், பின்னடி வந்து கொண்டிருந்த படகில் குதித்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முயன்றார்கள். ஆனால் அந்தப் படகில் ஏற்கனவே இருந்தவர்கள், அதிகமான பேருக்கு இடம் கொடுத்தால், படகு ஒரேயடியாகக் கவிழ்ந்து மூழ்கிப் போகுமென்று அஞ்சி, கப்பலையும் படகையும் இணைத்துக் கொண்டிருந்த கயிற்றைத் துண்டித்து விட்டார்கள். இதனால் கப்பலிலிருந்தவர்கள் அதிலேயே தங்கும்படியாகி விட்டது. ஆனால் கப்பலின் பாரத்தைக் குறைத்து விட்டால், அது சீக்கிரத்தில் முழுகிப் போகாமல் சிறிது தூரமாவது செல்லக் கூடுமென்று கருதி, தங்களிடமிருந்த பளுவான சாமான்களையெல்லாம் கடலில் எறிந்து விட்டார்கள். இவர்களைப் பின்பற்றிப் பாஹியானும், தன்னுடைய கமண்டலம் முதலிய பொருள்களையெல்லாம் கடலில் எறிந்து விட்டான். ஆனால் தான் கொண்டு வந்த சுவடிகள் அடங்கிய கட்டை மட்டும் வெகு ஜாக்கிரதையாகத் தன்னிடம் வைத்துக் கொண்டான். அது தன் கைநழுவிப் போகாதபடி காப்பாற்றித் தருமாறு புத்த பகவானைப் பிரார்த்தனை செய்து வந்தான். அவன் பிரார்த்தனையும் வீண் போகவில்லை.

பயணம் தொடங்கிய மூன்றாவது நாள் எடுத்த புயல் காற்று, பதின்மூன்று நாட்கள் இடைவிடாமல் இரவும் பகலுமாக அடித்துக் கொண்டிருந்தது. கப்பலும் தத்தளித்துக் கொண்டே மெள்ள மெள்ளச் சென்று கொண்டிருந்தது. பதினான்காவது நாள், காற்று சிறிது தணியவே, கப்பலும் ஒரு தீவின் கரையோரத்தை அடைந்தது. கப்பலைச் செலுத்தி வந்தவர்கள், துவாரத்தை அடைத்துச் சரிப்படுத்திக் கொண்டு மேலும் பயணத்தைத் தொடங்கினார்கள். காற்றடிக்கும் போக்கிலே கப்பல் சென்றது. சுமார் தொண்ணூறு நாட்கள் வரையில் இப்படிச் சென்று கடைசியில் ஜாவாத் தீவை அடைந்தது.

இந்தத் தீவில் பாஹியான் ஐந்து மாத காலம் தங்கும்படியாகி விட்டது. பிறகு, முன் மாதிரி ஒரு வியாபாரக் கப்பலைப் பிடித்துக் கொண்டு சீனா நோக்கிப் புறப்பட்டான். இந்தக் கப்பலிலும் சுமார் இருநூறு பிரயாணிகளே இருந்தார்கள். இவர்கள், ஐம்பது நாள் பிரயாணத்துக்குப் போதுமான உணவுப் பொருள்களை எடுத்துக் கொண்டிருந்தார்கள். அதற்கு மேல் பயணம் நீடிக்காதென்று இவர்கள் எதிர்பார்த்தார்கள். அதுகாறும், இந்தக் காலவரையறைக்குள்தான் ஜாவாவுக்கும் சீனாவுக்கும் கப்பல்கள் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருந்தன.

புறப்பட்ட ஒரு மாத காலம் வரையில் கப்பல் எவ்வித ஆபத்தும் இல்லாமல் சரளமாகச் சென்று கொண்டிருந்தது. திடீரென்று ஒரு நாள் காற்றும் மழையும் கலந்து அடிக்க ஆரம்பித்தது. கப்பல் எந்த நிமிஷத்திலும் கவிழ்ந்து விடும் போல் இருந்தது. பாஹியான், புத்தபகவானின் திருவடிக் கமலங்களில் தன் மனத்தைச் செலுத்தினான்.

கப்பலிலிருந்த பிரயாணிகள் சிலர், "இந்தப் பௌத்த பிட்சு இருப்பதனால்தான் நமக்கு இம்மாதிரியான இடையூறுகள் ஏற்படுகின்றன. இவனை எங்காவது ஒரு தீவைப் பார்த்து அதில் இறக்கிவிட வேண்டும். பிறகுதான் நாம் நிம்மதியாகச் செல்ல முடியும்" என்று பேசத் தொடங்கினார்கள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த பாஹியானின் அன்பனான ஒரு பிரயாணி, "இவனை நடுவழியில் இறக்கி விடுவதாயிருந்தால் அப்படியே என்னையும் இறக்கி விடுங்கள்; அல்லது என்னை முதலில் கொன்று விடுங்கள். இவனுக்கு ஏதேனும் தொந்தரவு கொடுப்பீர்களானால் நான், சீனா போய்ச் சேர்ந்ததும், அரசனுக்கு எல்லாவற்றையும் தெரிவித்துவிடுவேன். அவன் புத்த மதத்தில் மிகவும் பற்றுள்ளவன் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று கடுகடுத்த குரலில் கூறினான். பிறகு எல்லோரும் மௌனமாகி விட்டனர்.

கப்பலும் இடைவிடாத மழை காரணமாகத் திசை தப்பிச் சென்று கொண்டிருந்தது. இப்படிச் சுமார் எழுபது நாட்கள் சென்றும் கரை காண முடியவில்லை. கப்பலில் கொண்டு சென்ற உணவுப் பொருள்களோ, ஐம்பது நாட்களுக்கு மேலாகி விட்ட படியால், செலவழிந்து போயின. இதனால் பிரயாணிகள் அனைவரும் கடல் நீரையே எல்லாவற்றுக்கும் உபயோகிக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்குட்பட்டார்கள்.



"பயப்படாதீர்கள் சார்! நான் ஏற்கெனவே மாட்டுக்கு லாடம் அடிக்க அடிக்கப் பழகினவன்தான்!"

எழுபது நாட்களுக்குப் பிறகுதான் தவறான போக்கில் கப்பல் சென்று கொண்டிருக்கிறது என்பதைக் கப்பல் அதிகாரிகள் உணர்ந்தனர். உடனே வடமேற்குப் பக்கமாகக் கப்பலைத் திருப்பிச் செலுத்த முற்பட்டார்கள். பன்னிரண்டு நாட்கள் இரவும் பகலுமாகச் சென்ற பிறகுதான், கப்பல், சீனாவின் கிழக்குப் பகுதியில் உள்ள ஷாண்டுங் என்ற பிரதேசத்தை அடைந்தது.

பாஹியான் சீனா சேர்ந்ததும், பிரயாணத்தினால் ஏற்பட்ட களைப்பைச் சிறிதும் பொருட்படுத்தாமல், புத்தபத்ரன் என்ற ஓர் இந்தியப் பிட்சுவின் துணை பெற்று, தான் கொண்டு வந்த சுவடிகள் சிலவற்றைச் சீன மொழியில் மொழிபெயர்க்கும் பணியில் தீவிரமாக ஈடுபட்டான்.

பாஹியான் சீனாவிலிருந்து புறப்பட்டு இந்தியாவின் மத்தியப் பிரதேசத்துக்கு வந்து சேரச் சுமார் ஆறு வருஷ காலம் பிடித்தது. இந்தியாவில் ஆறு வருஷ காலம் யாத்திரை செய்தான். இலங்கை வழியாகச் சீனாவுக்குத் திரும்பிச் செல்ல மூன்று வருஷம் பிடித்தது. சீனாவிலிருந்து புறப்படும்போது இவனுக்கு அறுபது வயது; திரும்பிச் செல்லும்போது எண்பது வயது. இதற்குப் பிறகுதான், இலக்கியப் பணியில் உற்சாகத்தோடு இறங்கினான். எட்டு வருஷ காலம் இந்தப் பணியைத் திருந்தச் செய்துவிட்டு எண்பத்தெட்டாவது வயதில் இறைவனடி சேர்ந்தான்.

பாஹியான் சீனா சென்ற பிறகு அன்பர்கள் பலருடைய வேண்டுகோளுக்கிணங்கத் தன் யாத்திரையைப் பற்றி ஒரு நூல் எழுதி வெளியிட்டான். தன்னுடைய யாத்திரையின் போது சுமார் முப்பது ராஜ்யங்களை இவன் பார்த்ததாக இந்த நூலிலிருந்து தெரிகிறது. தவிர, இந்த நூல், இவன் யாத்திரை செய்த காலத்தில் அடைந்த அனுபவங்களைச் சுருக்கிக் கூறுவதா விருப்பதோடு கி. பி. நான்காவது நூற்றாண்டில் வட இந்தியாவின் அரசியல் நிலைமையையும் சமுதாய நிலைமையையும் தெரிவிப்பதாகவும் இருக்கிறது.

உறுதியான...காலுறைகள்

உயரிய...காலுறைகள்

டான் அளிக்கும் காலுறைகள்!

வசதிமிக்க, வலுவான டான் காலுறைகள் புத்தம்புது டிஸைன்களில் கிடைக்கின்றன. நீங்கள் எப்பொழுதும் டான் மில்லின் காலுறைகளையே அணியுங்கள்.




சில்லறை விற்பனைக் கடைகள்:

மதுரை: 1, 2 & 2A. அம்மன் சந்நிதி தெரு    சென்னை: 33, ரட்டன் பஜார்

டான் மில்ஸ் கம்பெனி லிட்., ஸ்டேட் பாங்க் பில்டிங், பாங்க் தெரு, போர்ட், பம்பாய்

81-RD-18 TAM



# நாகக் கற்கள்

பண்டைக் காலத்தில் நல்ல பாம்புக்குப் பூஜை செய்வது விஜயநகர் சாம்ராஜ்யத்தில் பிரபலமாக இருந்து வந்தது. நாகர் தலைவரான விருப்பாக்ஷா என்னும் தெய்வத்தை உலகத்தின் மேற்குக் கால்பங்கை ஆண்டுவந்த செந்நிற அரசர் என்று வாழ்த்தினர். புத்தமத வரலாற்றில் மேரு மலையைத் தாங்கி நிற்கும் திருகூட பாறைகளுக்கடியே வாழுபவர் நாகர்களென்று விவரிக்கப் பட்டிருக்கின்றனர். அங்கிருந்தபடியே பெரும் சொத்தைக் காப்பதும், மழை, பெருவியாதியைக் கிளப்புவதும் தமக்கு மரியாதை செலுத்துபவர்களுக்குக் குழந்தை குட்டிகள் வரம் கொடுப்பது மாக ஒரு நம்பிக்கை. புத்திர பாக்கியம் பெறுவதற்காகவே விஜயநகர ஆட்சியில் ராணி முதல் எல்லா ஸ்திரிகளும் விருப்பாக்ஷாவை வணங்கி வந்தனர். முக்கியமாக நாகர சௌத்தியன்று நல்ல பாம்புக்கு விசேஷ சேவை. நாகக் கல்லின் மேல் பால் ஊற்றி விரதம் இருப்பார்கள் பெண்கள். மலடிகள் குழந்தை பிறந்தால், நாகப் பிரதிஷ்டை செய்வதாகச் சபதம் எடுத்துக்கொள்வார்கள். சிறு கருங்கல்லில் படத்தைத் தூக்கிக் காட்சியளிக்கும் உருவத்தைச் செதுக்கிக் கிணற்றிலோ, குளத்திலோ ஆறு மாதங்களுக்குப் போட்டுவிட்டு அதற்கு உயிர் உண்டாக்கப் பிராண பிரதிஷ்டை மந்திரம் ஓதுவர். பிறகு அதை எடுத்து அரச மரம் அல்லது வேப்ப மரம் அல்லது இரண்டும் சேர்ந்து வளரும் நிழலில் நட்டுவிடுவார்கள். மகப்பேறு கிடைத்த பாக்கியத்துக்கு அது அறிகுறி. ஆதியிலே நாகக் கற்கள் வெறும் நாகமாகத் தோற்றமளித்தன. பெண்களுடைய பாராட்டு மிகவே விருப்பாக்ஷாவின் உருவம் கீழே பாம்பாகவும் மேலே பெண்ணின் சாயலாகவும் மாறித் தேவதையாகி விட்டது. ஹம்பி என்ற சிதைந்த விஜயநகரில் பாதாளக் கோயில் ஒன்று உண்டு. அதில் சர்ப்பங்களுக்கென பூஜை இன்றும் நடந்து வருகிறது.

தமிழ் நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலும் நாகக் கற்கள் அரச மரம் அல்லது வேப்ப மரம் அல்லது அவைகள் சேர்ந்து வளரும் கோவில்களிலும் சில சமயங்களில் சிவன் கோவில்களிலும் காணலாம். தற்காலத்தில் நாக பூஜையும் நாகங்களுக்குத் தனிச் செல்வாக்கும் கொடுக்கப்பட்டு வரும் பிராந்தியம் கேரளமே. ஒவ்வொரு வீட்டிலும் கொடியின் தென்மேற்கு மூலையில் நாகக் கொட்டை அல்லது பாம்புக் காவு என்று இடம் ஒதுக்கப்பட்டிருக்கும். காடு போலவே அந்த மூலையைக் கவனிக்காமல் விட்டுவிடுவர், பாம்பு தானாகவே குடியேறிவிடும். இல்லாவிட்டால் நாக உருவம் அடித்த கல்லை அங்கு நட்டுக் கும்பிடுவார்கள். நாகமே குல தெய்வமாதலால் சொத்து கைமாறும்போது நிலத்தையும், பாம்புடன் நாகக் கொட்டகையையும் பத்திரத்தில் காட்டுவர்.

பாம்பின் பூஜையினால் பின்னை வரப்பிரசாதம் பெற்ற தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு நாகப்பன், — நாகம்மா, சர்ப்பண்ணா, நாகநாதன், நாகராஜன், நாகபூஷணம், நாகய்யா என்றெல்லாம் நாமம் சூட்டுவதுண்டு.

நாகபூஜை, மரத்துக்கும் சேர்ந்து வழங்கப்படுவதால் அரச, வேப்ப மரங்கள் கும்பிடும் தெய்வங்களாகிவிட்டன.

பாம்பின் உருவம் நமது நாட்டின் அலங்காரக் கலையில் இடம் பெற்றுவிட்டது. ஐந்து தலை நாகம், ஏழு தலை நாகம், பிணங்கி எழுந்து ஆடும் நாகங்கள், பாம்பைக் காலால் நசுக்கிக் கொல்லும் கிருஷ்ண பகவான், பாம்பின் படத்தின் அடியில் வெய்யிலையும் மழையையும் பாராமல் குழல் வாசிக்கும் கிருஷ்ணன் இவைகளெல்லாம் அலங்காரப் பண்டங்களாக அமைந்து விட்டன. வைத்தியர்களின் சிகிச்சைக் குறி இரண்டு நல்ல பாம்பு பிணங்கி எழுந்து நிற்கும் படமே. — **அன்புமணி**

# சிறந்த தரத்துடன் சிக்கனமும்
# குடும்பத்தினர் அனைவருக்கும் கிடைக்கிறது

எத்தனை சிக்கனமானது! எத்தனை புத்துணர்ச்சி தருவது! இந்தப் பெரிய சைஸ் டால்க்கில் உங்களுக்கு பெயர் பெற்ற கால்கேட்டின் உரிய தரம் கிட்டுகிறது.

எத்தனை நறுமண முடையது! எத்தனை நீடித்திருப்பது! ஸ்நானத்திற்கு பின்- வெளியே செல்லுமுன்- தாராளமாக உங்கள் உடலில் தூவிக்கொண்டு நளினமாய் விளங்குங்கள்.

எத்தனை சௌந்தரிய மானது! எத்தனை மிருது வானது! கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்க்கை குழந்தை விரும்புகிறது. இளஞ்சருமத்திற்கு அது மிகவும் ஏற்றது.

COLGATE
All-Purpose
TALCUM POWDER

# கால்கேட்
## *ஆல்-பர்ப்பஸ்* டால்க்

**அபூர்வ மலர்களின் நீடித்திருக்கும் நறுமணங்கொண்டது!**



பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்
ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
மதராஸ்-17




'ஒவ்வொரு மனிதனும் நீண்ட காலம் வாழ்ந்திருக்க விரும்புகிறான்; ஆனால் வயோதிகனாக இருக்க விரும்புவதில்லை.'

— ஜொனதன் ஸ்விப்ட்

ஃ ஃ ஃ

"பத்திரிகை நிருபர்களே! உங்களுக்கு இந்த ஆஸ்பரின் மாத்திரைகள் தேவைப்படும்!" என்று கூறி அழகான வாலிபப் பெண் தொண்டர்கள், அவற்றை மகாநாட்டுக்கு வந்திருந்த நிருபர்களுக்குக் கொடுத்தார்களாம். இப்படி, சில வாரங்கள் முன்னர் அமெரிக்காவில் நடைபெற்ற குடியரசுக் கட்சி மகாநாட்டில் நடந்தது. இதே போன்று நமது தேசத்தில் ஸினிமா பார்க்கப் போகிறவர்களுக்கும் கொடுத்தால் எவ்வளவோ உதவியாக இருக்கும். படங்களைப் பார்த்து வேதனையும், வெறுப்பும், அலுப்பும் அநுபவிக்கும் நேரம் இதுவரை மூன்று மணியாக இருந்தது. இப்பொழுது நான்கு மணி நேரமாகி வருகிறது. படம் ஓடுவது நான்கு மணி நேரம்! அதற்குள் பம்பாய்க்கு விமானத்தில் சென்று ஜூஹூ கடற்கரையில் ஒரு முழுக்குப் போட்டு விட்டுத் திரும்பி வந்து விடலாம்.

ஸினிமாப் படங்களைப் பற்றி என்ன குறை வேண்டுமானாலும் சொல்லுங்கள். அதில் தெய்வ மணம் கமழுகிறது என்பதை ஒப்புக்கொண்டு தானாக வேண்டும்! படப் பிடிப்பு கடவுள் பூஜையுடன்தான் ஆரம்பமாகும். பிறகு திரையிடப்படும் முன்னால் ஒரு பூஜை நடக்கும். சம்பந்தப்பட்ட முக்கியஸ்தர்கள் தங்கள் தங்கள் இஷ்ட தெய்வங்களைப் போய்ப் பார்த்து விட்டு வருவார்கள். அதில் நடிக்கும் பிரபல நட்சத்திரங்கள் ஜோடி, ஜோடியாகக் கோவில் பிராகாரங்களில் அடிப் பிரதட்சிணம், அங்கப் பிரதட்சிணம் முதலியன செய்வதுண்டு.



படங்களில், கோவில்கள், வீட்டிலுள்ள பூஜை அறைகள் இவை அடிக்கடி தென்படும். பரிசுத்தமான காதல் நோயால் வருந்துபவர்கள், ஸேவிங்க்ஸ் பாங்கில் ஒரு கணக்கு ஆரம்பிக்க முடியாத ஏழைகள், பணத்தை எண்ணி எண்ணிக் கை வலி தாங்காமல் கஷ்டப்படும் பணக்காரர்கள் முதலிய பலருமே தெய்வத்தை ஏதாவது ஒரு சமயம் வேண்டிக் கொள்ளாதிருக்க மாட்டார்கள். கதறி அழுது கொண்டே பாடுவதற்குக் காதலுக்கு அடுத்தபடியாகத் தெய்வ பக்திதான் அதிகம் பயன்படுகிறது. இதெல்லாம் போதாதென்று படத்திலேயே தெய்வத்தின் பெயர் அடிபடும்படியாகச் செய்து அவரை மாட்டி வைத்து விடுகிறார்கள். 'ஆண்டவன் தர்பார்' 'தெய்வப் பாட்டி', 'முதலாளியே கண்கண்ட முதல்வன்', 'தலை மயிர் கொடுத்த தெய்வம்' 'தெய்வம் கொடுத்த நாத்தனார்' என்றெல்லாம். ஆனால், இதுவரை 'தெய்வம் கொடுத்த கதை' என்று ஒரு படமும் வரவில்லை.

திரைப் படம் தயாரிப்பவர்களுக்கு ஏன் தெய்வம் ஒரு நல்ல கதையாகக் கொடுக்கக் கூடாது? அவர்களை அதைத் திருடும்படியும், தழுவும்படியும் எதிலிருந்தாவது பொறுக்கி எடுக்கும்படியும் செய்து விடுகிறார்? ஒரு வேளை கடவுள் இப்படி நினைத்திருக்கலாமோ ?

"நான் எங்கும் பரவியிருப்பவன். உருவமில்லாதவன். எனக்கு ஒரு கண், காது, மூக்கு எல்லாம் வைத்து இரண்டு பெண்டாட்டிகளைக் கூடக் கலியாணம் செய்து வைத்து விடுகிறார்கள். அப்படிக் கற்பனை செய்து கதை எழுதக் கூடிய மனிதர்களுக்கு நான் படக் கதை சொல்வதென்பது கொல்லன் தெருவில் ஊசி விற்பது போலாகும்!"

ஃ ஃ ஃ

"அவர் பாட்டைக் கேட்டால், இரும்பு, அல்லது துத்தநாகத் தகடுகளின் மீது பெரிய மழைத் துளிகள் மிக வேகமாக விழும்போது உண்டாகும் சப்தம் ஞாபகம் வரும்" என்று ஒரு சங்கீத விமர்சகர், விரிவான சாரீரத்துக்கு, வோட்ஹௌஸ் பாணியில் உபமானம் கூறி எழுதியிருந்தார். அந்தத் தகடுகள் இப்படி உவமானம் கூறப்பட உபயோகமாயிருப்பதுமன்றி, மேற்கூரைகள் போடவும், ஓரிடத்தைச் சுற்றி வேலி போல் வைக்கவும் கூட உபயோகப்படும் என்றும் எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

'காரு கேட்டட் ஷீட்' என்று கூறப்படும் அந்தத் தகடுகள் மேடும் பள்ளமுமாய் இருக்கும். மேலே வழிய மழைத் தண்ணீர் ஓடுவதற்காக அப்படிப் பள்ளமாக அமைத்திருக்கிறார்கள் என்று நினைத்திருந்தேன். அதைப் பற்றி விசாரித்ததில், அப்படி வளைத்து வைப்பதால் அவை பல மடங்கு பலமாகி விடுகின்றன என்று தெரிய வந்தது. நான் அதைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டதற்குக் காரணம் அதனிடம் உள்ள ஒரு தனிப்பட்ட சக்தியைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காகத்தான்.

சுமார் பத்து வருடங்களுக்கு முன்னால், சென்னையில் 'அயலண்டு கிரௌண்டு'ல் நடந்த ஒரு கண்காட்சி சாலைக்கு உபயோகிக்கப்பட்ட பல துத்தநாகத் தகடுகள் காணப்பட வில்லை; அல்லது அவற்றுக்குக் கணக்குத் தெரியாமல் இருந்தது. இது சம்பந்தமாக ஒரு பிரபல அரசியல் தலைவர் மீது கிரிமினல் வழக்கு நடந்தது. இப்போது

மத்தியப் பிரதேச காங்கிரஸ் கமிட்டித் தலைவர் சுமார் அறுநூறு டன்கள் இரும்புத் தகடுகளுக்குக் கணக்குக் காண்பிக்கவில்லை என்று தெரிகிறது. அவர் விஷயம் ஒரு பெரிய கதை.

ஹரோன் அல்ரஷீதைப் பற்றிய கதைகளொன்றில், ஒருவர், தாம் தமது நண்பருடைய ஒரு வியாபாரியினிடம் ஒப்படைத்த இரும்புச் சாமான்களை அவர் திரும்பித் தரவில்லை என்று புகார் செய்கிறார். அரசர் வியாபாரியை இதைப்பற்றி விசாரித்தபோது, "இரும்புச் சாமான்களை எலி தின்று விட்டது" என்று கூறினாராம். அது போன்று இந்தத் தலைவர்கள் கூறவில்லை.



அந்தத் தகடுகள் யாரிடமாவது, ஒப்படைக்கப்பட்டிருந்தால், அவை, "எங்களைத் திருப்பிக் கொடுத்து விடாதீர்கள். கள்ள மார்க்கெட்டில் விற்று விட்டு நீங்கள் பணத்தை எடுத்துக் கொண்டு விடுங்கள். தயவுசெய்து அப்படிச் செய்யுங்கள்!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ளும் என்று எண்ணத் தோன்றுகிறது.

இது போன்ற காரியங்கள் செய்து லட்சக்கணக்கில் பணம் சம்பாதிக்கும் திறமை சில முதல் மந்திரிகளுக்கு அடுத்தபடியாகப் பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் தலைவருக்குத் தான் இருக்கிறது. ஆகையினால்தான் அரசாங்க வரவேற்புகளில் முதல் மந்திரிக்கு அடுத்தபடியாகப் பிரதேச காங்கிரஸ் கமிட்டி தலைவருக்குக் கௌரவ ஸ்தானம் அளிக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸ் மேலிடம் யோசனை செய்து வருகிறது போலும்!

ஃ ஃ ஃ

இது வயோதிகர்களுக்குத்தான் காலம் என்று சொல்ல வேண்டும்! சர்ச்சில் தமக்கு தொண்ணூறு வயதான பிறகு சென்ற வாரம்தான் அரசியலிலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்டார்.

ஐரோப்பாவில் பெரும்பாலான ராஜ்யத் தலைவர்கள் வயோதிகர்கள்தான்:

அருவது கஸ்டாவ் (ஸ்வீடன்) — 82

ஜோஸப் பீச் (லக்ஸம்பர்க்) — 80

கிரோனச் (இத்தாலி) — 77

டாக்டர் ஸலஸார் (போர்த்துகல்) — 74

ஜெனரல் டி கால் (பிரான்ஸ்) — 70

ஜெனரல் பிராங்கோ (ஸ்பெயின்) — 72

மார்ஷல் டிட்டோ (யூகோஸ்லேவியா) — 72

குருஷேவ் (ரஷ்யா) — 70

ஜெனரல் குர்ஸெல் (துருக்கி) — 70

மாஸேதுங் — 70

சூ. என். லாய் — 70

இவர்கள் பெரும்பாலும் தத்தம் தேசங்களில் சர்வாதிகாரிகளாக இருப்பவர்கள்; பழைய கால அரசர்களைவிட அதிக அதிகாரம் பெற்றுள்ளவர்கள்.

வயோதிகர்கள் தேசத்தை நிர்வகிக்க லாயக்கானவர்களா, அவர்களிடம் அதிகாரத்தை ஒப்படைக்கலாமா என்ற கேள்விகள் அரசியல் உலகில் எழுந்து கொண்டிருக்கின்றன. பழக்க வழக்கங்கள் தெறி கெட்டுப் போய்க் கொண்டிருக்கும் இந்தச் சோதனைக் காலத்தில் பண்டைய பண்பாட்டில் ஊறியவர்கள்தான் அதிகாரத்திலிருக்க வேண்டும் என்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்.

இந்தத் தலைவர்கள் எல்லாருமே நல்ல திடகாத்திரர்களாய், உழைத்து வருபவர்கள்.

அரசியல் சம்பந்தப்படாத வயோதிகர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். விஞ்ஞானியும் தத்துவ சாஸ்திரியுமான பர்ட்ரண்டு ரஸ்ஸலுக்கு 92 வயதாகிறது. பெரிய எழுத்தாளரான ஸாமர்ஸெட் மாமின் வயது 90. விஞ்ஞானி ஸன்ஸ்டினின் வயது 85; சமீபத்தில்தான் 'ஜீஸஸை'ப் பற்றி ஒரு புது நாவல் எழுதிய லோட்ஹௌஸ் 84 வயது இளைஞராக இருந்து கொண்டிருக்கிறார்..." ஆனால் உழைக்கும் அரசியல்வாதியாயும், உழைக்கும் பத்திரிகையாளராயும் இருக்கும் 84 வயது ஆன ஒரே இளைஞர் உலகத்தில் நமது தேசத்தில்தான் இருக்கிறார். அவர் ராஜாஜி. ஒவ்வொரு வாரமும் அவர் எழுதித் தள்ளுவதைக் கணக்கெடுத்துப் பார்க்கும் போது அவரது உழைப்பைப் பற்றி வியக்காமல் இருக்க முடியவில்லை. சொல்லப் போனால் பொறாமைப்படக் கூடத் தோன்றுகிறது!

ஃ ஃ ஃ



ஒரு மேல் நாட்டுப் பத்திரிகையில் பின்வரும் விளம்பரம் வெளியாகியிருந்தது:

'வீட்டில் உதவிக்கு ஒரு பெண் தேவை. சுமாராகப் படித்திருக்க வேண்டும். தினம் பதினெட்டு மணி நேரம் வேலை செய்யவும், வாரம் ஏழு நாட்களும் வேலை செய்யவும் தயாராயிருக்க வேண்டும். குழந்தைகளை வளர்க்க, தையல் வேலை செய்ய, கடைகண்ணிக்குப் போய்க் கறிகாய்கள், சாமான்கள் வாங்கிக் கொண்டு வர, கணக்கெழுதத் தெரிந்திருக்க வேண்டும். மாதச் சம்பளம் என்று கிடையாது. ஆனால், சாப்பாடு போட்டுத் துணிமணி வாங்கிக் கொடுக்கப்படும். பார்ப்பதற்கு ஓரளவு சுமாராயிருந்தால் நல்லது.'

இதைப் படித்த ஒரு பெண், தான் விளம்பரம் செய்தவரை விவாகம் செய்து கொண்டு, மனைவியாக விரும்புவதாகக் கடிதம் எழுதினளாம்.

— என். ஆர்.

SI. TFN 15 TAM



புத்தம் புது தேயிலை

சுவையுள்ள தேயிலை

சிறந்த தேயிலை



# டாடா-ஃபின்லே

# தேயிலை

ஈடில்லாத தேயிலை!

பின்வரும் ஐந்து ரகங்களில்
கிடைக்கிறது:
ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்க்
லலித் இலைத் தேயிலை;
மிலாப் இலைத் தேயிலை;
பஹாதூர் தூள் தேயிலை;
ஷான் தூள் தேயிலை;



**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!

● மொரமொரப்பும்

● ருசியும் உள்ள

● போஷாக்கான




ஸாத்தே பிஸ்கட் அண்டு சாக்லெட் கம். லிட்., பூனா-2

heros' SBC-229TAM

# தாத்தாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதம்

ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்

பிரியமுள்ள தாத்தா,

தமிழ்நாட்டின் தலைசிறந்த நாவலாசிரியராகிய தங்களுடைய பேரனாகப் பிறப்பதற்குப் போன ஜன்மத்தில் நான் என்ன தவமிருந்தேனோ? 'பிரபல எழுத்தாளர் பீர்க்கங்காயின் பேரன் இவன்' என்று நண்பர்கள் என்னைப் புது ஆசாமிகளுக்கு அறிமுகப் படுத்துகையில், பெருமையால் மார்பகம் விம்முகிறது. செவிகளில் இன்பத்தேன் வந்து பாய்கிறது. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் 'நோபல் பரிசு' தங்களைத் தேடி வரும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.

ஆனால் வாழ்க்கையில் நான் அடைந்த தோல்விகள் அத்தனைக்கும் தங்கள் அமர சிருஷ்டிகள்தான் காரணம் என்பதை வருத்தத்துடன் குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.

ஐந்தாம் பாரம் படிக்கையில் வாத்தியார் என்னை 'மண்டு', 'மடையன்', 'சாம்பிராணி' என்றெல்லாம் அர்ச்சனை செய்ததற்குத் தங்கள் கதைகள்தான் காரணம். விஞ்ஞான விடைத் தாளில், மனிதனின் அவயவங்களை வரையும்போது, இதயத்தை நான் புது விதமாகத் தீட்டியிருந்தேனும்! 'இதயம் ஏண்டா தாமரைப் பூ மாதிரி இருக்கு?' என்று சீறினதுடன் என் செவியைப் பதம் பார்த்தார் நாவல் படித்துப் பழக்கமில்லாத வாத்தியார். தாத்தா! தங்கள் கதைகளில் எத்தனை தடவை இதயத்தைத் தாங்கள் 'இதய கமலம்' என்று எழுதி யிருக்கிறீர்கள்? கடைசியாக வெளியான 'கவிழ்ந்த கப்பல்' என்ற கதையில்கூடக் கதாநாயகி நிர்மலாவின் 'இதயத் தாமரை' விரிந்ததாகத் தாங்கள் எழுதியிருக்க வில்லையா? இப்பொழுதாவது சொல்லுங்கள். இதயம் தாமரை மாதிரி இருக்குமா, இல்லே, வேறு ஏதாவது பூ மாதிரி இருக்குமா என்று!



ரயில் பிரயாணம் செய்கையில் நான் அடி வாங்கினதும், தங்கள் கதைகளைப் படித்த குற்றத்தினால்தான். தங்களுடைய துப்பறியும் கதைகளில் வரும் தாடிகளில் தொண்ணூறு சத விகிதம் பொய்த் தாடிகள்தானே? கையை வைத்து இழுப்பதற்கு முன் கழன்று வந்துவிடுமே. அன்று என்னுடன் பிரயாணம் செய்த சாமியாரின் தாடியை நான் பலம் கொண்ட மட்டும் இழுத்தும் அது பிய்ந்து வர மறுத்தது. பாவிப்பயல்! என்ன பிசின் போட்டு அவ்வளவு ஜோராக ஒட்டியிருந்தானோ? ஆனால் நானா ஏமாந்து போவேன்? கதாசிரியர் பேரனிடம் அவன் ஜம்பம் சாயுமா? அவன் உண்மையில் அவன் இல்லே, வேறு ஆசாமி என்று எனக்குத் தெரியாதா என்ன? 'மயிலாப்பூர் மாயக் கொலை'யில் அந்தப் பொல்லாத பயல் பக்கிரி இப்படித்தானே பொய்த் தாடியுடன் வேறு பெயரைச் சொல்லிக் கொண்டு வண்டியில் பிரயாணம் செய்கிறான்? துப்பறியும் துளசிங்கம் செய்ததுபோல் தாடியில் தொங்கினேன் நான். அந்த மகா பாவி என் மண்டையில் குண்டாந் தடியினால் போட்டானே, பார்க்கலாம். புரியாத ஹிந்தியில் என்னென்னமோ திட்டித் தள்ளினான். தாத்தா! பொய்த் தாடி எது, நிஜத் தாடி எது என்று எப்படிக் கண்டுபிடிப்பது? துப்பறியும் துளசிங்கம் மட்டும் ஒவ்வொரு தடவையும் குறி தவறாமல் அடிப்பது எங்ஙனம்?

காதலில் நான் அடைந்த தோல்விக்கும் தங்கள் கதைகள்தான் காரணம். நர்ஸ் ஒருத்தியைச் சாலையில் சந்தித்தவுடனேயே என் உள்ளத்தில் 'தெய்வீகக் காதல்' பிறந்து விட்டது! தங்கள் கதாநாயகர்கள் செய்வது போல் அவளைப் பின்தொடர்ந்து சென்றேன். என்றாவது ஒரு நாள் தன் உள்ளத்திலே உத்வேகத்துடன் வீசிக் கொண்டிருக்கும் வாழ்க்கைப் புயலைப் பற்றிக் குறிப்பிடுவாள் என்று எதிர்பார்த்தேன். இதயக் கோயிலிலே அணையும் தறுவாயிலிருக்கும் அகல் விளக்கைத் தூண்டிவிடும்படி கோருவாள் என்று கனவு கண்டேன். கல்லும் கரையும் வண்ணம் எவனோ நயவஞ்சகன் இழைத்த கொடுமைகளை விவரிப்பாள் என்று மனப்பால் குடித்தேன். அவளுடைய வாழ்க்கைப் படகைத் தள்ளிவிடும் துடுப்பாக மாறுவதற்காகத் துடித்தேன். ஆனால் கற்பனை கொஞ்சமேனும் இல்லாத காரிகை என்னை இரண்டு தடியர்களுக்குக் காட்டிக் கொடுத்தாள். ''ஏண்டா! ரோமியோ, வம்பா பண்ணறே? உன்னே இஸ்துக்கினு போயி என்ன பண்றோம் பாரு. வாத்தியாரே, இவன் கையைப் பிடி'' என்று கூறி என்னை ஒரு நாவிதனின் கடைக்குப் பலவந்தமாக இழுத்துச் சென்றார்கள். அங்கே நான் என் கருள் சுருளான கேசத்தையும், அரும்பு மீசையையும் இழந்தேன். இப்பொழுது குல்லா வைத்துக் கொண்டு ஆபீசுக்குப் போகிறேன்! எனக்கு இந்தக் கதி நேர்ந்தது தங்கள் கதையால்தானே?

இருந்தும் நான் முயற்சியைக் கைவிடாது தங்கள் கதாநாயகன் கமலசேகரன் செய்தது போல் இரண்டு பெண்களை ஒரே சமயத்தில் காதலிக்கத் தொடங்கினேன். எனக்குத் தெரியாதா என்ன, ஒருத்திக்குக் கடைசியில் 'நிமோனியா ஜுரம்' வரும் என்று? அவளாகவே இன்னொருத்தியை மணந்துகொள்ளும்

படி எனக்குச் சம்மதம் தருவாளே! காலச்சக்கரம் அது பாட்டுக்குச் சுழன்று தள்ளிற்று. ஆனால் ஒரு கதாநாயகிக்கும் உடம்புக்கு வரவில்லை. சாதாரணமாகத் தங்கள் கதையில் குணவதியான கதாநாயகிதானே செத்துப் போவாள்? அழகியான கதாநாயகிதானே கதாநாயகனை மணந்து கொள்வாள்? எனவே குணவதியான கமலாவை அடிக்கடி மழையில் அழைத்துச் சென்று அவளுக்கு ஜலதோஷம் பிடிக்காதா. அது 'நிமோனியா'வாக மாறாதா என்று பிரார்த்தித்தேன். ஆனால் அவளுடைய எடை அதிகமாகிக் கொண்டு வந்ததே தவிர, இரண்டு கதாநாயகிகளின் அப்பாமார்களும் என்னைத் தொலைத்துக் கட்டிவிடுவதாகப் பயமுறுத்தத் தொடங்கினார்கள். தற்கொலை செய்துகொள்வது என்று நிர்மாணித்தேன். ஆனால் கடைசி நிமிஷத்தில் யாராவது காப்பாற்றிவிடுவார்களோ என்று அஞ்சி அந்த முயற்சியைக் கைவிட்டேன்.



தாத்தா! என்னுடைய கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் தங்கள் கதைகள்தான் என்பது இப்பொழுதாவது விளங்கிற்று? போனது போகட்டும். உயில் எழுதும் போதாவது கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். சாதாரணமாகத் தங்கள் கதைகளில் வரும் உயில்களெல்லாம் திடீரென்று காணாமல் போய்விடுமே. பிறகு அருவியமாக 'நல்ல வேலைக்காரனை'ச் சந்தேகிக்க வேண்டும். ஆயிரம் குளறுபடிகளுக்குப் பின்தான் உயில் கைக்கு வந்து சேரும்! இந்தக் கஷ்டமெல்லாம் என்னத்துக்கு? இப்பொழுதே உயிலை எழுதி என்னிடம் கொடுத்து விடுங்கள். நான் பத்திரமாகப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டி விடுகிறேன். மற்றபடி தங்களுக்குக் கிடைக்கவிருக்கும் நோபல் பரிசுத் தொகையில் எனக்குக் கொஞ்சம் கூட ஆசையில்லை. கதையில் வரும் தாத்தாக்களைப் போல் தாங்கள் அதை அநாதை ஆசிரமத்துக்கோ, விதவைகள் விடுதிக்கோ தாராளமாகத் தரலாம்.

அன்புள்ள பேரன்
**ஜிப்பி**

---

திருவள்ளூருக்கும் ரயில்வே ஸ்டேஷனுக்கும் சுமார் இரண்டு மைல்களுக்கு மேல் இருக்கும். அந்தக் காலத்தில் ஸ்டேஷனிலிருந்து ஊருக்குச் சிறு ரயில் பாதை போடப்பட்டிருந்ததாம். அந்தப் பாதையில் ரயில் ஓடியதாம் என்பதைவிட ஓட்டப் பட்டதாம் என்று கூறலாம். எஞ்சின் இல்லாமல் ரயில் பெட்டிகளின் முன் குதிரைகளைக் கட்டி ஓட்டினார்களாம். குதிரைகள் அவற்றை இழுத்துச் சென்றனவாம். இந்தத் தகவலை என் நண்பர் ஒருவர் எனக்குக் கூறினார். அவருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கும். அவருடைய தந்தை அந்த ரயிலில் பிரயாணம் செய்ததாகவும் கூறினார்.

குதிரை இழுத்த 'குப் குப்' வண்டி மட்டுமல்ல. மாடிழுத்த ரயில் வண்டிகளும் நம் நாட்டில் இயங்கி யிருக்கின்றன. பரோடா மன்னரான கெயிக்வார் மாடிழுக்கும் ரயில் வண்டிகளை நடத்தினார். நூறு வருடங்களுக்கு முன் பரோடாவில் (தமது சமஸ்தானம்) ரயில்பாதை போட்டு மாடிழுக்கும் ரயில்களை நடத்தினார்.

நாகரிகச் சிகரத்தின் உச்சியில் மனிதன் நிற்கும் இந்நூற்றாண்டில் நம் முன்னோர் கண்ட இந்தப் பழங் கதைகளைக் கேட்கச் சுவாரஸ்யமாகவும் விநோதமாகவும் இருக்கும்.




செங்கல்பட்டுக்கு அருகே புதிதாக ரயில் பாதை போடப்பட்டிருந்தது. சுற்றுப்புறப் பட்டி தொட்டிகளில் உள்ளவர்களெல்லாம் ரயில் எப்படி இருக்கும் என்று பார்ப்பதற்காகக் கட்டுச் சாதம் கட்டிக் கொண்டு வந்து ரயில் பாதையின் அருகே கூடியிருந்தனர். முதல் வண்டி வந்தது. ரயில் பாதையின் குறுக்கே நின்று அதை நிறுத்தினராம். எஞ்ஜினுக்குப் பூமாலை போட்டு, ஆடு கோழி யெல்லாம் பலியிட்டுத் தேங்காய் உடைத்துப் பூஜை செய்து பிறகுதான் ரயிலை விட்டனராம்.

இப்பொழுது மின்சார விசையில் வேகமாக ஓடும் ரயில்கள் எல்லாம் மனிதனின் தேவைக்காக இயங்கி வருகின்றன. மேனாட்டிலும் ஜப்பானிலும் ''மோனோ ரயில்'' என்ற புது வகை ரயில் இயங்கி வருகிறது. அதற்காகத் தனிப் பாதை போடப்பட்டிருக்கிறது. வாராவதி மாதிரி கட்டி அதன் மீது மோனோ ரயில் செல்லும். அது அதிக விபத்துக்கள் ஏற்படாதிருக்கும் வகையில் பக்கவாட்டிலும் சக்கரங்கள் பொருத்தப்பட்டுச் செலுத்தப்படுகிறது. மோனோ ரயில் பார்க்க விநோதமாயிருக்கும்.

**—தோ**

**ம**னோ வீட்டு வாசலில் வந்து நின்றாள். வேலியை ஒட்டினாற் போல் சாலை. பஸ் நிற்குமிடம். ஒரு பஸ் வந்தது. ஜனங்களைக் கொட்டி விட்டு, வாரிக் கொண்டு போயிற்று. மாலை வெய்யில் பொன்னாய் மாறிக் கொண்டிருந்தது. தென்றல் தவழ்ந்தது.

மடமடவென்று இடி இறங்குவது போன்ற சத்தம். வீட்டுக்குப் பக்கத்தில் இருந்த பெரிய மாமரத்தை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவளுக்குத் திருப்தி இல்லை அது. மரத்தை எடுத்தாயிற்று. கட்டடத்துக்கு இனி ஆபத்தில்லை. அறையில் அதிக வெளிச்சம். ஆனால் வீட்டையொட்டிய அந்தப் பசுமையான நிழல், குளிர்ந்த காற்றின் அசைவு, மாம்பூவின் மணம், கிளைகளில் அடையும் பறவைகளின் கூவல், எதுவுமே இல்லை இனி. அந்த உயிர்களுக்கு இடம் தந்துகொண்டிருந்த மரம் உயிர் வாழவில்லையே இனி?

அந்த வீட்டின் கம்பீரமான தோற்றத்துக்குப் போட்டி இடுவதைப் போல் அந்த மரம். மேலே திறந்த மாடியின் மேல் குடை விரிப்பது போல் அதன் கிளைகள் எட்டிப் படர்ந்திருந்தன. மேற்குப்புறம் சுவரை ஒட்டி அணைத்த அதன் நிழல். மண்ணில் பரவிய வேர்கள் கட்டடத்தைக் கீழே துளைக்க ஆரம்பித்துவிட்டன. அதுதான் மரத்தை வெட்டுவதற்குக் காரணமாகி விட்டது. மரம் வேரினால் பிழைத்தது உண்மையா? வேரினால் அழிந்தது மெய்யா?

வீட்டை வாங்கும் போதே தரகர் சொன்னார். அவர்களைச் சுற்றிக் காட்டி விட்டு. "அந்தக் காலத்து வீடு. உறுதியான கட்டடம். கொஞ்சம் பழசு என்பதனால் விலை குறைவாக இருக்கிறது. தவிர அந்த அம்மாளுக்கு இப்போது பணமுடை. அதனால் விற்கிறாள். இல்லாவிட்டால் ஒருகாலும் பெயராது."

அவர் சொன்னது உண்மைதான் என்று தோன்றியது; அந்தக் கிழவியோடு பேசிக் கொண்டிருந்தபோது. கிழவிக்கு உடல் சரியில்லை. கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தாள். அவர்களைக் கண்டதும் சற்று நிமிர்ந்து தலையணையை முட்டுக் கொடுத்துக் கொண்டு பேசினாள். மூப்புத் தட்டிய முகம். ஆனால் பேச்சில் தளர்ச்சியில்லை.

"நீங்கள் வீட்டைப் பார்த்தீர்களா?" என்று கேட்டாள்.

"பார்த்தேன். எங்களுக்குப் பிடித்திருக்கிறது."

"நான் கேட்கும் விலையைக் கொடுக்க முடியுமா உங்களால்?"

"நீங்கள் நியாயமான விலைதான் சொல்வீர்கள் என்று எனக்குத் தெரியும்" என்று சிரித்தாள் மனோ. ஆனால் கிழவி அந்தச் சாதுரியப் பேச்சுக்கு அசைந்து கொடுக்கவில்லை.

"இந்த வீடு ஊருக்கு வெளியில் இருக்கிறது. உங்களுக்கு அசௌகரியமாக இருக்கக் கூடும். தவிர உங்கள் இரண்டு பேருக்கு அத்தனை பெரிய வீடு எதற்கு?"

"எங்களுக்கு ஊரின் சந்தடி இல்லாத இடம்தான் தேவை. தவிர அவருக்குப் போய் வரக் கம்பெனியில் கார் கொடுக்கிறார்கள். அதனால் போக்குவரத்துக்கு அசௌகரியம் இல்லை. எங்களுக்குப் பெரிய வீடும் தேவை தான். மூன்று குழந்தைகள். வளர்ந்து கொண்டு வருகிறவர்கள்—"

"அப்படியா?"

"நீங்கள் வீட்டுக்கு வந்து பாருங்கள். உங்கள் வீட்டில் குழந்தைகளும் கலகலப்புமாக அந்தச் சூழலில் உங்கள் உடம்புகூட நன்றாகத் தேறிவிடும்!"

மனோவின் பேச்சின் நயம் அவள் மனத்தை இளக்கியிருக்கலாம். ஆனால் அதற்காக விலை ஒன்றும் குறையவில்லை. முழுப் பணமாக முப்பதாயிரம் ரூபாய். பாதிக்கு மேல் கம்பெனியில் கடனாக வாங்க வேண்டியிருந்தது.

சொந்த வீட்டில் வந்து குடியேறிவிட்ட மகிழ்ச்சியில் அந்தக் கடனின் சுமைகூட இறங்கியது போல் இருந்தது. ஒவ்வோர் அறையிலும் சாமான்களையும், நாற்காலி சோபாக்களையும், விரிப்புக்களையும், அலங்காரப் பொருள்களையும் விதம்விதமாக வைத்துப் பார்க்க அவளுக்குப் பொழுது சரியாயிருந்தது. புதிதாக வைத்த மின் விசிறி, காஸ் அடுப்பு, குளிர் சாதனப் பெட்டி, இவைகளைப் பொருத்துவதில், புத்தக அலமாரி, குளியல் அறையில் தானே சூடாகும் வெந்நீர்த் தொட்டி, கிணற்றுக்குப் பம்பு இவைகளை அமைப்பதில் ராமுவுக்கு நேரம் செலவழிந்தது.

குழந்தைகளின் கும்மாளத்துக்குக் கேட்க வேண்டாம். தோட்டம், முன்புறம் விளையாட்டுக்கு ஏற்ற திறந்த வெளி, மரக் கிளைகள் படியும் திறந்த மேல் மாடி, வாசலில் வந்து




நிற்கும் பஸ் — இப்படி ஒவ்வொன்றிலும் ஒரு புதுமையின் வியப்பு கலந்த மகிழ்ச்சி; பெரியவன் சேகரிலிருந்து கடைக்குட்டி ராஜிவரை.

வீட்டில் அவர்கள் மாறுதல்களும் செய்யாமல் இல்லை. முன் அறையில் சுவரில் புதிதாகப் பொருத்திய பீரோ; அதில் கண் பார்வைக்கு அலங்காரமாக அடுக்கி வைத்த புத்தகங்கள். படுக்கை அறைக்கும், ஹாலுக்கும் கண்ணாம் புக்குப் பதிலாக அடித்த பசுமையான நிற டிஸ்டெம்பர். ஹாலுக்கு மட்டும் தளத்தைப் பெயர்த்து விட்டுச் சலவைக் கல் பதித்த தரை. குளியல் அறையில் தண்ணீர் நிறைக்கத் தொட்டி. பாதி நேரமும் ராஜிக்கு அங்கேதான் வேலை.

ஆனால் வீட்டை ஒட்டிய அந்த மரம் பரப்பிய





## எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

நிழல் மட்டும் அப்படியே கலையாமல் இருந்தது. முன் அறையில் அதன் இருள் படர்ந்து நின்றபோதுகூட. வெளிற் காலத்தில் அது தெரியவில்லை. மழைக் காலம் வந்ததும் ஒளி சுருங்கியபோது அந்த இருள் முதிர ஆரம்பித்தது. மரத்தின் கிளைகளையாவது வெட்டலாமா என்று யோசித்தது அப்போதுதான்.

மனோ அந்தக் கிழவியைப் போய்ப் பார்த்துவிட்டு வர நினைத்தாள். அது அவசியம் என்பது இல்லை. கிழவியின் வாழ்க்கையில் ஐம்பது ஆண்டுகளைப் பிடித்துக் கொண்ட இடம் அது. அந்தத் தொடர்பின் நினைவுகளை அவளால் அவ்வளவு எளிதில் அறுத்துக் கொண்டு விட முடியாது. அதைப் பிறருக்கு விற்றுவிட நேர்ந்த நிலையில் நெஞ்சில் எழும் உணர்ச்சி, கொஞ்சம் வடிந்து அமைதி ஏற்படலாம்; அவளைப் பார்த்து மனம் விட்டுப்பேசும் போது. மனோவின் நினைப்புத்தான் அது. கிழவி எண்ணியது எப்படியோ?

நெஞ்சில் இதயம் கழைக்கொடியாய் ஆட, அந்த வீட்டுப் படி ஏறினாள். வாசற் கதவு திறந்துதான் இருந்தது. இருளின் விழியாய் ஒரு விளக்கு எங்கோ மினுக்கிற்று.

கிழவி அவளை வரவேற்ற விதத்தில் உணர்ச்சிகளின் சூடு எதுவும் இல்லை. பேச்சிலும்கூட ஒட்டாத தனிமை. மனோ என்னென்னவோ சொன்னாள். வீட்டைப் பற்றி; அதில் செய்திருக்கும் மாறுதல்களைப் பற்றி; புதிதாக அமைத்திருக்கும் அலங்காரங்களைப் பற்றி; குழந்தைகள் விளையாடி அனுபவிக்கும் சூழ்நிலையைப் பற்றி. கிழவியின் முகத்தில் துளி அசைவில்லை. கல்லால் அடித்த மாதிரி இருந்தது.

திரும்பி வந்தபோது அந்த நினைவுகளும் துணை நடந்து வந்தன. கிழவி தன்னை எப்படிப் பார்த்திருப்பாள்? அவளுடைய வீட்டை எடுத்துக் கொண்டு விட்ட பெண்ணாகவா? வேறு எப்படி? வாழ்க்கையிலும் அவளுடைய இடம் இரண்டாவதுதான். ராமுவின் வாழ்க்கையை முதலில் பகிர்ந்து கொண்டவள் லலிதா.

மணம் செய்துகொண்ட போது பிறரும் நினைத்ததுண்டு அதைப் பற்றி. ஆனால் அவள் கவலைப்படவில்லை. முதல் பையன் சேகர் அப்போது கைக் குழந்தை. அவளைச் சித்தி என்று கூப்பிட்டதில்லை. மற்ற இரு குழந்தைகளுக்கும் இருப்பது போல அவனுக்கும் அவள் அம்மாவேதான். ராமு தன்னை மணக்க விரும்பியது அவளுக்குத் தெரியும். எதற்காக என்று அவள் சிந்தித்துப் பார்த்ததில்லை. குழந்தையின் வளர்ப்புப் பற்றிய அக்கறைக்கு அதில் முதல் இடம் இருந்திருந்தால் அதை அவள் பாராட்டிக் கொண்டதில்லை. தான் அவனிடம் வைத்திருந்த ஆழ்ந்த அன்பை—

வழிபாட்டின் எல்லையையே எட்டிவிட்டது என்று சொல்லக் கூடியது அது — அவன் தன்னிடம் காட்ட வேண்டும் என்று அவள் எண்ணி எதிர்பார்த்ததில்லை.

அமைதியான வாழ்க்கை, நிச்சயமான எதிர்காலம், மேடு பள்ளங்களின் சலிப்பில்லாத வளம் நிறைந்த குடித்தனம். இவற்றில் மனம் தன்னைத் திருப்தி செய்து கொண்டதுண்டு. கூடிய வரை அந்தப் பழைய நினைவுகளைக் கிளற மாட்டாள். அவன் பார்வையில், பேச்சில், தன் தோள்களை அழுத்தும் விரல்களின் ஸ்பரிசத்தில், அவற்றை ஏற்கனவே அனுபவித்திருக்கக் கூடிய உருவத்தின் அடையாளத்தைக் காண முயல மாட்டாள். ஆனாலும் அந்த நினைவின் சாயையாகப் பேச்சில் எப்படியோ தட்டுப்பட்டு விடும் ராமுவுக்கு.

‘‘நம்முடைய தோட்டத்து மாம்பழம்’’ என்று பழத்தைத் தோல் சீவிக் கட்டமிட்டு அரிந்து தட்டில் வைத்து நீட்டினாள்.

‘‘நீ எடுத்துக் கொண்டாயோ?’’

‘‘குழந்தைகள் சாப்பிட்டாயிற்று’’ என்று தூங்கிவிட்ட குழந்தைகளை ஓரக்கண்ணால் பார்த்தபடி சொன்னாள்.

‘‘அப்போ இதில் உனக்கும் பங்கு’’ என்று அவளை இழுத்து அணைத்தாற்போல் இருத்திக் கொண்டான். இரவின் தொடக்கம். அதன் தனிமை தரும் மயக்கம். அவன் முகம் அவள் கூந்தல் மேல் அழுந்திற்று. தலைப் பூ கசங்காமல் எடுத்து வைத்தாயிற்று. ஆயினும் அதன் மணம் மாறவில்லை. அதையா முகர்ந்து அனுபவித்துக் கொண்டிருந்தான் ராமு.....? இல்லையெனில் அவன் தேடிய நினைவுகள் எவை ?

‘‘அவளுக்கும் பூ என்றால் பிடிக்கும். சொந்த வீடு..... தோட்டம்.... பூஞ்செடிகள் பழங்கள் குலுங்கும் மரம்..... இப்படி இருக்க வேண்டும் என்று அவளுக்குக் கொள்ளை ஆசை. தலைக்கு வைக்கப் பறித்துக் கொள்வதானாலும், பக்கத்து வீட்டுக் குழந்தைகளுக்குத் தரையில் சிதறிய பவளமல்லிப் பூக்களைத் திரட்டித் தருவதானாலும், கைநிறையப் பூக்களைக் குவிப்பதில் அவளுக்கு ஓர் ஆசை.’’

தான் அனுபவிப்பதைவிட, லலிதா அனுபவிக்காமல் இறந்து விட்டதை அவன் உணர்ந்த துடிப்பு. அதில் நொந்த குரல். அவன் அநுபவித்தவை யாவும் அவருக்குக் கிடைத்தனவா ? பூவின் மணத்தை அவன் பறித்துக் கொண்டு போய் விட்டான். அவள் கையில் தட்டில் சிந்தாமல் ஜாக்கிரதையாகப் பிடித்துவைத்திருப்பது கனியின் துண்டங்கள்.

‘‘உனக்குத் தெரியும் இல்லை..... அந்த விபத்து நிகழ்ந்தவிதம் ?’’

தலையை அசைத்துக் கொண்டாள். அவன் முன்பே ஒரு முறை சொல்லியிருக்கிறான். இருவருமாகப் போய்க் கொண்டிருந்த ஸ்கூட்டர் சாலையிலிருந்து பிரிந்து அம்பு வேகத்தில் இறங்கிற்று. பிடிக்கு நிற்காமல். தலையை விரித்துப் பேயாட்டம் ஆடியபடி முன்சாய்ந்த மரத்தை நோக்கி விரைந்த கட்டுக்கடங்காத வேகம். கீழே தூக்கி எறிந்து விழுந்தவளின் மல்லாந்த பூச்சி போன்ற தத்தளிப்பு. சிலுவையாக விரிந்து கிடந்த கைகள்; மூக்கிலும் வாயிலும் காதுகளிலும் வழிந்த இரத்த நூல். அப்புறம் அவனுக்கு நினைவில்லை. அவளுக்கும் நினைவு தப்பி விட்டது.

‘‘அவளுக்கு மிகவும் பிடித்தது மாம்பழம்...... கடைசியாக...... அந்த மரம்— அதுவும் ஒரு மாமரம்தான்!’’

வீட்டை ஒட்டிக் கிளைகளை விரித்து நின்ற மாமரத்தைப் பார்க்கும் போதெல்லாம் அவன் நினைவில் எழுந்த காட்சி எது? அந்தப் பழத்தின் இனிமை போன்ற இன்பம் குலவிய நாட்களா? கறுத்துப் பட்டை முதிர்ந்து நின்ற அடி மரத்தில், அவன் வாழ்க்கையை வழிமறித்துவிட்ட கொடுமையின் ஞாபகமா?

விளக்கணைந்து ராமு தூங்கியான பிறகும் அவள் தூங்க வில்லை.

ராமுவின் அந்தரங்கம் முழுவதும் அவள் சொத்தா ? அவனிடம் அவள் என்ன எதிர்பார்த்தாள்? எதை எதிர்பார்க்க அவளுக்கு உரிமை உண்டு? ஆயினும் அவைகளுக்குப் பதிலும் சமாதானமும் கிடைக்காததால், வேதனை குறையவில்லை. வாழ்ந்துகொண்டே இருக்கும் நினைவுகளுடன் வாழும் அனுபவம்— ஒன்றாக இருந்து கொண்டே இரண்டாக வெட்டப்பட்டுத் துடிப்பதை உணரும் வலி— பொறுத்துக் கொள்ளக் கூடியதாக இல்லை.

‘‘மரத்தின் வேர் கட்டடத்தை அசைக்க ஆரம்பிக்கிறது என்று சொல்கிறார்கள். மரத்தை வெட்டி விடலாம் என்று நினைக்கிறேன். வீட்டுக்குள் இந்த இருளும் இருக்காது. என்ன சொல்கிறாய் ?’’

அவள் மறுக்கவில்லை. அந்த நினைவின் வேர் அவள் நெஞ்சையும் இனி அசைக்காது. நெஞ்சில் அதன் இருளும் படியாது. அவளுக்குச் சம்மதமின்றி வேறென்ன? அதுவா அவள் உடனே ஒப்புக் கொண்டதன் இரகசியம்? தனக்குள்ளே ஆராய்ந்து பார்த்தபடி தனியே உட்கார்ந்திருந்த போது அப்படித்தான் தோன்றியது.

மறு நாள். குழந்தைகள் பள்ளிக்கூடம் போய் விட்டார்கள். ராமு காரியாலயத்துக்குப் போயாயிற்று. பிற்பகலின் மருட்டலில் வாசற் கதவின் தட்டல். அவள் எழுந்து போய்க் கதவைத் திறந்தாள். வெளியே கிழவி நின்று கொண்டிருந்தாள்.

‘‘என்ன அக்கிரமம் இது?’’

‘‘என்ன ஆயிற்று அம்மா?’’

‘‘என்னவா? அந்தப் பச்சை மரத்தை வெட்டித் தள்ளியதைத்தான் சொல்கிறேன்.’’

‘‘நீங்கள் இப்படிக் கலங்கக் கூடாது. கட்டடத்துக்கு மரத்தின் வேரினால் ஆபத்து என்றுதான் அதை வெட்டியிருக்கிறோம். வீட்டைச் சொந்தமாக வாங்கி விட்ட பிறகு அந்த உரிமைகூட இல்லையா எங்களுக்கு?’’

‘‘சொல்லு. நன்றாகச் சொல்லு. உங்களுக்கு விற்றது என் பிசகு. அதற்குப் பிறகு இதை யெல்லாம் பேசி என்ன பிரயோசனம்? உனக்கு எப்படித் தெரியும் அந்த மரத்தின் அருமை? அது அவர் கையால் வைத்துப் பயிராக்கிய ஒட்டுச் செடி!’’

‘‘அந்த மரம் சற்றுத் தள்ளி இருந்திருந்தால் இந்த அவசியமே இருந்திருக்காது.’’

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து
## அந்த அதிகமான வெண்மையைப்
## பாருங்கள்!





**இவ்விதம் சோதியுங்கள்**

1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா!
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

MTF/LP/3-63-TM



சென்னை K. ராமஸ்வாமி அவர்கள் குமாரி டாக்டர் உமா, M. B. B. S.,க்கும், பாலக்காடு ஸ்ரீ C. S. V. ரமணி காரிக்காருடைய குமாரன் டாக்டர் C. R. ராமச்சந்திரன் B.Sc.; M.B.B.S., அவர்களுக்கும்சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!


## உங்கள சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன; இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம்(Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம்(Nixoderm) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.





# தலைவலிக்கு

# 'ஆஸ்ப்ரோ'




## 'ஆஸ்ப்ரோ'வைவிடப் பத்திரமான - சிறந்த நிவாரணி எதுவுமே இல்லை

அமெரிக்க அரசாங்கத்தினரின் ஆதரவில் நடந்த முதன்மையான வலி நிவாரணிகளின் மீது நடத்தப்பட்ட பரிசோதனையில் 'ஆஸ்ப்ரோ' வில் இருக்கும் மருந்துக் கலவையை விட அதிகமான, அபாயமற்ற நிவாரணம் அளிப்பது வேறெதுவுமில்லை என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஒரே அசல் மருந்தான 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்குத் துரித நிவாரணமளிக்க உலகெங்கும் வைத்தியர்களால் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எவ்விதமான அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகையால் நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கப்படக்கூடியது. குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ' உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலி நிவாரணி. 'ஆஸ்ப்ரோ'வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு [illegible]

A.G. 164 TAP

"நீ ஒன்றும் சொல்லாதே. உனக்கு அதன் அருமை தெரிய வில்லை."

"ஏன்? ஏன் அம்மா? நீங்கள் இப்படி வருத்தப்படக் கூடாது—"

"ப்ஸ" என்று கிழவி முந்தானையால் கண்ணை ஒற்றிக் கொண்டாள். "அவர் ஒரு டாக்டர். முதல் யுத்தம் முடிந்த சமயம் அது. அங்கே போவேன் என்று போனார். திரும்பவேயில்லை. அவர் என்னோடு இருந்தது இரண்டு வருஷங்களுக்கு மேல் இல்லை. அவர் ஞாபகமாக எனக்கு இருந்தது இந்த மரம். நான் உயிரோடு இருக்கும் வரை அதைப் பார்த்துக் கொண்டிருப்பேன் என்று நினைத்தேன்...... கொடுத்து வைக்க வில்லை."

மனோ கிழே காலை மடித்து உட்கார்ந்து கொண்டாள். அவள் நெஞ்சிலும் வேதனை படர்ந்தது. அந்த மரம் அவர்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எப்படி வெவ்வேறு விதமான எண்ண அலைகளை எழுப்பியிருக்கிறது? தன் ஞாபகத்தைத் தூண்ட இனி அது இல்லை என்று ராமுவும், தானும்கூடத் திருப்தி அடைந்திருக்கலாம். ஆனால் அது இல்லை என்று நொந்து வாடும் இந்த நெஞ்சம்—

"நீங்கள் மனம் விட்டுப் போகாதீர்கள் அம்மா. எனக்கு நீங்கள் இவ்வளவு தூரம் வருந்துவீர்கள் என்று தெரியாது. நான் மரத்தை அப்புறப்படுத்தியிருக்கலாம். ஆனால் அது மறைந்துவிட வில்லை. மாம்பழத்தின்கொட்டையிலிருந்து செடிகளைத் தொட்டியில் பயிராக்கி வைத்திருக்கிறேன். அவைகளை வேலி ஓரமாக நடப்போகிறேன்; நீங்கள் தினந்தோறும் போகும் போது பார்க்கலாம். அவை உங்கள் மரங்கள்தாம். உங்கள் கணவர் அருமையாகக் கொண்டு வந்தவைதாம்."

சட்டென்று கிழவியின் முகம் மாறியது. கன்னத்தில் கண்ணீர் குளிரத் தலை நிமிர்கையில் எண்ணங்கள் இருவருக்குமிடையே ஊமைச் சிரிப்பாய் நின்றன.

"ஏதோ பேசிவிட்டேன். விட்டுவிடு. எனக்கு ஏதோ ஒரு வேகம். உன்னிடம் சொன்னால் என்ன? அவர் தம் ஞாபகமாக எனக்கு எதுவுமே கொடுத்ததில்லை. எங்கள் கலியாணமே அவர் என் சொத்துக்கு ஆசைப்பட்டுச் செய்து கொண்டதுதான். அதனால்தான் அவரால் என்னைத் திருப்திப் படுத்த முடியவில்லை. அவரே தாமாகவேதான் யுத்தத்துக்குப்



## விசித்திரப் பேட்டி



"நான் பத்திரிகைநிருபர். உங்களைப் பேட்டி கண்டு போகலாமென்று வந்தேன்."

"அப்படியா? வாங்க!"

"அந்தக் காலத்தில் நீங்கள் பால் கொடுப்பதற்கும் இப்பொழுது கொடுப்பதற்கும் அளவில் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது. இல்லையா?"

"அப்ப பசு என்றால் எல்லோருக்கும் அன்பு சுரந்தது. பாலும் சுரந்தது. முன்பெல்லாம் ஏதோ காலாரப் புல் பூண்டுகளை மேய்ந்து விட்டு வருவோம்; பால் கொடுப்போம்! கன்று குடித்தது போக வீட்டுக்குப் பால் கொடுத்தோம். பாலைக் குடித்துத் திளைத்த கன்று துள்ளிக் குதித்து ஓடி விளையாடுவதைப் பார்த்துக் களித்தோம். தாய் வேறு கன்று வேறு என்று பிரிக்கமுடியாத காலம். இப்ப எப்படி ஆகிவிட்டது, பார்த்தீர்களா? தலைக் கொம்பிலேயே என் கன்றைக் கட்டித் தொங்க விடுகிறார்கள்!"

"ஐயையோ! அதைக் காட்டித்தான் பாலைக் கறக்கிறாங்களா?"

"ஆமாம்! ஆனாலும் வாய்க்கு எட்டுகிற மாதிரி அதைக் காட்டுவதில்லை! காட்டினால் நான் எங்கே தோலினுள் அடைக்கப்பட்டிருக்கும் வைக்கோலைத் தின்றுவிடுவேன்னு அவர்களுக்குப் பயம்!"

"அப்படியும் நீங்கள் தின்றுவிடுவீர்களா?"

"ஏனய்யா தின்ன மாட்டோம்? நீங்க சுத்த அஞ்ஞானம் பிடித்தவரா யிருக்கேளே. தாய்மையை ஒருநாளும் ஏமாற்ற முடியாது. இதை என்னவோ நிஜக் கன்று என்று எண்ணி நாங்க ஏமாந்து போவதில்லை என்று பால்காரர்களுக்கே நன்றாகத் தெரியும். நாங்கள் தீனி இல்லாமல் காயற காய்ச்சலில் அகப்பட்டதைத் தின்றுவிடுவோம் என்று நினைக்கிறதிலே என்ன தப்பு?"

"சரி! ஆண்கள் என்ன கொடுமை செய்தாலும், வருங்காலத்தில் பெண் மக்களேனும் இன்றுபோல் உங்களைச் சுற்றி வந்து குங்குமமிட்டு நமஸ்கரிப்பார்களா?"

"நிச்சயமா வழிபடுவார்கள்."

"அதெப்படிச் சொல்கிறீர்கள்?"

"நானும் ஒரு பெண் அல்லவா? அதனால் சொல்கிறேன். ஆனால் அவர்கள்வழிபடுவதற்கு வசதியாக நாங்கள் ஜீவித்திருப்போமா என்று சந்தேகம்."

"கன்று குடிக்கும் பாலை மிச்சப்படுத்தி விற்கலாம் என்பதற்காகக் கன்றுகளையே விற்று விடுகின்றனர். தோலுக்காகவும் உணவுக்காகவும் அவை நம்மை விட்டுப் போனால், மாடு ஏதுங்க?"

"அப்புறம் பாலுக்கு என்ன பண்றதுன்னு நீங்க சங்கடப்படறேன்னு நினைக்கிறேன். கவலைப்படாதீங்க. மாடெல்லாம் போன பிறகு 'பிளாஸ்டிக் பாலித்தீன்' மாடுகள் விற்கப்படும். உள்ளே பால் உண்டாக்கும் யந்திரம் இருக்கும். ஒரு ஸ்விட்சைப் போட்டவுடன் புல், வைக்கோல், புண்ணாக்கு, பருத்திக்கொட்டை இவை இயந்திரத்தின் உள்ளே போய்ப் பாலாக மாறிவிடும். காய்ச்சிய சூடான செயற்கைப் பசும்பால் விற்கப்படும்!"

போகிறேன் என்று எழுதிக் கொடுத்தார்; என்னைவிட்டுப் போய்விடலாமென்று.''

''அப்படிச் சொல்லக் கூடாது. அவர் தம் கடமையைச் செய்ய எண்ணியிருக்கலாம்.''

''எப்படிச் சொல்கிறாய்?''

''அவர் ஒரு டாக்டர். யுத்தத்தில் எவ்வளவோ பேர் உயிர் இழக்கும் இடத்தில், உயிர்கள் மயிரிழையில் காப்பாற்றப்படவேண்டிய இடத்தில் அவருடைய தேவை எவ்வளவோ அதிகம் என்பதை அவர் உணர்ந்திருக்கலாம். அதில் என்ன தப்பு? மனிதனுக்கு மனிதன் செய்ய வேண்டியதுதானே அது கருணையும் பச்சாத்தாபமும்?''

''நீ சொல்வது எனக்குப் புரிகிறது......''

''அப்படியானால் அவருக்கு நீங்கள் எப்படி இதைப் போல ஒரு நினைப்பைக் கற்பிக்கலாம்? அவர் உங்களை நேசிக்கவில்லை என்று எப்படிச் சொல்லலாம்? அவர் உங்களை மணந்து கொண்டது உங்கள் சொத்துக்காகவே இருக்கட்டும். அதில் என்ன தப்பு? தன் தொழிலும் அறிவு நுட்பமும் மக்களுக்குப் பயன்பட அவருக்குச் செலவுக்கு உங்கள் சொத்து தேவையாக இருந்திருக்கலாம். அப்படி அவர் கேட்டிருந்தால் நீங்கள் கொடுத்திருக்க மாட்டீர்களா, இப்போது எனக்குக் கொடுத்ததைப் போல?''

''கொடுத்திருப்பேன். அவருக்கு இல்லாதது எனக்கு எதற்கு?''

''அப்படியானால் நீங்கள் மறுபடியும் என் சொத்து என்று சொல்லக் கூடாது. அது உங்கள் சொத்து. இந்த வீடு மட்டுமல்ல; விழுந்து விட்ட அந்த மரமும்கூட. அவர் ஞாபகம் அவைகளில் இல்லை. உங்கள் மனத்தில்தான் இருக்கிறது. அவர் உங்களை என்றும் பிரியமாக வைத்துக் கொண்டிருந்திருப்பார் என்று நினைப்பதில்தான் இருக்கிறது. அந்த நினைவு உறுதியாக இருக்கும் வரை மரம் விழுந்ததற்காக நீங்கள் வருந்த மாட்டீர்கள். அந்த உறுதியை இழந்து விட்டால் மரம் உயிருடன் இருந்தும் பிரயோசனமில்லை.''

''எவ்வளவு நன்றாகச் சொல்கிறாய்? எனக்கு நெஞ்சில் ஏதோ விளக்கேற்றி வைத்த மாதிரியிருக்கிறது. என் வயது உனக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால் உன் அநுபவம் எனக்கு இல்லை'' என்றாள் கிழவி.

மனோ தலையைக் குனிந்து கொண்டாள். உணர்ச்சி பொங்கிய வேகத்தில் அவள் கண்களில் சரசர வென்று நிறைந்தது. கீழே மடித்து ஊன்றிய புறங்கையில் நீர்த் துளி விழுந்து தெறித்தது. தன் மனத்தையேதானா எடுத்துச் சொன்னாள் அந்தப் பேச்சில்?

''சொல்லப் போனால் நானும் ஓர் ஒட்டுச் செடிதான் அம்மா. இங்கே வளருவேன் என்ற நம்பிக்கையில் எடுத்து வைத்துக் கொண்ட வாழ்க்கைதான் அது. எனக்கு முன்பு அவர் வாழ்க்கையில் ஏற்கனவே ஒரு பெண் இருந்தாள். அவர் மணந்து கொண்டது அவளுடைய குழந்தையின் எதிர்காலத்தை உத்தேசித்தே யிருக்கலாம். ஆனால் நான் அப்படிச் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. அவர் என்னிடம் காட்டும் அன்புக்கு அவர் என்னிடம் அந்தப் பிரதியை எதிர் பார்த்தாரென்றால் அது எனக்குத் திருப்தியே. அவருடைய அன்பை நான் அவருடைய குழந்தைகளின் மூலம் உணருகிறேன். என்னைச் சுற்றிலும் அந்த அன்பின் இதம் எனக்குத் தெரிகிறது. அது எனக்குப் போதும். அதனால் தான், நான் உணர்ந்ததையேதான் உங்களுக்கும் சொன்னேன். அன்புக்கு மூலமும் காரணமும் கேட்கத் தேவையில்லை. அப்படித் தேடினால் அதன் உயிர்ப்பு நிற்காது.''

கிழவி நிமிர்ந்து பார்த்தாள். அவளைவிட எவ்வளவோ இளையவள். அவளுக்குத் தேறுதல் சொல்கிறாள் அந்தப் பெண்; அவளைவிட நன்றாக வாழ்க்கையைப் புரிந்து கொண்டிருப்பதால். இருவர் கதையும் ஒரு கதைதான். உலகக் குடும்பத்தின் ஒரே கதை.

எழுந்து நின்றாள். அவள் மனம் எவ்வளவோ இலேசாகியிருந்தது இப்போது:

''நான் வருகிறேன்.''

''போய் வாருங்கள் அம்மா. அடுத்த தடவை வரும்போது வேலி ஓரம் பாருங்கள். மாஞ்செடிகள் உங்களைத் தலையை ஆட்டி வரவேற்கும் !''

கிழவி சிரித்துக் கொண்டாள்.

அவள் மெதுவாக நடந்து போய்க் கேட்டைச் சாத்திக் கொண்டு சாலையில் இறங்கும் வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்பினாள் மனோ. அவள் மனத்தில் எதையோ சாதித்து விட்ட நினைவு.

முன்புறம் மாங்கன்றுகளை வைத்து வளர்க்க வேண்டும். கிழவி அந்தப்புறம் வரும்போது, வேலிக்கப்பால் ஒரு கணம் தயங்கி நின்று பார்த்தால், செடிகள் தெரியவேண்டும். அந்தப் பார்வையில், நினைவின் துளிர்ப்பில், அந்த நெஞ்சிலும் கனிவு இருக்கும்.

அவை மரமாகி வளர்ந்து கனிகள் கொடுக்கும் வரை கிழவி உயிருடன் இருக்க முடியுமா? இல்லா விட்டால் என்ன? அந்த ஞாபகம் அவற்றில் கனிந்து நிற்குமே ? அந்த நினைவு மறையாமல் வாழும் அல்லவா?

ஒரு நாள் வீட்டைச் சுற்றிச் சுவை தரும் கனிகளோடு மரங்கள் உயர்ந்து நின்று காற்றில் அசையும். அப்போது அவள் அந்தக் கிழவியைப் போல முதிர்ந்து விட்டிருப்பாள். காற்றில் உதிரும் சருகுகளை மிதித்து நடக்கும் போது அவள் மனத்தில் இந்த இளமை நினைவுகள் திரும்பும். அப்போது அவள் மனத்தில் கிழவியின் ஞாபகத்தோடு இன்னொன்றும் துளிர்க்கும்.

அவருடைய வாழ்க்கையே, இன்னொரு வேர் வைத்த செடியின் வளர்ச்சி அல்லவா? அந்தச் செடியின் கனியைத்தானே அவள் அநுபவிக்கிறாள் ? மலர்ந்து கனியாமல் உதிர்ந்து விட்ட அந்தப் பெண்ணின் நினைவுக்கு அவள் அஞ்சலி என்ன? அவள் இப்போது ஊன்றும் விதை. அன்பும் நீரும் சொரிந்து வளர்க்கும் செடி. நாளை வளர்ந்து பூத்துக் கனியப் போகும் இந்த மரங்கள். அவைதான் அவளுக்கு மனோ செலுத்தும் வழிபாடு.

தன்னையறியாது தானே மனத்தில் வரித்த பாவனையை வணங்கினாள். உள்ளிருந்து குழந்தையின் மழலைக் குரல் கேட்டது.

# கூந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது

## ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயில்

கூந்தலை மழமழப்பாகவும் கவர்ச்சியாகவும் ஆக்குகிறது





ஸ்வஸ்திக் ஹேர்
ஸ்டைல் 'மயூர்'

சிறிதளவு ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயிலைத் தடவி, கூந்தலை வாரி மூன்று கால்களாக்கிக்கொண்டு நடுப்பாகத்தைச் சுழற்றி ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போடவும். இரு பகுதிகளையும், எதிரும் புதிருமாகக் கொண்டையைச் சுற்றிச் சொருகிவிடவும். பொருத்தமான அணிகளினால் கொண்டையை அலங்கரித்துக்கொள்ளவும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.

## ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்










சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்பீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை ஊட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டில கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

JWT.WL. 2245 (a)

# சிறப்பு மலரும் சினிமா விமரிசனமும்

**கல்கியின் ரயில்வே மலரைப் பார்த்தேன்.** தமிழகம், பாரதம், வெளிநாடு எங்கும் சுற்றி வந்த பெருமிதம் ஏற்பட்டது. ரயில்வே சம்பந்தமான விவரங்கள் அனைத்தும் சுவையாக இருந்தன. பத்திரிகை உலகத்துள் இதுபோன்ற மலர்கள் நாட்டின் வளத்தைக் காட்டவும், யந்திர வளர்ச்சியைக் காட்டவும் பெரிதும் உதவுகின்றன. கல்கி செய்துள்ள சேவையில் இம்மலர் தனிப்பட்ட திறமையும், பெருமையும் பெற்றிருக்கிறது. என் மனம் நிறைந்த பாராட்டுக்கள்.

சென்னை
1-8-64 கவி சுப்பிரமணியம்.

ஃ ஃ ஃ

ரயில்வே மலரில் பல ரசமான அம்சங்களைச் சேர்த்து அதைச் சிறப்புறச் செய்திருக்கிறீர்கள்.

ரயில்களைப் பற்றி இதைவிட யாரும் சிறப்பான மலரைத் தயாரிக்க முடியாது என்று கூறும்படி வெளியிட்டிருக்கிறீர்கள்.

சென்னை
4-8-64 கே. ஆர். கல்யாணராமன்

ஃ ஃ ஃ

'சங்கம்' விமர்சனம் எழுதியவரின் மேல் ஒரு மணியான பொன்னாடையைப் போர்த்த வேண்டும் போலிருக்கிறது. வெகு விளம்பரப்படுத்தப்பட்டு, சென்னையையே பைத்தியமாய் அடித்த ஒரு படத்தைப் பற்றிப் பாரபட்சமின்றித் தைரியமாய் எழுதிய அன்னாரைப் பாராட்டுகிறேன்.

புதுதில்லி
30-7-64 சுப்புடு

ஃ ஃ ஃ

ரயில்வேயின் பல அரிய சாதனைகளை விளக்கியிருப்பது பாராட்டத் தக்கது. ஆனால் 'ரயில்வே ஆஸ்பத்திரி' செய்துவரும் சேவையினை மறக்கலாகாது!

பெரம்பூர்
5-8-64 ஜயா

ஃ ஃ ஃ

9-8-64 'கல்கி' இதழில் 'சீதா' எழுதிய 'அதிர்ஷ்டம் அடித்தது' என்ற நகைச்சுவை சிறுகதையில் தென் ரயில்வே காரியாலயத்தில் ஏற்பட்ட எழுத்து மாறாட்டம் காரணமாக 'மங்களூ'ருக்குப் பதிலாக 'மங்களகிரி'க்கு அதிர்ஷ்டம் அடித்தது என்று எழுதியிருக்கிறார். ஆனால் அவரே கோடம்பாக்கத்துக்குத் தவறுதலாக 'கேடிஎம்' என்று கூறிவிட்டாரே! கோடம்பாக்கத்துக்குச் சரியான சுருக்கு எழுத்து 'எம்.கே.கே.' அல்லவா?

சென்னை-3
6-8-64 ஜே. வி. எஸ்.

ஃ ஃ ஃ

9-8-64ந் தேதிய 'கல்கி' இதழில் வெளிவந்த ''பனிப் பெண்'' படைத்த ஆசிரியர் திரு வி. சுவாமிநாதன் அவர்களுக்கு என் உளம் நிறைந்த பாராட்டுக்கள்.

''நான் துஷார் ஜீ! வெயில் என்னை ஒன்றும் செய்யாது. நான் உருகி மேகமாகி இமய மலையின் கிரீடமாகி விடுவேன்!'' பனிப் பெண்ணின் வாசகங்கள் இவை.

பனிப் பெண் மறைந்து விட்டாள். ஆனால் உணர்ச்சி மேகமாகி எங்கள் இதயக் கிரீடமாக ஆகிவிட்டாள். ஆசிரியரின் ரோஜா இதழ் வாசகங்களை மறக்க முடியவில்லை.

ராமநாதபுரம்
7-8-64 மா. நாகேசுவரன்



[ரயில்வே மலரைப் பாராட்டி இன்னும் எண்ணற்ற கடிதங்கள் வாசக நேயர்களிடமிருந்து வந்துள்ளன. மலரின் சிறப்புக்கு 'ரயில்வே மலர் வெளியிடலாம்' என்ற யோசனையைக் கொடுத்து உதவியதுடன் ரயில்வேக்களைப் பற்றிப் பல ரசமான விஷயங்களையும் சேகரித்து அனுப்பிய பிரபல எழுத்தாளர் திரு டி.எஸ். கோதண்டராமன் ஓரளவுக்குக் காரணமாயிருந்தார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். —ஆசிரியர்]

ஃ ஃ ஃ

9-8-64 கல்கி இதழில் வெளியாகியுள்ள ''பதினேழாவது நம்பருக்கு ஒரு பதில்'' என்னும் கதையைப் படித்தேன். என் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது. மனக் கவலைகளை மறக்கப் புத்தகங்களை, வாரப் பத்திரிகைகளைப் படித்துச் சிறிது மகிழ்ச்சியுறலாம் என்று நினைத்தால் வார இதழிலும் கண்ணீரே வரவேற்பு அளிக்கிறது. கதை நன்றாக இருந்தது.

திருக்கோயிலூர்
9-8-64 வி. மைதிலி

ஃ ஃ ஃ

'கல்கி'யில் வெளியாகும் பற்பல பகுதிகளை உணர்ந்து ரசிக்கும்போது, 'சிரிக்கவும் சிந்திக்கவும்' பகுதிக்கு என் பிரத்யேகப் பாராட்டுதல்களை அதன் ஆசிரியருக்கும் தங்களுக்கும் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

சர்வதேச விஷயங்களையும், நம் உள்நாட்டு சமூக, கலாசார, அரசியல் செய்திகளையும் மிகவும் உயர்தரமான ஹாஸ்யத்தோடு கிண்டல் விமரிசனம் செய்யும் இந்த ஆசிரியரின் எழுத்துத் திறன், மேல் நாட்டு எந்த உயர்ந்த எழுத்தாளரின் திறமைக்கும் குறைந்தது அல்ல.

பெரம்பூர்
6-8-64 என். பாலசுப்பிரமணியம்



### அத்தியாயம் ஐம்பத்துமூன்று

# ஒரே முடிவு

"டேய்,! பிச்சுமணி! உனக்கு நான் வேண்டுமா? அந்த வாத்தியாரம்மா வேண்டுமா?" என்று மேஜர் மீண்டும் அதிக அழுத்தமான குரலில் கேட்டுவிட்டு, "நான் வேண்டுமென்றால் நீ அவளை மறந்து விட வேண்டும். அவளைப் பற்றிய உன் முடிவை இப்போதே மாற்றிக் கொள்ள வேண்டும்! உடனே பதில் சொல்!" என்று முழக்க மிட்டார். பிச்சுமணியின் சட்டைக் காலரை இழுத்துப் பிடித்திருந்த தம் பிடியையும் அவர் விடவில்லை. தம் பிடியிலிருந்து தம் பேரன் விலகிப் போய் விடக் கூடாதே என்று உள்ளூற ஒருபுறம் பரிதவித்துக் கொண்டிருந்தார்.

அவருடைய கடுமையான குரலும், பாறை போல் இறுகிய முகமும், கூர்மையான பார்வையும் பிச்சுமணியின் நெஞ்சைத் துளைத்தன. திடீரென்று தாத்தாவிடம் தனக்குள்ள பழைய பய உணர்ச்சி ஒன்றும் அவனுடைய உடலெங்கும் பாய்ந்து பாய்ந்து கவ்வியது. ஆனால் அந்தப் பயத்துக்கு இடங்கொடுத்துப் பணிந்து விடக் கூடாதென்றும் அவன் தன் உள்ளுணர்ச்சிகளோடு போராடிக்கொண்டு நின்றான். தாத்தாவின் விழிகளை ஏறிட்டுப் பார்க்கவே மனம் கூசியவனாகவும் நெளிந்தான்.

"ஹா!" என்று ஒரு பெருமூச்சு விட்ட மேஜர் மிகவும் கசப்பான ஒரு புன்முறுவலுடன், "என்னடா, இப்போதாவது உனக்குப் புத்தி வந்ததா? அந்தச் சூனியக்காரிக்காக இந்த வீடு வாசல், சொத்து சுகங்களை மட்டுமல்ல, என்னையும் புறக்கணித்துவிடத் துணிய மாட்டாய், இல்லையா? என்ன, இப்போதாவது அவளைப் பற்றிய உன் முடிவை மாற்றிக் கொண்டாயா, சொல்!" என்று கேட்டார்.

"இல்லை, தாத்தா! உமாவை ஒரு போதும் என்னால் மறக்க முடியாது. உமாவைப் பற்றிய என் முடிவை மாற்றிக்கொள்ளவும் மாட்டேன். நான்



பேசக் கூடாதென்று எச்சரித்தானே அவளைப் பற்றியே கேவலமாகப் பேசித் தீர்க்க முயன்றார்.

''பேய்! பணத்துக்கு ஆசைப்பட்டுத்தான் அந்தச் சூனியக்காரி உன்னைப் பைத்தியக்காரனாக்கி யிருக்கிறாள். ஏற்கெனவே ஒரு கலியாணம் நிச்சயமாகித் தாலி கட்டுவதற்கு முன்னே புருஷனை விழுங்கிய சைத்தான் அவள்! இப்போது சரியான பையனாகப் பார்த்துத்தான் பிடித்திருக்கிறாள் அந்த அரைக் கிழவி! சூழ்ச்சி செய்யும் அந்தக் கூனியை:.. அந்த அரைக் கிழவியை... அந்த..... அந்த....'' என்று கூவிய மேஜர் இன்னும் அதிக அருவருப்பான வசை மொழிகளை அடுக்கினார்.

பிச்சமணி தன் காதுகளைப் பொத்திக் கொண்டு, ''தாத்தா!'' என்று வீறிட்டுக் கத்தினான். சித்திரவதைப் படும் ஒருவன் தாங்க முடியாத பிராண வஸ்தையின் போது வீறிட்டு ஓலமிடுவது போலவே ஒலித்தது அது! அதன் பிறகு பிச்சமணி தன்னுடைய தன் அடக்கத்தை யெல்லாம் தன்னுடைய பிடியிலிருந்து நழுவ விட்டு விட்டான். திடீரென்று பேய் வெறி கொண்ட ஒரு சைத்தானைப்போல் அவன் துள்ளி வந்து தன் தாத்தாவின் எதிரில் நிமிர்ந்து நின்று அதி ஊர்க்கமாக மிரட்டத் தொடங்கினான்.

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

சொன்னது சொன்னதுதான்!'' என்று பிச்சமணி நறுக்குத் தெறித்தாற் போல் பதிலளித்து விட்டான்.

''என்னைவிட அந்தப் 'பொம்பிளை' பெரிதாகப் போய் விட்டாளோ?'' என்று மேஜர் கூவ நினைத்த வார்த்தைகள், அவருடைய கௌரவத்தை முன்விட்டு அவருடைய வாய்க்குள்ளேயே முனகலாக அடங்கி விட்டன. தம் பிடியிலிருந்து பிச்சமணியின் சட்டைக் காலரைப் பட்டென்று விட்டு விட்டு மேஜர் அவனை ஒருபுறமாகப் பிடித்துத் தள்ளினார்.

சில விநாடிகள் பயங்கரமான மௌனம் நிலவியது. அந்த மௌனமே மேஜருக்கு அளவுகடந்த ஆக்ரோத்தை எழுப்புவதற்குப் போதுமானதாக இருந்தது. அந்த ஆக்கிரத்துக்கு வடிகாலாகவும், தம்முடைய தோல்வியை மறைப்பதற்காகவும், தம் போன் எவனைப் பெரிதாக மதித்து எவனைப் பற்றிப்

''தாத்தா! வீணாக உமாவைப் 'பற்றிப் பேசாதீர்கள் என்று ஏற்கனவே உங்களை எச்சரித்திருக்கிறேன்! என்னைப் பற்றி எது வேண்டுமானாலும் எவ்வளவோ கேவலமாகப் பேசுங்கள்! அவற்றை யெல்லாம் நான் கேட்டுக் கேட்டுப் பழகி யிருக்கிறேன்; இன்னும் கேட்டுக் கொண்டு சும்மாவே இருக்கிறேன்! ஆனால் உமாவைப் பற்றி மோசமாகப் பேசினால் நான் பொறுக்கவே மாட்டேன். இப்படிப் போக்கிரித்தனமாக வேறு யாராவது பேசியிருந்தால் இந்நேரம் என் கைகளாலேயே அடித்து நொறுக்கியிருப்பேன். ஜாக்கிரதை! இனிமேலும் உமா பற்றி நீங்கள் அப்படிப் பேசினால் அப்புறம் தாத்தா என்றுகூடப் பார்க்க

மாட்டேன்!'' என்ருன் பிச்சுமணி, வெகு தீர்க்கமாக.

''என்னேயே மிரட்டுகிருயா? அவனுக்காக என்னேயே மிரட்டுகிருயா?'' என்று குதித்த மேஜருக்கு ஆத்திரம் எல்லே கடந்து விட்டது. இது போன்ற சந்தர்ப்பங்களில் அவர் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதே யில்லே. இப்போதோ அவர் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த எரிமலே யெல்லாம் ஒன்ருக வெடித்து விடத் தொடங்கியது. அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒருபுறம் சுவரில் அவருடைய வீரப் பிரதாபத்தை நிலேநாட்டும் போட்டோப் படத்தின் அருகில் அழகான ஒரு சின்னஞ் சிறு பிரம்பு தொங்கிக் கொண்டு அவரைப் பார்த்துச் சிரிப்பது போல் நர்த்தனமாடியது. அந்தப் பிரம்பு அவருடைய பழங்காலத்தின் ஐம்பத்தை நினேவூட்டும் அருமையான சின்னம்!

மேஜர் வேகமாகப் பாய்ந்து சென்று அந்தப் பிரம்பை எடுத்துக் கொண்டு வந்து தம் பேரன் எதிரில் தண்டனே வழங்கும் அதிகாரி போல் அதிபயங்கரமாக நின்ருர்.

பிச்சுமணி வெகு அமைதியாகத் தன் சட்டையின் பித்தான்களேக் கழற்றித் தன் தாத்தாவின் கைப் பிரம்புக்கு வசதியாகத் தன் நெஞ்சைத் திறந்து காட்டிக் கொண்டு தலே நிமிர்ந்து நின்ருன்.

அது மேஜருக்கு இன்னும் அதிக ஆத்திரத்தை மூட்டி விட்டது!

''உனக்கு அவ்வளவு நெஞ்சழுத்தமா? டேய், பொடிப் பயலே!'' என்று கூவிய மேஜர், ''உன்னே என்ன செய்கிறேன் பார்! இதோ, இதை வாங்கிக் கொள்! இதை வாங்கிக் கொள்!'' என்று அசுரத்தனமாகக் கர்ஜித்தபடி தம் கைப் பிரம்பால் பிச்சுமணியின் உடம்பெங்கும் 'பளீர் பளீர்' என்று அடிக்கலானுர்.

அடிமேல் அடியாக விழும் அந்தனே அடிகளேயும், அவற்றின் வலிகளேயும் தாங்கிக் கொண்டு பிச்சுமணி அசையாமலே நின்ருன். அவனுடைய அந்த நெஞ்சழுத்தம் மேஜர் ராமதுரைக்கு மேலும் மேலும் ஆத்திரத்தையே மூட்டிவிடப் பிச்சுமணியை மேலும் மேலும் பலமாக அடித்துக் கொண்டேயிருந்தார்.

அச்சமயம் பட்லர் இருதயசாமி, ஒருபுறமிருந்து, ''ஐயா! ஐயா!'' என்று கத்திக் கொண்டே ஓடி வந்து, மேஜரை நோக்கி, ''என்னய்யா, ஆடு மாடுகளே அடித்து நொறுக்குவது போல் இந்தப் பிள்ளேயை அடித்துக் கொல்கிறீர்கள்? முதலில் என்னே அடித்துக் கொல்லுங்கள்! ஏனென்ருல், இந்தப் பிள்ளேயைத் தாயிடமிருந்து பிரித்துக் கொண்டு வந்து உங்களிடம் ஒப்படைத்தவன் இந்தப் பாவிதான்!'' என்று பொருமியவாறு மேஜரின் கைப் பிரம்பைப் பிடுங்காத குறையாய் அவருடைய கையோடு சேர்த்துப் பிடித்து முறுக்கினுன். அப்போது அவன் ஒரு வேலேக்காரன் என்பதையும் மறந்து விட்டான். பிச்சுமணியைக் குழந்தை முதல் அருமையாக எடுத்து வளர்த்த பாசத்தின் உரிமையும் அதன் வேகமுந்தான் அவனுக்கு மேஜரைவிட மேலோங்கி நின்றன.

பிச்சுமணி அவனேயே கண்டிக்கும் விதமாக, ''இருதயசாமி! இது எங்கள் விவகாரம்! இதில் குறுக்கிட நீ யார்? உன் வேலேயைப் பார்த்துக் கொண்டு போ!'' என்று அதட்டினுன்.

இருதயசாமி திடுக்கிட்டவனுக, ''நான் யாரா? நான் யாரா? ஆமாம்.... நான் யாரோ ஒரு வேலேக்காரன்! குழந்தை முதல் என் தோள்களிலும் கைகளிலும் தூக்கி வளர்த்ததெல்லாம் வெறும் கூலிக்காகத்தான்! நீங்கள் போட்ட சோற்றுக்காகத்தான்!''— பொருமியவாறு சட்டென்று மேஜரின் கையை விட்டு விட்டுத் தள்ளி நின்று அவரையே வெறுப்புடன் குறுகுறுவெனப் பார்த்தான்.

அது மேஜருக்கு மேலும் ஆத்திரத்தை மூட்டி விட்டது. தம் ஒருவருக்கே உரிய சொத்தான பிச்சுமணியின் மீது வேறு யாருக்குமே உரிமை கிடையாது! அப்படியிருக்கும்போது தம்முடைய வேலேக்காரனும் தம் பேரனுக்காகப் பரிந்து கொண்டு தம்மையே எதிர்க்க முன் வந்திருக்கிருனே என்று ஆக்ரோஷம் கொண்டார். அதன் வேகத்தோடு அவர் தம் கைப் பிரம்பை ஓங்கி இன்னும் பலமாகப் பிச்சுமணியை அடிக்கலானுர்.

பிச்சுமணியின் உடலில் நாலேந்து அடிகள் விழுந்ததுமே அந்தக் கைப் பிரம்பு நெளிந்து இரண்டு துண்டாக முறிந்து விட்டது. ஆனுல் அப்போதும் பிச்சுமணி வலி வேதனேகளால் அழவில்லே. நின்ற இடத்தை விட்டு அசையவும் இல்லே. முகத்திலிருந்த கம்பீரமும், அவனுடைய தலே நிமிர்வும் சிறிதுகூடக் குறையவில்லே.

''நெஞ்சழுத்தக்காரன்! நெஞ்சழுத்தக்காரன்!'' என்று மேஜர் குமுறியவாறு தம் கைப் பிரம்பை ஆத்திரத்

# சுலேகா

ஸ்பெஷல்

பவுண்டன் பேனா

இங்க்

Sulekha

4 நிரந்தரமான கலர்களில்

கிடைக்கும்

- புளூ பிளாக்
- ராயல் புளூ
- கருப்பு
- பிரவுன்

சுலேகா ஒர்க்ஸ் லிமிடெட்
கல்கத்தா



# லிஃப்கோ இலக்கிய வரிசை

பொருள் விளங்குமாறு, ஆறும் யாப்பிலக்கண விதி பிறழாமல், சொற்கள் பிரிந்து அமைக்கப்பெற்று, எளிதில் கதையை விளக்கும் சிறு தலைப்புகள், கதைச் சுருக்கம், காண்டச் சுருக்கம், காதை விளக்கம், கதையில் வருவோர் விளக்கம், ஆசிரியர் வரலாறு, நூலின் சிறப்பு, நூல் கூறும் நீதிகள், நூலின் புராணக் கதைகள், மாணவர்கட்குப் பயிற்சி முதலியவற்றைக் கொண்டு விளங்குபவை

இவ்விரண்டிலும் ஒரு பிரதி வேண்டுவோர் ரூ. 4 மணியார்டர் செய்யவும்

சிலப்பதிகாரம் மூலம் விலை 1-50

மணிமேகலை மூலம் விலை 1-50

கிடைக்குமிடம்

# அமில அஜீரணம் நெஞ்செரிச்சல், வயிற்றுக் கோளாறு இவைகளிலிருந்து

# அதிசீக்கிரமான சமனம் பெற




# பிலிப்ஸ்




## தொடக்கத்திலிருந்தேயுள்ள

## மில்க் ஆப் மக்னீஷியா

# டேப்லெட்டுகள்




பிலிப்ஸ் டேப்லெட்டுகள் உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா கொண்டதும் குடும்பத்தில் எல்லோருக்கும் சவுகரியமாகவும் சீக்கிரமாகவும் சமனம் தரவும் ஏற்றது

அமில அஜீரணம் உண்டாகும்போது சில பிலிப்ஸ் டேப்லெட்டுகளை வாயில் போட்டு மென்று சாப்பிடவும். அவை நெஞ்செரிச்சலையும் வாயுவினால் ஏற்படும் வயிறு உப்புதலையும் தணிக்கிறது. மேலும் வயிற்றை சரிப்படுத்தி சுவாஸத்தில் உண்டாகும் துர்க்கந்தத்தையும் அகற்றுகிறது

குடும்பத்தில் எல்லோருக்கும் உபயோகத்திற்காக 75, 150 டேப்லெட்டுகள் கொண்ட பாட்டில்களில் கிடைக்கும் இன்றே பரிக்ஷித்துப் பாருங்கள்.

## இப்பொழுது

அதிக பாதுகாப்பிற்காக
அலுமினியம் போயில்
பாக்கெட்டுகளில்
கிடைக்கும்,

உபயோகத்திற்காக ரிஜிஸ்தர் செய்து தயாரிப்பவர்கள்
டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யு) பிரைவேட் லிட்.,

துடன் தூர வீசியெறிந்து விட்டு, ''அந்த நாடகக்காரியின் நெஞ்சமுத்தம், 'சாகசம், பசப்புத்தனம் அத்தனையும் இந்தப் பயலிடம் பொதிந்திருக்கின்றன. தெருவிலே திரிகிற அந்த மினுக்கியின் குணத்தோடு அவளுடைய தலைவிதியுந்தான் இவனுக்கும் ஏற்படப் போகிறது!'' என்று தம்மையும் மறந்து வாய்விட்டுக் கூவி விட்டார்.

தாயைப் பற்றிய அச் சுடுசொற்களைக் கேட்டதும் பிச்சுமணி, சீண்டிவிடப்பட்ட காட்டுப் புலிபோல் துள்ளினான்.

''என் தாயாரைப் பற்றி என்ன சொன்னீர்கள்?'' என்று அவன் அதி பயங்கரமாகக் கர்ஜித்து விட்டு மேன் மாடியை நோக்கிப் பாய்ந்தோடினான். அங்கிருந்து மேஜரின் நீளமான துப்பாக்கியை எடுத்துக் கொண்டு மாடிப் படிகளில் நடநடவென்று இறங்கி வந்தான். கடைசிப் படியை அடைந்ததும் ஒருமுறை நின்று துப்பாக்கியின் தோட்டாக்கள் சரியாக இருக்கின்றனவா என்று சோதித்துப் பார்த்தான்.

அந்தத் துப்பாக்கியால் அவன் என்ன செய்யப் போகிறான் என்பது புரியவில்லை. மேஜரை அவன் சுட்டுத் தள்ளிவிடுவானோ என்று பட்லர் இருதய சாமி நடுங்கினான். மேஜருக்கோ...? தம் பேரன் சிறுவனாக இருந்தபோது தம்மைச் சுட்டுவிடுவதாகப் பயமுறுத்திய வண்ணம் அதே துப்பாக்கியைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு அதே மாடிப் படிக்கட்டில் இறங்கிவந்த காட்சி தான் இப்போது அவருடைய நினைவில் வந்து நின்று உறுத்தியது. அதே பழைய திகிலும் இப்போது அவரைப் பிடித்துக் கொண்டது. அவர் பிச்சுமணியை வெறித்து நோக்கியவாறு செயலற்று நின்றார்.

பிச்சுமணி தன் கையில் உள்ள துப்பாக்கியை நீட்டியபடி மெல்ல ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்து மேஜரை நோக்கி அதிபயங்கரமாக நடந்து வந்தான். துப்பாக்கியின் முனை மேஜரின் நெஞ்சை எட்டும்அளவுக்கு வந்ததும் அவன் ஆணித்தரமாக நின்றான்.

மேஜர் ராமதுரையும் சிறிதும் அசையவில்லை. தம் மார்பில் எத்தனை குண்டுகளையும் தாங்கிக் கொள்ள முடியும் என்பது போலவே, பட்டாளத்து மேஜராகவே கம்பீரமாக நின்றார்.

ஒரு விநாடி அதி விசித்திரமான, அதி கலவரமான அமைதி நிலவியது.

அடுத்த விநாடி பிச்சுமணி அதி குரூரமான ஒரு புன்சிரிப்புடன், தன் கையில் உள்ள துப்பாக்கியைத் தாழ்த்தி அதன் கைப்பிடிக் கட்டையைத் திருப்பி நீட்டியபடி, அதை மேஜரின் கையில் கொடுத்து விட்டு, ''நான் நாடகக்காரி பெற்ற பிள்ளையாகத் தோன்றியபோதே என்னை நீங்கள் சுட்டுக் கொன்றிருக்க வேண்டும்! தவறி விட்டீர்கள்! பரவாயில்லை. இப்போது இன்னொரு சந்தர்ப்பம் தருகிறேன். என்னை இப்போதே சுட்டுக் கொன்று விடுங்கள்! இவ்வாறு உங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுப்பதின் மூலம் உங்களிடம் எனக்குள்ள கடமை, உறவு எல்லாம் தீர்ந்து போகும். என்னை இப்போதே சுட்டுக் கொன்று விட்டால் உங்களுக்கும் நிம்மதியாகி விடும்!'' என்றான்.

மேஜர் ராமதுரை தம் கையில் திணிக்கப்பட்ட துப்பாக்கியையே வெறித்து நோக்கிய வண்ணம் அசைவற்று நின்றார்.

''இதுதான் கடைசிச் சந்தர்ப்பம்! இதன் பிறகு நீங்கள் யாரோ நான் யாரோ! அதனால் இப்போதே என்னைத் தீர்த்து விடுங்கள்! உங்களுக்கு ஒரு நிமிஷம் அவகாசம் அளிக்கிறேன்!'' என்றான் பிச்சுமணி.

ஒரு நிமிஷம் ஆயிற்று. மேஜர் தம் கையில் உள்ள துப்பாக்கியால் எதுவும் செய்யவில்லை.

பிச்சுமணி சிரித்தான். அது ஈட்டி முனை போலவே ஒலித்தது.

பிறகு அவன் கணீரென்ற குரலில் தன் தாத்தாவை நோக்கி, ''இனி நான் போகிறேன், மேஜர்!'' என்று ஒரு வார்த்தை மட்டும் சொல்லி விட்டு வெளி வாசற் கதவை நோக்கி நடந்தான்.

தன் தாத்தாவை மேஜர் என்று அவன் விளித்தது அதுதான் முதல் தடவை! மேஜர் என்ற அந்த ஒரு விளிச்சொல்லே தாத்தாவுக்கும் பேரனுக்கும் இடையே இருந்து வந்த எத்தனையோ வருஷத்திய பாசபந்தத் தொடர்புகளையெல்லாம், எத்தனையோ ஜன்மாந்தரத்து வாசனைகளையெல்லாம் துண்டித்து விட்டு, அவ்விருவரையும் தனித்தனியான இரு உலகங்களைச் சேர்ந்த இரு அன்னியர்களைப் போலவே நிலைநிறுத்திக் காட்டி விட்டது.

வெளி வாசற் கதவைப் பிச்சுமணி படீரெனத் திறந்து கொண்டு வெளியேறி மறுபடியும் கதவைப் படீரென்று மூடிவிட்டு 'விர்'ரென்று வேகமாகப் போய் விட்டான்.

மேஜர் தம் கையில் திணிக்கப்பட்டிருந்த துப்பாக்கியைத் தூக்கிக் குறி பார்த்து இரு முறை சுட்டார்.

அடுத்தடுத்து வெளிப்பட்ட இரண்டு குண்டுகளும் குறி தவறாமல் இரண்டு பொருள்களின் மீது பாய்ந்து துளைத்தன. ஒரு பொருள் அங்கு வாசற்புறத்துச் சுவரின் ஒரு பக்கம் விட்டத்தில் அழகாக வைக்கப்பட்டிருந்த பித்தளைப் பூக் கிண்ணம்! மற்றொன்று, மறு பக்கம் சுவரில் தொங்கிய தாய்க் குருவியின் வர்ணப்படம்!

பூக் கிண்ணம் காதலின் சின்னமாகத் தோன்றி வாத்தியாரம்மா உமாவாகவே மேஜரின் கண்களுக்குத் தோற்றமளித்தது. தாய்க்குருவியின் ஓவியமோ பிச்சுமணியின் தாயாரையே அவருக்கு நினைவூட்டியது. ஒருத்தி தன் பேரனின் தகப்பனையும் அந்தஸ்தையும் ஆதி காலத்தில் பறித்துக் கொண்டாள். இன்னொருத்தியோ இப்போது தன் பேரனையே பறித்துக் கொள்கிறாள். அவ்விரு பெண்களும்தான் தம் கனவுகளையெல்லாம் நிர்மூலமாக்கியவர்கள்! மேஜருக்கு அந்த ஆத்திரம்!

ஆனால் பித்தளைப் பூக்கிண்ணமும், தாய்க் குருவியின் படமும் அவருடைய துப்பாக்கியால் குறி தவறாமல் குண்டடிபட்டனவே தவிர, அவை இரண்டும் இருந்த இடத்தை விட்டு அசையவேயில்லை. குண்டு வெடித்த சத்தங்களைக் கேட்டுப் பிச்சுமணியும் திரும்பி வந்து பார்க்கவில்லை. ஒரு வேளை தன் தாத்தாதான் தம்மையே சுட்டுக் கொண்டு விட்டாரோ என்று அவன் நினைக்கவேயில்லை!

மேஜர் திடீரென்று பரிதாபகரமாகப் பலவீனமடைந்தவராக அப்படியே நிலை சரிந்து தம் சிம்மாசனத்தில் தொப்பென்று உட்கார்ந்து விட்டார். கடலில் கப்பல் அமுங்குவது போலவே அந்தப் பழங் காலத்துச் சோபாவிலே அமிழ்ந்து சாய்ந்தார். அதன் பிறகு அந்த நிலையிலேயே சிலையாக, சபிக்கப்பட்ட கற்சிலையாக மாறி விட்டார். அவருடைய முகத்தில் உறைந்திருந்த ஆத்திரத்தின் வலிப்பு சுழிப்புகளெல்லாம் எங்கோ மறைந்து போய் விட்டன. இப்போது எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் அந்த முகம் பாறை போலவே இறுகியிருந்தது.

அவருடைய பெரிய விழிகள் மட்டும் சிறிது ஜீவனுடன் பிச்சுமணி வெளியேறிய வாசற் பக்கத்தை நோக்கியே பதிந்திருந்தன.

பட்லர் இருதயசாமி அங்கு நடைபெற்றதையெல்லாம் கவனிப்பதற்கு உரிமையற்றவன் போல், தன் மனத்தின் முனகல்களையெல்லாம் தன் முகச் சுழிப்புகளிலேயே காட்டிக் கொண்டு, மேஜரின் கண்ணெதிரில் அங்குமிங்கும் நடை பழகிக் கொண்டிருந்தான்.

பொழுது இருட்டத் தொடங்கியது.

பட்லர் வழக்கம் போல் கூடத்து விளக்குகளைத் தட்டி எரிய வைத்தான்.

பிறகு அவன் மேஜரின் முன் பவ்யமாக வந்து நின்று, வேலைக்காரர்களுக்கே உரிய பாணியில், ''பெரிய எஜமான்! ராத்திரி என்ன சமைக்கிறது? உங்களுக்கு மட்டும் சமைத்தால் போதுமா?'' என்று வெகு சாதாரணமாகக் கேட்டான்.

''அயோக்கிய ராஸ்கல்!'' என்று ஓர் அலறலுடன் குதித்தெழுந்த மேஜர் தம் பட்லரை நோக்கி, ''டேய்! அந்தப் பயல் அதிக தூரம் போயிருக்க மாட்டான். போய் இழுத்து வாடா!'' என்று கட்டளையிட்டார். **(தொடரும்)**


பெரிய குடும்பங்களுக்கும் குறைந்த செலவில் சிறந்த உதவி

இளநரை வழுக்கை தடுக்க

காஷ்மீர்-குஸும்

அடர்ந்து கூந்தலை அடைய

நீங்கள் உபயோகிக்கும் எண்ணெயில் ஊறவைக்கவும்.

T. A. அப்துல்ரஹீம், தஞ்சாவூர்

கஸ்தூரி பத்தி
அகர் பத்தி
குலாப் பத்தி
ஜவ்வாது பத்தி

ஜவ்வாது பவுடர், அரகஜா

சுத்த புனுகு, சுத்த ஜவ்வாது, அரகஜா, கதம்ப அத்தர்

சோல் ஏஜண்டுகள்: யூனைடெட் கன்ஸர்ன், 54, பந்தர் தெரு, சென்னை-1

# ஏக்கோப்ரூ:ப்

## ஏஸிஸியின் ஸிமெண்ட் வாட்டர்ப்ரூ:பிங் அடிடிவ் —

## வாட்டர்ப்ரூ:பிங் பிரச்சினைகளுக்கு உத்தமமானது



ரிஸர்வாயர்கள் மற்றும்
தண்ணீர் டாங்குகள்



குரங்கு டாப்புகள் மற்றும் திறந்தவெளி
மாடிகள்



தண்ணீர் சப்ளை குழாய்கள்

தண்ணீர் தேங்கி நிற்கும் இடங்களான ரிஸர்வாயர்கள், தண்ணீர்க் குழாய்கள், நீச்சல் குளங்கள் முதலியவற்றிலிருந்து நீர் கசியாமல் இருக்க ஸிமெண்டோடு ஏக்கோப்ரூ:பை உபயோகித்தால் போதும். ஸிமெண்டை கற்களுடன் சேர்த்துக் கலப்பதற்கு முன்பாகவே ஏக்கோப்ரூ:பை ஸிமெண்டுடன் கலந்து விட்டால் கான்க்ரீட் அழுத்தமாகவும் அதிக கெட்டியாகவும் இருப்பதோடு அதில் ஈரம் ஊடுருவி இறங்குவதையும் தடுக்கிறது. ஈரம் தாங்கக்கூடாத தரைகள், குரங்கு டாப்புகள், திறந்தவெளி மாடிகள் முதலியவற்றிற்கு ஏக்கோப்ரூ:ப் உபயோகித்தால் அவற்றில் ஈரம் ஊறுவதை நன்கு தடுக்க முடியும்.

ஏக்கோப்ரூ:ப் இப்போது எளிதில் கிடைக்கிறது
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி
ஆ:ப் இந்தியா லிமிடெட்

பம்பாய் · அஹமதாபாத் · பெங்களூர் · கல்கத்தா
கோயம்பத்தூர் · புது டில்லி · இந்தூர் · கான்பூர்
மதராஸ் · பாட்னு · ஸெகந்திராபாத்

இது பற்றிய திறமான தொழில் நுட்ப ஆலோசனையும் விவரங்களும் இலவசமாகக் கிடைக்கும்



ஏஸிஸி

தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி
ஆ:ப் இந்தியா லிமிடெட்

JWTCH-1316

வெட்டுக்காயங்கள், காயங்கள், சுட்ட புண்கள், மற்றும்
சிராய்ப்புகளுக்கு

# பர்னல்

## முப்பது வருடங்களாகப் பிரபலமான
## ஆன்டிஸெப்டிக் ஆயின்ட்மெண்ட்

பர்னல் குணப்படுத்தும்போதே
இதமளிக்கிறது

பர்னல்/பூச்சிக்கடிகள், புண்கள், மற்றும் அடைசொறி (தோபி இட்ச்,) வேர்வைக்குரு போன்ற இதர சருமநோய்களுக்கும் ஏற்றது. பர்னல் நோய் பரவுவதை முற்றிலும் தடுக்கிறது. ஒவ்வொரு வீட்டிற்கும் பர்னல் இன்றியமையாதது. இன்றே ஒரு பர்னல் டியூப் வாங்குங்கள்.




2 சைஸ்களில் கிடைக்கிறது

25 கிராம் பெரிய சிக்கன சைஸ்

மற்றும்

10 கிராம் கைக்கடக்கமான சிறிய சைஸ்

**பர்னல்**

பூட்ஸ் கம்பெனியின் தரமிக்க தயாரிப்பு 


NAS b82a




### காட்சி 1

[நகர மன்ற உறுப்பினர்கள் — தலைவர், ஆசிரியர் ஆகியோர் அமர்ந்திருக்கிறார்கள். விவாதம் தொடங்குகிறது.]

பரிமளம்: நமது நகரத்துக்கு மிக மிக அவசியமாகவும் அவசரமாகவும் தேவைப்படுவது ஒரு பெரிய சாக்கடை!

கஸ்தூரி: அதை நான் வரவேற்கிறேன்!

பரிமளம்: நமது நகரத்துச் சுகாதாரம் பாழடைவதற்குச் சாக்கடை நீர் அங்கங்கே தேங்கி நிற்பதுதான் காரணம்.

கோபாக்கினி: முழுப் பொய்! நகர சுத்தித் தொழிலாளர்கள் அன்றாடம் சாக்கடை நீரை எடுத்துச் செல்வதைக் கனம் அங்கத்தினர் மறுப்பதாகத் தெரிவதனால் இதை நான் எதிர்க்கிறேன்.

பரிமளம்: கவுன்சிலர் கோபாக்கினி அவர்கள் எனது முழுத்திட்டத்தையும் கேட்ட பிறகு தமது அரிய யோசனைகளைத் தெரிவிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

கோபாக்கினி: நண்பரவர்கள் சாக்கடை நீர் அங்கங்கே தேங்கிக் கிடப்பதாகச் சொன்னார். அது முதல் தவறு. அவர் அதை முதன் முதலில் வாபஸ் வாங்க வேண்டும் என்பது என் தாழ்மையான வேண்டுகோள்.

கஸ்: நண்பர் பரிமளம் அவர்கள் சொல்ல வந்தது, தேக்கச் சாக்கடையை நீக்கிப் போக்குச் சாக்கடையாக அதை மாற்றி ஓட விடவேண்டும் என்பதுதான். ஆகவே வாபஸ் பிரச்னைக்கு இதில் இடமேயில்லை.

தலைவர்: நண்பர் பரிமளம் அவர்கள் தமது சாக்கடைத் திட்டம் முழுவதையும் மன்றத்தில் எடுத்துச் சொல்லிய பிறகு உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவியுங்கள். கவுன்சிலர் பரிமளம் அவர்களே, நீங்கள் உங்கள் பிரச்னையைத் தொடருங்கள்.

பரி: நண்பர் கோபாக்கினி அதன் குறுக்கே விழுந்து தடுக்க மாட்டார் என்று நம்பலாமா? [சிரிப்பு]

கோபாக்: நண்பர் அதன் குறுக்கே என்று சொன்னது, சாக்கடையின் குறுக்கே என்று பொருள்படும்படி சொல்லவில்லை என்று நினைக்கிறேன்.

பரி: இல்லை.... இல்லை.... நான் குறிப்பிடுவது பிரச்னை பற்றித்தான். பிரச்னையிலுள்ள சாக்கடைதான் நான் கூறுவது.

தலை: சரி.... மேலே தொடருங்கள்.

பரி: தெருவுக்குத் தெரு ஓர் ஓடும் சாக்கடை வேண்டும். அவை யாவும் வந்து விழுந்து ஒன்றாகப் பெருகி ஓடுவதற்கு ஊரைச் சுற்றி ஒரு மாபெரும் சாக்கடை....

கோபா: நான் ஆட்சேபிக்கிறேன். குடி தண்ணீர் விஸ்தரிப்புத் திட்டத்துக்கே நகர சபையில் பணம் இல்லாமல் கஷ்டப்படும்பொழுது சாக்கடைத் திட்டமா?

பரி: குடி தண்ணீர் விஸ்தரிப்புக்காகக் குழாய்கள் அதிகரித்தால் அதற்கேற்றபடி சாக்கடை நீர் அதிகமாகத் தேங்க நேரிடும் என்பதையும் நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

தலை: இப்பொழுது நேரமாகி விட்டபடியால் சாக்கடைத் திட்டத்தை அடுத்த கூட்டத்தில் விஸ்தாரமாக விவாதிப்போம்.

[சபை கலைந்து யாவரும் வெளியே வருகிறார்கள். 'நகர மித்திரன்' ஆசிரியர், கவுன்சிலர் பரிமளம் பிள்ளையின் பின்னால் ஓடுகிறார்.]

ஆசிரியர்: பரிமளம் பிள்ளைவாள்! உங்கள் திட்டம் மிகமிக அருமையான திட்டம்.

பரி: ஆசிரியர் சார்! இந்த நல்ல திட்டத்தை இப்படி எதிர்க்கிறாரே கோபாக்கினி.

ஆசிரி: கவலைப்படாதீங்க பரிமளம்பிள்ளை. சாக்கடைப் பிரச்னை பற்றி நம்ம 'நகர மித்திரன்' பத்திரிகையிலே அழுத்தம் கொடுத்து எழுதறேன் இந்த வாரம்.

பரி: ரொம்ப நன்றி, சார். குறிப்பாக உங்களுடைய பேனா முனைக்கு ஓர் அலாதியான மதிப்பு இருக்கு. 'நகர மித்திரன்' பத்திரிகையிலே வருகிற அபிப்பிராயத்தை ஒட்டித்தான் கவுன்சிலர்கள் கைதூக்குவாங்க. அதனாலே சாக்கடை மேலே நீங்க கொஞ்சம் கருணை காட்டி அது கவுன்சிலர்கள் மனசிலே நல்லா படியும்படி செய்யவேணும்.

ஆசிரி: பாருங்களேன், இந்த வாரம் எப்படிச் சாக்கடையைக் கிளறி விடுகிறேன்னு.

### காட்சி 2

[இடம்: 'நகரமித்திரன்' பத்திரிகாலயம். பாத்திரங்கள்: ஆசிரியர், உதவி ஆசிரியர்.]

ஆசிரியர்: உம்முடைய தொடர்கதை, அது இது எல்லாத்துக்கும் இந்த இதழிலே இருட்டடிப்பு!

உதவியாசிரியர்: ஏன் சார், இப்படிப்பட்ட கடுமையான உத்தரவு?

ஆசிரி: ஊர்ச் சாக்கடை பெரிசா? உம்முடைய தொடர்கதை பெரிசா? ஜனங்களுக்கு எது முக்கியம்?



உதவி: சாக்கடைதான் சார்.

ஆசிரி: அதனால் இந்த இதழ் முழுதும் சாக்கடைப் பிரச்னைதான். பரிமளம் பிள்ளை நகர மன்றக் கூட்டத்திலே வெளியிட்ட இந்தச் சாக்கடைத் திட்டம் அமுலுக்கு வந்தால் தான் ஊர் உருப்படும். ஆகையினால் இதைப் பற்றி நானே எழுதப் போகிறேன்.

உதவி: சரி, சார்.

ஆசிரி: ஃபேனைப் போடும்.

உதவி: மின்சாரக் கட்டணம் செலுத்தாததனால் 'லயனைக் கட்' பண்ணிட்டாங்க, சார்!

**ஆசிரி:** முதல் தடங்கல்: சரி: எடிட்டோரியல்லே இதுக்கு என்ன தலைப்புக் கொடுக்கலாம்?

**உதவி:** சாக்கடையின் போக்கிடம்.

**ஆசிரி:** சபாஷ்! உம், என்ன சொன்னீர்? சாக்...... இதென்னய்யா பேனாவிலே மை இல்லையா?

**உதவி:** உதறுங்க நல்லா.

**ஆசிரி:** உதறி உதறி எழுதவா? சேச்சே! ஓர் உதறுக்கு ஓர் எழுத்து. என்ன பேனா இது? 'பரிமளம் பிள்ளை'க்குப் பத்துத் தடவை பேனாவை உதறியாச்சு.

**உதவி:** மைக்கூடு எதிரே இருக்குதே. மையிலே தோய்ச்சு எழுதுங்க சார்.



**ஆசிரி:** அதையும் பார்த்தாச்சு. மையை உள்ளே இழுக்குதே ஒழியக் காகிதத்தின் மேலே இறங்க விடமாட்டேங்குதே! சேச்சே! ரொம்பக் கஷ்டமான பிரச்னையாக இருக்குதே!

**உதவி:** ஆமாம், சார். இது ரொம்பக் கஷ்டமான பிரச்னைதான். மை நமது வருங்காலச் சாக்கடை போல ஓட வேண்டாமா?

**ஆசிரி:** இதிலே ஏதோ சிக்கல் இருக்கிறது. இருந்தாலும் எழுதாமல் விடப் போறதில்லே.

## காட்சி 3

*[இடம்: நகர மித்திரன் காரியாலயம்.*
*பாத்திரங்கள்: பரிமளம் பிள்ளை, ஆசிரியர் உதவி ஆசிரியர்.]*

**பரிமளம்:** சார்! சார்! நகரமித்திரன் பத்திராதிபர் எங்கே?

**உதவியாசிரியர்:** தெருக் குழாயிலே 'கூல் டிரிங்க்' சாப்பிடப் போயிருக்கிறார். இதோ வந்து விடுவார். உட்காருங்கள்.

**பரி:** சாக்கடையை வரவேற்று ஆதரிக்க எழுதப் போறதாக வரிஞ்சு கட்டிக்கிட்டு வந்தார் அன்னைக்கு.



**உதவி:** என்னிடத்திலேயும் அப்படிச் சொல்லி விட்டுத்தானே தலையங்கத்தை ஆரம்பிச்சார். இதோ ஆரம்பத்தைப் பாருங்களேன். "கவுன்சிலர் பரிமளம் பிள்ளை அவர்கள் கொண்டு வந்துள்ள சாக்கடைத்திட்டம்மிகமிக நல்லது."

**பரி:** அப்புறம் வாசியுங்களேன். உம். "நல்லது என்றாலும். இதனால் பிரயோசனம் இல்லை. ரொம்ப மோசமான திட்டம். இதில் மிகவும் சிக்கல் இருக்கிறது." இப்படியா ஐயா தாக்குகிறது என் திட்டத்தை? அங்கத்தினர்கள் அத்தனை பேரும் இதைப் படிச்சுட்டு என்னைக் கேலி பண்ணுகிறாங்களே, ஐயா!

**உதவி:** என்னிடத்திலே கோபிக்காதீங்க. இதோ ஆசிரியரே வந்துட்டார். நேரடியாகப் பேசிக் கொள்ளுங்க.

**பரி:** என்ன ஆசிரியர் சார்! இப்படி அநியாயம் பண்ணி விட்டீங்களே! உங்களை நம்பித்தானே இந்தச் சாக்கடையைக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறேன். சாக்கடைத் திட்டம் நகர மன்றக் கூட்டத்திலே வெற்றிகரமா நிறைவேறணும்னு நீங்க இப்படி எழுதலாமா? சாக்கடையைப் பற்றி அற்புதமா எழுதும் ஆற்றல் உங்களுக்கு உண்டு என்பதை நான் அறிவேன். ஆனால் அபிப்பிராயத்தைத் திடீரென்று வேறு விதமாக மாற்றி விட்டீர்களே! இது நியாயமா?

**ஆசி:** பத்திராதிபருக்கு ஒரு தனிப்பட்ட அபிப்பிராயம் உண்டு. அதை யார் வந்தாலும் மாற்றவோ திருத்தவோ முடியாது.

**பரி:** அதை நான் ஒப்புக் கொள்கிறேன், சார்.

**ஆசி:** நான் தலையங்கம் எழுத ஆரம்பிக்கும்போது எப்படி அபிப்பிராயப்படுகிறேனோ அதை எந்த விதத்திலும் எழுதியே தீருவேன். நான் பத்திராதிபர் என்ற ஸ்தானத்தில் இருந்து கொண்டு எழுதும் வாக்கியத்தை யாராலும் மாற்ற முடியாது. இந்த உறுதியோடு இருக்கிறதனாலேதான் என் எழுத்துக்கு ஒரு வலு ஏற்பட்டு இருக்கிறது.

**பரி:** அதனாலேதான் சாக்கடை வேணும் என்கிறதை நீங்க எழுத்து மூலமாகச் சொன்னா இந்த ஊரே சொன்ன மாதிரி ஆகும் என்று எண்ணினேன்.

**ஆசி:** மாபெரும் சாக்கடை தானே? நிச்சயமாக வேண்டியதுதான். அப்படி ஒரு சாக்கடை ஓடலையானா, நம்ம ஊர் வியாதியிலே மூழ்க வேண்டியதுதான்.. இதைப் பற்றி விரிவாக இந்த வாரம் எழுதறேன்.

**பரி:** இதைச் சொல்லத்தான் சார் நான் ஓடோடியும் வந்தேன். கவுன்சிலர்களின் மனசை அடியோடு மாற்றும் படியாக இருக்கணும் உங்க எழுத்து.

**ஆசி:** ரொம்ப அழுத்தமாக வெளுத்து வாங்கறேன் இந்த வாரம். நீங்க போயிட்டு வாங்க. இப்பவே எழுத ஆரம்பிக்கிறேன்.

*[பரிமளம் போகிறார்]*

**ஆசி:** பேனா சுத்தம் பண்ணப்பட்டுப் புது மை அடைக்கப்பட்டிருக்கிறதா?

**உதவி:** ஆமா சார். நல்லா கிளீன் பண்ணி நானே நிறைய மை அடைச்சுவச்சிருக்கிறேன்.

முற்றும் புதியது!

# 3 ரம்மியமான, புகழ் பெற்ற வாசனைகள்...

## கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

ங்கள் கேசத்திற்குப் போஷாக்கும் நறுமணமும் கொடுத்து புதிய வசீகரத்தையளிக்கிறது







**கால்கேட்டிலிருந்து மிகவும் பரபரப்பூட்டும் ஹேர் ஆயில் செய்தி**

தினந்தோறும் கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலைக் கேசத்தில் தேய்த்துக்கொள்ளுவது நீண்ட செழிப்பான வெளிசெளிவான கூந்தல் வளர்ச்சியை விருத்திசெய்ய உதவுகிறது. உங்கள் கூந்தலுக்குப் புத்தொளியும், பளபளப்பும் அளித்து அழகு கொழிக்கச் செய்கின்றது...மேலும் உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பை எடுத்துக்காட்டும்படி செய்யும் விசேஷ காந்தியையும், துலங்கலையும் அளிக்கிறது.




3 வசீகரிக்கும் சுகந்தங்களில்
ரோஜா
லவண்டர்
மல்லிகை

## புதியது! கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

ங்கள் கேசத்தை அழகுபடுத்தி நறுமணமளிக்கிறது




உங்கள் கேசத்தின் உண்மையான அழகை வெளிப்படுத்த உதவுவதும்...
உங்கள் குடும்பம் முழுவதும் மிகவும் விரும்பும் நறுமணம் கொண்டதுமான

## கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலுடன்

மற்றொரு நேர்த்தியான துணைத்தயாரிப்பு

COHO. 9.2 TAM.

டிரில் மற்றும் லாங்கிளாத்
வாங்கும் பொழுது

# டுவின் டஸ்கர் சின்னம்

இருக்கிறதா என்று கவனித்து வாங்கவும்

நீங்கள் நம்பும் தரத்திற்கு அது ஒரு அத்தாட்சி



## ஹார்வி டுவின் டஸ்கர்

டிரில் மற்றும் லாங்கிளாத்

மதுரை மில்ஸ் தயாரிப்பு
உயர்ந்த ரக நூல்களுக்கு பிரக்யாதி பெற்றது.
**மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.,** மதுரை
மானேஜிங் ஏஜெண்டுகள் : ஏ. & எப். ஹார்வி லிமிடெட்



83-MMC-13A TH

**மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்**

ஆசி: அடா! இதென்னய்யா ஆற்று வெள்ளம் மாதிரி கொட்டுது மை!

உதவி: 'க்ளீன்' பண்ணின பிறகு மை வேகமாக இறங்குது, சார். ஊற்றுப் பேனுல்ல! ஊற்றுகப் பெருகி அருவியாக விழுகிறது!

## காட்சி 4

[இடம்: நடுத்தெரு.
பாத்திரங்கள்: கவுன்சிலர் கோபாக்கினி, ஆசிரியர், உதவி ஆசிரியர்.]

கோபா: ஆசிரியர் சார், ரொம்ப வணக்கம்! ரொம்ப ரொம்ப நன்றி! நீங்க நம்ம கடைக்கு வந்து ஒரு டீ சாப்பிடணும். உங்க மூளையே மூளை சார். சாக்கடையை எதிர்க்கிறதுக்குச் சரியான காரணங்கள் சொல்ல முடியாமல் நான் திணறிக் கொண்டிருந்தேன். நீங்கதான் சரியான ஆதாரங்களை எடுத்துக் காட்டியிருக்கிறீங்க.

ஆசி: அது சரி. என் மூளையைச் சிலாகித்துப் பேச உங்களுக்கு ஏது உரிமை?

கோபா: நீங்க கோபித்துக் கொள்ளக் கூடாது. என்னே ஆதரிக்க நல்லா எழுதியிருக்கீங்க இந்த வாரம். "குடி தண்ணீர் வசதி அதிகரித்து, அதே சமயத்தில் மாபெரும் சாக்கடைகளும் நகரத்தைச் சுற்றி ஓடினால் தெருவெல்லாம் சாக்கடை வெள்ளம் புரண்டோடிக் குபுகுபுவென்று பாய்ந்து அபாசமாகி, நகர சுகாதாரமே பாழாகிவிடும். ஆஹா! நல்லா எழுதறீங்க சார் நீங்க. இப்படி ஆணித்தரமாக எழுதினால்தான் பரிமளம் பிள்ளையின் சாக்கடைத் திட்டம் குப்பைத் தொட்டிக்குப் போகும்..

ஆசி: உங்களுக்கோ அல்லது பரிமளம் பிள்ளைக்கோ பரிந்து எழுதுபவனல்ல நான். பேனப் பிடிக்கிறபோது வருகிற எண்ணங்களை எழுத்தில் வெளியிடுவதுதான் என் வேலை.

கோபா: அந்தக் கடமையை நீங்க நல்லாச் செய்து வறீங்க. தொடர்ந்து இப்படியே செய்யுங்க. சாக்கடை வராமல் காப்பதற்குக் கடவுள் உங்களைக் காப்பாராக.

## காட்சி 5

[பாத்திரங்கள்: பரிமளம், கஸ்தூரி.]

கஸ்தூரி (நகர மித்திரனைப் படிக்கிறாள்): "இந்த மாபெரும் சாக்கடைத் திட்டம் நிறைவேறவேண்டுமானால் நமது நகர மன்றம் ஏகப்பட்ட கடன்கள் வாங்க வேண்டியிருக்கும். ஏற்கனவே அநாவசியமாக ஏராளமான கடன் சுமை ஏறியிருக்கிறது. ஆகவே மேலும் கடன் வாங்கிச் சாக்கடையில் போடுவது சரியன்று. இதை நாம் ஆணித்தரமாக ஆட்சேபிக்கிறோம்."

பரி: சரிதான். இந்த வாரம் பொருளாதாரத்திலே புடிச்சு இந்தத் திட்டத்தைத் தாக்கியிருக்கிறாரோ?

கஸ்: போனவாரம் சுகாதாரத் தாக்குதல். இந்த வாரம் பொருளாதாரத் தாக்குதல். அடுத்த வாரம் அவருடைய மூளை எந்தப் பக்கம் திரும்புமோ?

## காட்சி 6

[இடம்: நகர மித்திரன் காரியாலயம்.
பாத்திரங்கள்: ஆசிரியர், உதவி ஆசிரியர்.]

ஆசி: என்னய்யா இது! நிப்பு பேப்பரைக் கிழிக்கிறதே?

உதவி: பேனவிலிருந்து அதிகமாக மை கொட்டுகிறதே என்று நிப்பைக் கொஞ்சம் உள்பக்கமாக வளைச்சேன் சார்.

ஆசி: நிப்பை இப்படியா வில்லாக வளைக்கிறது? முருங்கைக்காய் பறிக்கிற துரட்டி மாதிரி இருக்குதேய்யா. பேப்பர்மேலே நிப்பு இரண்டு மூனைகளாலும் தாண்டவமாடுகிறதே! எழுதினா மேலே நகரவில்லையே.

உதவி: நல்லா அழுத்தி எழுதுங்க சார்.

ஆசி: அழுத்தினா நிப்பு வாயைப் பிளக்குது.

உதவி: லேசாக அதன் போக்கிலேயே அழுத்தியும் மிருதுவாகவும் எழுதிப் பாருங்க.

ஆசி: சனியன்! இரை வாங்குகிற குஞ்சுக் காக்காய் மாதிரி வாயைப் பிளக்கிறதைய்யா.

உதவி: என்ன சார் செய்யறது? நான் சொன்னா....

ஆசிரியர்: போதும்! புதுப் பேனப் பேச்சை எடுக்க வேண்டாம். உம்... நிப்பின் இடது மூனை தெற்கே போகுது. வலது மூனை வடக்கே போகுது. காந்த நிப்போ இது?

உதவி: இரு துருவப் பேனவோ என்னவோ! ரெண்டு மாடுகளும் ஒத்துப்போனால் தானே வண்டி ஓடும்?

ஆசி: ஓய்! உபமானங்களை நிறுத்தும். இது ஒத்து வரவே செய்யாது.

உதவி: ஆமா, சார். இதுலே உபயோகமில்லே. ஒரே நிப்பிலே இந்த மூனை இந்தப் பக்கமும் அந்த மூனை அந்தப் பக்கமும் போனா எப்படி சார் காரியம் நடக்கும்?

## காட்சி 7

[இடம்: நகரமன்றத் தலைவரின் இல்லம்.
பாத்திரங்கள்: தலைவர், கோபாக்கினி.]

அட்டைப்பட விளக்கம்

## ஏகாந்தக் காட்சி

அதிர்கின்ற ஒலிகளையெல்லாம் முரசென்று சொல்ல முடியுமா? உதிர்கின்ற இலைகளையெல்லாம் மலரென்று சொல்ல முடியுமா? வண்ணப் பறவைகளின் நடையெல்லாம் அன்னப் பறவையின் நடைக்கு ஈடாகுமா?

தன்னந்தனியாக நதிதீரத்தில் அமர்ந்திருக்கும் இந்நங்கை அதை நினைத்துத் தான் தனக்குத் தானே சிரித்துக் கொள்ளுகிறாளோ? அந்தச் சிரிப்பின் அடிப்படையான நினைப்புக்கு விநோதமாக நடை பயிலும் வாத்துத்தான் காரணமாக இருக்க வேண்டும். எப்படியிருப்பினும் நங்கை முகத்தை நகை முகமாக்கிவிட்ட வாத்து வாழ்த்துக்குரியதன்றோ!

ஓவியர் ரமணி இந்த ஏகாந்தக் காட்சியை வண்ணக் கலையில் தீட்டியிருக்கிறார்.

தலைவர்: பேஷ்! பேஷ்! சரியான போடு போட்டிருக்கிறார் இந்த வாரம். புதுத் தகராறு ஒன்றைக் கிளப்பிவிட்டிருக்கிறார் ஆசிரியர். அடுத்த மீட்டிங்கிற்கு வரட்டும் அந்தப் பரிமளம். நான் இந்த ஒரு பாயின்டை வைத்துக் கொண்டே அவருடைய சாக்கடைப் பிரச்னையை மூடி விடுகிறேன்.

கோபா: அப்படி என்ன புதுப் பாயின்ட் எழுதியிருக்கிறார் ஆசிரியர்?

தலை: இதோ வாசிக்கிறேன். ''நமது நகர மன்ற அங்கத்தினர்களிடையே கட்சிப் பிளவு என்று ஒன்று இருப்பதனால் நடுவில் மாபெரும் சாக்கடை ஒன்று தோன்றிப் பிளவை வலுப்படுத்தாமலிருப்பது நல்லது. சாக்கடைத் திட்டம் உபயோகமற்றது, பயனற்றது என்பது மட்டுமல்ல. அங்கத்தினர்கள் தெற்கும் வடக்குமாகப் பிரிந்து போய்விடுவதற்கு இந்தச் சாக்கடையே ஒரு வாய்ப்பளித்து விடும் என்று நாம் நம்புகிறோம். கட்சிப் பிளவை விஸ்தரிக்கும் இந்தத் திட்டத்துக்கு முட்டுக்கட்டைபோட்டு நிறுத்துவதே அங்கத்தினர்களது கடமை'' பார்த்தீர்களா, கோபாக்கினி! என் போன்ற சேர்மன்களுக்கு ஆலோசனை தெரிவிக்கிறதுக்கு இப்படி ஒரு பத்திரிகை இருக்க வேண்டியது அவசியமே யல்லவா?

கோபா: பரிமளத்தின் சாக்கடையை அடுத்த மீட்டிங்கிலே அடியோடு குளோஸ் பண்ணிடலாமுங்க. மூணு நாலு வாரமாக நம்ம நகர மன்ற அங்கத்தினர்கள் எல்லோரும் 'நகரமித்திரன்' பத்திரிகையைப் படிச்சுத்தான் இருப்பாங்க. திட்டத்தை ஓட்டுக்கு விட்டால் கைகள் எல்லாம் சாக்கடைக்கு எதிராகத்தானே நிற்கும்? (சிரிப்பு)

## காட்சி 8

[இடம்: நகரமித்திரன் காரியாலயம்.
பாத்திரங்கள்: பரிமளம் பிள்ளை, உதவி ஆசிரியர்.]

பரிமளம்: ஐயா உதவி ஆசிரியரே!

உதவி: என்னங்க?

பரி: உங்களிடத்திலே ஒரு முக்கியமான விஷயம் கேட்கணும்.

உதவி: கேளுங்க.

பரி: உங்க ஆசிரியர் தம்முடைய எழுத்து வன்மையினாலே அநியாயமாக ஒரு நல்ல திட்டத்தை இப்படிப் பாழடிக்கிறாரே!

உதவி: அவர் எழுதும்போது அவருடைய மனசு நல்லபடியாக இருக்கிறதுக்கு ஒரு வழி செய்யணும், சார்!

பரி: என்ன செய்யணும், சொல்லுங்க.

உதவி: வேறே ஒண்ணுமில்லே. இதோ பாருங்க. இதுதான் ஆசிரியருடைய பேனா. இதுக்கு ஒரு புது நிப்பு வாங்கிப் போட்டுக் கொடுத்துடுங்க. அப்புறம் சாக்கடை ஓடுவதற்கு வழி பிறக்கும்.

பரி: என்னய்யா இது? வேடிக்கை பண்றீங்களா? பேனா நிப்புக்கும் அவருடைய அபிப்பிராயங்களுக்கும் என்ன சம்பந்தம்?

உதவி: அவருடைய அபிப்பிராயங்கள் எல்லாம் இந்தப் பேனாவின் முனையிலேதான் இருக்குது. பேனா வளைஞ்சா அபிப்பிராயமும் வளையும். முதல் வாரம் அவர் 'எடிட்டோரியல்' எழுதறபோது இந்தப் பேனாவிலே மையே இறங்கலே. எழுதறத்துக்கு ரொம்ப சிரமப்பட்டார். அதனாலே சாக்கடைத் திட்டம் ரொம்பச் சிக்கலானது. சரியாக வராது. ஒழுங்காக ஓடாது என்று எழுதினார்.

பரி: அடேடே! இந்தப் பேனா முனையின் பிரதிபலிப்புத்தானா அது? அப்புறம் அடுத்த வாரம் தெருவெல்லாம் சாக்கடை பெருகி ஓடிக் குளமாக நிறையும் என்று எழுதினாரே!

உதவி: அந்த வாரத் தலையங்கம் எழுதறபோது பேனாவில் இருந்து மை ஏகத்தாளுக வழிந்து பேப்பரெல்லாம் ஓடித் தரையெல்லாம் அசிங்கமாகி விட்டது. அதன் காரணமாகச் சாக்கடையைப் பற்றி அந்த ரீதியிலே எழுதினார். போன வாரம் இந்த நிப்பின் முனை பிளந்து போயிருந்தது.

பரி: நிப்பு பிளந்ததினாலே 'மன்றத்தில் கட்சிப் பிளவு அதிகரிக்கும். இந்தச் சமயத்தில் சாக்கடை வேண்டாம்' என்று எழுதினாரோ? சரி சரி, வாங்க என்னோடே. இதுக்குப் புது நிப்பு வாங்கிப் போட்டுத் தர்றேன்.

## காட்சி 9

[இடம்: நகராட்சி மன்றம்.
பாத்திரங்கள்: ஆசிரியர், பரிமளம்.]

பரி: ஆசிரியர் சார், உங்களுக்கு என் மனமார்ந்த நன்றி. கடைசி நேரத்திலே உங்களுடைய பத்திரிகையின் ஆதரவு இல்லாமல் போயிருந்தால் என் சாக்கடைத் திட்டம் அதோகதியாகப் போயிருக்கும். நல்லவேளையாகக் கடைசி நேரத்திலேயாவது என் பக்கமாக எழுதினீங்களே பத்திரிகையிலே.

ஆசிரியர்: இதெல்லாம் ஏன் சொல்றீங்க பரிமளம்? நான் பாரபட்சமாக யாரையும் ஆதரிக்கிறதோ எதிர்க்கிறதோ கிடையாது:

பரி: உங்களுடைய பேனா முனை இந்தச் சாக்கடை விஷயத்திலே எத்தனை புரட்சிகளை உண்டுபண்ணிவிட்டது போங்க. உறுப்பினர்கள் மாறி மாறிப் புரண்டு உருண்டு முடிவிலே உங்களுடைய இறுதித் தலையங்கத்தின்படி சாக்கடை வேணும்னு கைதூக்கினாங்க.

ஆசி: ஐயா, பரிமளம் பிள்ளை! என்னை வீணுகப் புகழவோ இகழவோ செய்யாதீங்க. நான் பத்திராதிபர். பேனாவைப் பிடிக்கிறபோது என் மனசிலே என்ன தோன்றுகிறதோ, அதைத்தான் எழுதுவேன். அந்தச் சமயத்திலே அறிவுக்கோ இதயத்துக்கோ இடம் கிடையாது. பேனாவின் வழியிலேயே என் மனம் போய்க்கிட்டிருக்கும்!

# கஷ்டமில்லாத தவணைகள்

# அதே விலையில்..



- இந்த அனுகூலங்கள் சில நாட்களுக்குத்தான்
- எல்லா உஷா மின் விசிறிகளிலும், நீண்டகால வாழ்வுக்காக, டபிள் பால் பெயரிங்ஸ் உண்டு என்பது நினைவிருக்கட்டும்.
- நிபந்தனைகளுக்கு அருகிலுள்ள உஷா விசிறி டீலரை நாடுங்கள்.

## உஷா

இப்பொழுதே வாங்குங்கள் — இன்று விற்பனையாகும் விசிறிகளில் மிக பிரியமானது

ஜே இஞ்சினீரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31

# அறுபதில் ஆரம்பம்

"தாத்தா, தாத்தா! இதென்ன இப்படி மாப்பிள்ளைக் கோபத்தில் தூர உட்கார்ந்து விட்டீர்கள்? கடைசியில் கல்யாணப் பெண் கோபித்துக் கொண்டு விடப் போகிறாள்." — பேத்தி சுதா தாத்தாவின் அருகில் வந்து கூவினாள்.

"சும்மா இரு சுதா... பாட்டிக்குத்தான் இப்போது பெரிய வெட்கமெல்லாம் வந்து விட்டது. அப்போதே பிடித்து நானும் பார்க்கிறேன். தாத்தா சரியாக உட்கார்ந்தாலும் பாட்டிதான் இன்னும் தள்ளிப் போகிறாள்" என்று ராஜு கூறினான்.

"இது ஏதடா பெரிய சங்கடமாப் போச்சு! இருவரும் நெருங்கி உட்காரப் போகிறீர்களா இல்லையா? போட்டோ பிடிக்கக் கேமராவைச் சரிப்படுத்திக் காத்து நிற்கிறேன்... முதல் கல்யாணத்திலேயே இடுப்பில் கைகொடுத்து அணைத்து உட்காரும் காலம் இது. நீங்கள் இரண்டுபேரும் சஷ்டியப்தபூர்த்தியில் இப்படி எலியும் பூனையும் போல் ஒதுங்கி... சேச்சே! கொஞ்சமும் நன்றாகவேயில்லை." பேரன் வாசு எதிரே நின்றபடி இரைந்தான். ஆடம்பரமாக உடுப்புக்களை அணிந்து தோளில் வாரில் மாட்டியிருந்த காமிராவைக் கையில் பிடித்தபடி நின்றுகொண்டிருந்தான். கல்லூரியில் அடியெடுத்து வைத்துவிட்டவன்.

"என்னை என்னடா பண்ணச் சொல்றே! உங்க பாட்டிக்கு என்னைக் கண்டால் என்றைக்குத்தான் பிடிச்சிருக்கு! ஒட்டினால் தானே?" தாத்தா சங்கரன் தம் இல்லாளைப் பார்த்துச் சிரித்தபடி கூறினார்.

"ஐயே போதுமே உங்க பேச்சு! நானாகக் கொண்டு உங்களுடன் காலம் தள்ளுகிறேன். இந்தக் காலத்துப் பசங்களாக இருந்தால்.." அகிலாண்டம் புன்னகையை நெளிய விட்டபடியே கூறினாள்.

குழந்தைகளின் பரிகசிப்பு, சிரிப்பு மீண்டும் கிளம்பின. சங்கரனின் பெண் ஹேமாவும் மாப்பிள்ளை முரளியும் எல்லோரையும் வரவேற்பதில் ஈடுபட்டிருந்தனர். சங்கரனின் பெரிய மகன் ராமனும் அவன் மனைவி சந்திராவும் சாமான்களை எடுத்துத் தருவதிலும், மற்றவர்களுக்கு வேண்டியதைக் கவனிப்பதிலும் ஈடுபட்டிருந்தனர். பேரக் குழந்தைகள் கல்யாணத் தம்பதிகளைப் பரிகசிப்பதில் ஆனந்தம் கொண்டிருந்தனர். உறவினர்களும் நண்பர்களுமாகக் கல்யாண கூடம் நிரம்பியிருந்தது.

சங்கரனுக்கு அறுபது வயது என்றாலும் அவரிடம் சக்தி இருந்தது; திறமை இருந்தது. அதனால் பணிபுரிந்து வந்த காரியாலயத்தில் அவரை ரிடையராக்கி ஓய்வு எடுக்க விடாமல் பதவிக் காலத்தை நீடித்து வைத்திருந்தனர். காரியாலயத்தில் அவரிடம் ஒரு குறையும் காண முடியாது. மாமனார் வாங்கிப் போட்ட வைரக் கடுக்கன் இன்னமும் காதில் ஒளி விட்டுக் கொண்டிருந்தது. நெற்றியில் விபூதி பட்டும் படாமலிருந்தாலும் அழியாமல் இருக்கும். உடுத்தும் பஞ்சகச்ச வேஷ்டி ஒருநாளாவது அழுக்கேறிக் காணப்படாது.

அகிலாவுக்கு ஓரிரண்டு பற்கள் விழுந்திருந்தாலும் முகத்தின் காந்தி மட்டும் என்றும் குறைந்ததில்லை. நல்ல வெளுத்த முகத்தில் மஞ்சள் பூச்சும், அகலக் குங்குமப் பொட்டும், ஒற்றை வைரக்கல் மூக்குத்தித் திருகும் அவளுக்குமேலும் கவர்ச்சி தரும் பொருள்கள். காதில் கெம்புத் தோடு அடி வளையத்தோடு காதோடு ஆடியபடி இருக்கும். கட்டுக் கலையாத மடிசார், அவளுக்குத்தான் அப்படி உடுத்தத் தெரியும்.

வேத விதிப்படி ஒரு குறையும் இல்லாமல் சங்கரனின் ஷஷ்டியப்த பூர்த்தி நடந்து கொண்டிருந்தது. ஹோம காரியத்தில் ஈடுபட்டிருந்தார் சங்கரன். திடீரென்று வாசலில் சலசலப்பு. ஹேமா உள்ளே ஓடி வந்தாள்: "அப்பா! உங்க ஆபீஸ் துரை மிஸ்டர் லாரென்ஸ் வந்திருக்கிறார்" என்றாள்.

சங்கரன் வாரிச் சுருட்டிக் கொண்டு துரையை வரவேற்க எழுந்தார். அதற்குள் ராமன் துரையை உள்ளே அழைத்து வந்து விட்டான். சங்கரன் எழுந்திருப்பதைக் கவனித்த லாரென்ஸ், "நோ! நோ! எழுந்திருக்காதீர்கள். நான் இங்கேயே இருக்கிறேன்" என்றார்.

ஹேமா ஒரு நாற்காலியை எடுத்து வந்து அவரை அமரச் செய்தாள்.

"ஓ ஹேமா! நான் உன்னைப் பார்க்கவே இல்லையே!" லாரென்ஸ் நாற்காலியில் அமர்ந்தபடி ஆங்கிலத்தில் கேட்டார்.

"நான் வந்து ஒரு வாரமாகிறது. உங்களைப் பார்க்க முடியலே...மன்னிக்கணும்!" என்று ஆங்கிலத்திலேயே பதில் அளித்தாள் அவள்.

"அதனால் என்ன? நீ கல்யாணத்துக்கு வந்திருக்கியே! பிஸியா இருப்பே!"

ராஜு ஒரு கப்பில் காப்பி கொண்டு வந்து கொடுத்தான். அதை ருசித்துப் பருகினார் லாரென்ஸ். பந்தலிலிருந்த அனைவருடைய கவனமும் சிறிது நேரம் துரையைப் பார்ப்பதில் சென்றது. அந்த வைபவத்துக்கு வந்திருந்த சில ஆபீஸ் சிப்பந்திகள் லாரென்ஸின் அருகில் சென்று விசாரித்தனர். துரை வந்ததும் சங்கரனுக்கும் மனையில் அமர்ந்திருப்பது சற்றுக் கூச்சமாக இருந்தது. அகிலாவோ கூனிக் குறுகி அமர்ந்திருந்தாள்.

"ஓ, தாத்தா! எங்கே போனாலும் பாட்டியையும் முடி போட்டு இழுத்துச் சென்று விடுவேன் போலிருக்கே!" என்று பேரக் குழந்தைகள் ஆரவாரம் செய்தனர்.

முகூர்த்தம் முடிந்ததுமே எல்லாத் தம்பதிகளும் சங்கரனையும் அகிலாவையும், நமஸ்கரித்ததை லாரென்ஸ் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

சங்கரன் துரையின் அருகில் வந்தார்: "நீங்கள் வந்தது குறித்து எனக்கு ரொம்பவும் சந்தோஷம்" என்றார் மரியாதையாக.

லாரென்ஸ் தம்முடைய வாழ்த்துக்களைக் கூறினார். அதற்குள் ராஜு அவர்களைச் சாப்பிடக் கூப்பிட வந்தான். அனைவரோடும்

தரையிலேயே அமர்ந்து, கையினாலேயே எடுத்துச் சாப்பிட்டார் லாரென்ஸ்.

சங்கரனின் ஷஷ்டியப்த பூர்த்தி வைபவத்தில் கலந்து கொண்டு வீடு திரும்பிய லாரென்ஸுக்கு உள்ளே போகவே பிடிக்கவில்லை. சோர்வாக நாற்காலியில் அமர்ந்து விட்டார்.

என்ன செய்தும் உடம்பில் உஷ்ணம் ஏறவே இல்லை போலிருந்தது. உடலில் அயர்ச்சி, களைப்பு. இது போன்ற அனுபவம் இது நாள் வரை ஏற்பட்டதாக நினைவில்லை. எவ்வளவோ தடவை அவர் வெளியே சுற்றியிருந்திருக்கிறார். அப்படியும் உடலில் புத்துணர்வு இருந்து கொண்டே இருக்கும். இன்று மட்டும் இந்தச் சின்ன வைபவத்தில் பங்கெடுத்ததற்கு ஏன் இவ்வளவு அசதி?

லாரென்ஸ் இங்கிலாந்தை விட்டு இந்தத் தென்னிந்தியாவில் குடியேறிப் பல ஆண்டுகள் ஆகி விட்டன. அந்த ஊருக்கு மாற்றலாகி ஐந்து வருடங்கள் முடிந்து விட்டன. நன்றாகத் தமிழ் பேசவும் கற்றுக் கொண்டு விட்டார். காரியாலயத்தில் இந்த ஊர்க் கிளைக்குத் தலைவராக மாற்றலாகி வந்தபோது சங்கரன் அவருக்குப் பல விதத்தில் உதவியிருக்கிறார். சங்கரன் வீட்டின் அருகிலேயே அவருடைய வீடும் இருந்தது. வந்த நாளிலிருந்து அவர் தனியாகத்தான் காணப்பட்டார். மனைவி, குழந்தைகள் ஒருவருமே கிடையாதோ இவருக்கு! ஆபீஸில் ரகசியமாகப் பேசிக் கொள்வார்கள். ஆனால் அது பற்றி அவரிடம் கேட்க ஒருவருக்கும் துணிவில்லை.

சங்கரனின் குடும்பத்தார் லாரென்ஸுடன் நெருங்கிப் பழகினர். காரியாலயத்தில் தலைவர் என்ற முறையில் சற்றுக் கண்டிப்புடன் நடந்து கொண்டாலும் வெளியில் எல்லோருடனும் சிரித்துப் பழகுவார். 'என்னம்மா, நல்லா இருக்கியா?' என்று அகிலாவிடம் அவர் கேட்கும்போது, அகிலா அதில் ஓர் அன்பு தொய்வதைக் காண்பாள். சங்கரனின் பெண், பிள்ளைகள் தந்தையுடன் அடிக்கடி லாரென்ஸ் வீட்டுக்குச் சென்று விட்டு வருவார்கள்.

இவ்வளவு நாட்கள் போல் இல்லாமல் சங்கரனின் அறுபதாம் கல்யாணத்துக்குப் போய் வந்த பிறகு மட்டும் ஏன் இந்த மன உளைச்சல்! அந்த வைபவக் காட்சிகள் ஒவ்வொன்றும் எதிரே தோன்றித் தோன்றி மறைந்தன. மாங்கல்யம் முடியும் தருணத்தில் தம்பதிகள் முகத்தில் காணப்பட்ட மகிழ்ச்சியை அவரால் மறக்கவே முடியவில்லை.

குறைக்குக் குறைவற்ற வாழ்க்கை என மற்றவர்கள் கூறினர். ஆனால் இன்று திடீரென அவருக்கே புரியாத குறை. உள்ளத்தை உறுத்தியது.

அகிலா கையில் ஒரு தட்டு நிறையத் தின்பண்டங்களை எடுத்துக் கொண்டு நேறமா வந்தாள்.

லாரென்ஸ் அவளை முகமலர்ச்சியுடன் வரவேற்றார்.

''அம்மாவும் அப்பாவும் இந்தத் தித்திப்புப் பண்டங்களைக் கொடுத்து விட்டு வரச் சொன்னார்கள். காலையில் கொடுக்க நேரமில்லை.''

''நன்றி. எனக்கு உங்க தித்திப்புப் பண்டங்கள் ரொம்பப் பிடிக்கும்.'' தட்டின் மேலிருந்த சிறு டவலை நீக்கி விட்டுத் தின்பண்டங்களில் கண்ணோட்டம் விட்டபடி லாரென்ஸ் கூறினார்.

''நீங்கள் இன்று காலையில் இந்த வைபவத்துக்கு வந்ததில் எங்களுக்குச் சந்தோஷம்.''



''அது உங்களைவிட எனக்குத்தான் ரொம்ப சந்தோஷம். உன் அப்பாவுக்கு இப்ப என்ன வயதாகிறது ?''

''அதான் அழைப்பிதழில் போட்டிருந்தோமே! அறுபது முடிந்து விட்டது.''

''அப்படியானால் நான் உன் அப்பாவை விடச் சில மாதங்கள் சின்னவன்....'' சிரித்தபடி கூறினார் லாரென்ஸ்.

''ஆயினும் நீங்கள் பெரியவர்!'' ஹேமாவும் சிரித்தபடி கூறினாள்.

''இப்ப அந்த ஆயிஸைப் பற்றிப் பேசக் கூடாது ஹேமா! எத்தனையோ கல்யாணங்களுக்குப் போயிருக்கிறேன். ஆனால் இது போல் பார்ப்பது இதுதான்..... எல்லாத்தையும்விட இதுதான் எனக்குப் பிடிச்சிருக்கு. ஒவ்வொரு பிறந்த நாளையும் இப்படிக் கொண்டாடுவீங்களா?''

''இல்லை. புருஷர்களுடைய அறுபது வயது பூர்த்தி ஒன்றுதான் இப்படி நடக்கும். பெண்கள் அறுபதுக்கு எட்டினால் இது போல் செய்வதில்லை. வீட்டில் பாயசம் மட்டும். அதுவும் இந்த நாளில் செய்கிறோம்.''

''அப்படியா? ஆனால் கலியாணத்துக்குத் தானே கழுத்திலே கயிறு கட்டுவாங்க? இந்த அறுபதாவது பிறந்த நாளில்......?'' லாரென்ஸ் கேள்விக்குறியோடு நிறுத்தினார்.

''இதில் பிறந்தநாள் விசேஷமில்லை. நீங்கள் ஒன்று தெரிந்து கொள்ளுங்கள். கணவன் மனைவி இருவரும் உயிருடன் இருந்தால்தான் இந்தக் கொண்டாட்டம் நடக்கும். கல்யாணம் ஆன தினத்திலிருந்து கணவனும் மனைவியும் விட்டுப் பிரியாமல் குடும்பச் சிக்கலுக்கு ஈடு கொடுத்து இதுவரை முன்வந்துள்ள விசேஷத்துக்குக் கல்யாணம் போல் தாலி கட்டிக் கொண்டாடுகிறோம். நீங்கள் ஒன்று கவனித்தீர்களா ?''

''அது என்ன?''

''முதல் கலியாணத்தில் புது மணத் தம்பதிகள் மற்றவர்களை நமஸ்கரிப்பார்கள். அறுபதாம் கலியாணத்தில் மற்றவர்கள் தம்பதிகளை வணங்குவார்கள். அதாவது அவர்களைப் போல் தங்கள் தாம்பத்திய வாழ்வும் பிரிவு காணாமலிருக்க ஆசிகள் கேட்பார்கள்.''

''உங்கள் நாட்டின் இந்த வைபவம் எனக்குப் பிடிச்சிருக்கு. உங்கள் குடும்பத்தில் எத்தனையோ சண்டைகள் இருந்திருக்கும். ஆனாலும் கணவன் மனைவி பிரியாமல் இருக்கிங்க. அதைப் பாராட்டுகிறேன்!''

''ஆமாம், நீங்கள் சொல்வது சரிதான். என் அப்பாவே முதலில் விவாகமான புதிதில் நல்ல நடத்தையுள்ளவராக இருந்தார் என்று சொல்ல முடியாது. அதற்காக அம்மா ஒதுங்கிவிட வில்லை. காலத்தை நம்பியிருந்தாள். வெற்றி கண்டு விட்டாள். அப்பாவே இப்பொழுதெல்லாம் தன் தவற்றைக் கூறிப் பச்சாத்தாபப்படுவதால் நான் இதை உங்களிடமும் கூறுகிறேன். என் மன்னி இருக்கிறாளே, அவளோ நாங்கள் பெரிய பணக்காரர்கள் இல்லை என முதலிலெல்லாம் சிணுங்கினாள். அண்ணா பொறுத்து விட்டான். அங்கும் வெற்றி..... மிஸ்டர் லாரென்ஸ் நான் ஒன்று சொல்கிறேன். நீங்கள் மேனாட்டார்: கோர்ட்டில் நீதியைக் காண ஓடிக் கடைசியில் விழுந்து விடுகிறீர்கள். நாங்கள் காலத்தின் கையில் நீதியை ஒப்படைத்து நியாயத்தின் வெற்றியைக் காண்கிறோம்...''

''ஆம்! உண்மைதான்!'' என்று லாரென்ஸ் மெள்ளக் கூறினார். ஹேமா கூறியது ஒவ்வொன்றும் அவர் மனத்தில் விரிவை ஏற்படுத்தியது. இவ்வளவு நேரமாக மனத்தில் நிரம்பியிருந்த அழுத்தத்தின் காரணமும் புலப்படுவது போல் இருந்தது.

இருவரும் சற்று நேரம் மௌனமாக இருந்தனர். பிறகு மெள்ளப் புன்முறுவலுடன் லாரென்ஸ் கூறினார். ''உன் அப்பாவிடம் எனக்கு அளவற்ற பொறாமை.''

ஹேமாவும் சிரித்தபடி கூறினாள் ''கவலைப்படாதீர்கள். உங்களுக்கும் இனிமேல்தானே அறுபதாவது பிறந்த நாள் வரப் போகிறது. எங்கே யிருந்தாலும் உங்கள் மனைவியை அழைத்து வாருங்கள். உங்கள் விவாக முறைப்படி விவாக தினமாகவே நடத்தி விடுகிறேன் .. நீங்கள் 'பிரம்மச்சாரி' இல்லை என்று நினைக்கிறேன்.''

''நான் முந்தி இல்லை. ஆனால் இப்போ பிரம்மச்சாரிதான்!'' லாரென்ஸ் தம்மையும் மறந்து பெரிதாகச் சிரித்தபடி கூறினார்.

ஹேமா பதில் கூறவில்லை. என்ன பொருளில் இப்போது பிரம்மச்சாரி இல்லை எனக் கூறுகிறாரோ! மனைவி காலமாகி விட்டாளா, அல்லது......

''ஹேமா! உனக்குப் புரியாது: எங்கள் நாட்டில் இரண்டு விவாகரத்து வழக்குகளில் நின்றேன். மூன்றாவது மனைவியை இந்தியாவுக்கும் அழைச்சிட்டு வந்தேன். அதிலும் சுகமில்லை. அவள் எங்க நாட்டுக்கே ஓடிப் போய் வழக்கும் போட்டு விட்டாள்...நான் இப்போ தனி ஆள்...''

அவர் சரளமாகக் கூறினாலும் தான் இது பற்றி ஏன் கேட்டோம் என ஹேமா தன்னையே நொந்து கொண்டாள்.

''நீ ஏதுக்கு ஹேமா, வருத்தப்பட்டுக்கறே! நான் பொய் சொல்ல விரும்பவில்லை. சொல்லி விட்டேன் எல்லாத்தையும்.''

ஹேமா மேலும் சிறிது நேரம் அவரோடு பேசிக் கொண்டிருந்தாள். பேச்சை அவள் மெள்ள வேறு திக்கில் திருப்பி விட்டாள். அவள் வீடு திரும்பும்போது வெகு நேரமாகி விட்டது. அன்று இரவு லாரென்ஸுக்குத் தூக்கமே வரவில்லை. ஏதேதோ சிந்தனைகள்.

ஹேமா பம்பாய்க்குப் புறப்பட்டுச் செல்ல லாரென்ஸிடம் விடைபெற வந்தாள்.

''ஹேமா! நான் ஒரு முறை என் நாட்டுக்குப் போய் விட்டு வரணும்.....''

''நல்லது. தாய் நாட்டுப் பற்று எல்லோருக்கும் இருக்க வேண்டியது அவசியம். தாய் நாட்டைக் காணும் ஆவலில் நீங்கள் குதூகலத்துடன் கிளம்பி விடுவீர்கள். ஆனால் என்னுடைய சிறு வேண்டுகோளையும் நீங்கள் தள்ளி விடக் கூடாது.....''

''என்ன ஹேமா?''

''நீங்கள் அங்கேயே தங்கி விடாமல் மீண்டும் இங்கேயே வரவேண்டும். எங்கள் குடும்பத்தின் ஓர் அங்கத்தினர் போல் நீங்கள் பழகி விட்டீர்கள். அதிக பணம் செலவழித்து உங்களை அங்கு வந்து பார்க்கும் சக்தி எங்களிடம் இல்லை. ஆகையால் இந்நாட்டுக்கு நீங்கள் திரும்ப வேண்டும். இங்கேயே தங்கி

# டெட்டால்



தொற்றுநோயிலிருந்து அவனைப்

பாதுகாத்துக்கொள்ள உதவுகிறது



அவன் மிகவும் சுத்தமாகத்தான் இருக்கிறான். ஆனால், அவன் வசிக்குமிடத்தின் தரை எப்படி இருக்கிறது? போதிய அளவிற்கு சுத்தமாகக் காணப்பட்டபோதிலும், கோடிக்கணக்கான, கண்ணுக்குத் தெரியாத விஷக்கிருமிகள் தயாராகப் பதுங்கி இருக்கின்றன. அசட்டை செய்து விடாதீர்கள். உலகத்திலேயே மிகவும் நம்பிக்கை வாய்ந்த கிருமிநாசினி 'டெட்டாலை' தரைகளை அலம்பிவிடவோ துடைக்கவோ உபயோகிக்கப்படும் தண்ணீருடன் கலந்துகொள்ளுங்கள். 'டெட்டால்' விஷக்கிருமிகளை கொல்ல கூடியது

AEL 3509R

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது).

விட விருப்பமில்லாவிடில் அடிக்கடி வந்து போக வேண்டும்.'' ஹேமாவின் குரலில் பரிவும் அன்பும் தோய்ந்து நின்றன.

லாரென்ஸ் ஹேமாவையே பார்த்தபடி சற்று இருந்தார். கண்களில் நீர்த் தேக்கம். இந்தப் பெண்ணுக்குத்தானுகட்டும். எவ்வளவு அன்பு! பிறகு மெள்ளக் கூறினார். ''ஹேமா, நீ கவலைப்படுக்காதே! நீ காட்டிவிட்ட வழியிலே போகப் போகிறேன்'' என்றார்.

ஹேமா விடைபெற்றுக் கொண்டாள்.

ஹேமாவின் கணவன் முரளியைச் சென்னைக்கே மாற்றி விட்டதால் ஹேமா தந்தையின் வீட்டோடு வந்து தங்கி விட்டாள். முரளிக்கு அடிக்கடி காரியாலயப் பணி காரணமாக வெளியூர் போக வேண்டியிருந்ததால் தனிக் குடித்தனம் வைக்க வில்லை. ஹேமா அந்த ஊரோடு வந்து விட்டதை அறிந்து லாரென்ஸ் அதிக ஆனந்தம் கொண்டார்.

மறு மாதம் லாரென்ஸ் தம் தாய்நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார். ஒரு மாதமானதும் இந்தியா திரும்பி விட்டார்.

லாரென்ஸ் தன் தாய் நாட்டிலிருந்து திரும்பி விட்ட செய்தி வந்தது. அவரைப் பற்றிக் காரியாலயத்தில் ஒரு பேச்சு கிளம்பியது. ''லாரென்ஸுடன் ஒரு வயதான மாதும் வந்திருக்கிறாளாம்.''

''அறுபது வயதாகியும் ஆசை விடவில்லை போலிருக்கிறது. நான்காவதாக ஒரு மனைவியை இழுத்து வந்து விட்டாரோ!'' என்று ஹேமா கூறிக் கொண்டாள்.

சங்கரன் வீட்டார் லாரென்ஸைச் சந்திக்கப் புறப்படுவதற்குள் அவரே அந்தப் பெண்மணியையும் அழைத்துக் கொண்டுவந்து விட்டார். அவளுக்கு லாரென்ஸைவிட ஓரிரண்டு வயது குறைவாக இருக்கலாம். முகத்தில் முதுமை; உடலில் தளர்ச்சி; வயதை அதிகரித்துக் காட்டும் பருமன்.

''ஹேமா, இவ யாரு தெரியுமில்லே!'' என்று லாரென்ஸ் கேட்டார்.

ஹேமா ஆவலுடன் அவரை நோக்கினாள்.

''இவள் என் முதல் மனைவி!'' லாரென்ஸ் சிரித்தபடி கூறினார். ''மேரி....!''

ஹேமாவுக்கு மட்டுமல்ல, சுற்றியிருந்த அனைவருக்குமே ஆச்சரியம்; திகைப்பு.

மேரியின் கையைக் குலுக்கினாள் ஹேமா.

லாரென்ஸ் மேரிக்கு எல்லோரையும் அறிமுகம் செய்து வைத்தார். பிறகு ஹேமாவை நோக்கி, ''ஹேமா! இன்னும் பத்து நாட்களில் என் அறுபதாவது பிறந்தநாள்! அன்றைக்கு எனக்கும் மேரிக்கும் விவாகத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன்...'' என்றார்.

சங்கரன் குடும்பத்தார் அனைவருமே வியப்புடன் அவரை நோக்கினர்.

''இவளை அழைத்து வரத்தான் என் நாட்டுக்குப் போனேன். நான் நினைத்தபடியே இவளும் தனிச்சு இருந்தாள். நான் நின்னுப்பிலே இவளும் ரெண்டு மூணு விவாக ரத்து வழக்குகளெல்லாம் நடத்தி விட்டு இப்போ தனிச்சுத்தான் இருந்தாள். மத்தவங்களைக் காட்டிலும் நாங்க ரெண்டு பேரும் தேவலாம்னு மனசிலே பட்டுப்போச்சு. என்னோடு இந்தியாவுக்கு வர்றியான்னு கேட்டேன். கிளம்பி விட்டாள். இனிமே ஒன்றாகத்




''இதென்னம்மா, புதுவித தானியமா இருக்கு?''

''ஆமாம் சீடை தானியம். இதை ஒண்ணும் பாதியுமா ரவை போல உடைச்சுக் கொடு!''

தான் இருக்கப் போகிறோம்....'' ஒளிவு மறைவின்றி அவர் கூறினார்.

''எங்கள்வாழ்த்துக்கள்'' என்றான் ராமன்.

''ஹேமா! உன் வார்த்தையை மறந்திருக்க மாட்டியே! என் அறுபதாவது பிறந்த நாள் கல்யாணத்தை நீதான் முன்னே இருந்து நடத்தணும். மாதாகோவிலுக்கு எல்லாரையும் அழைத்துக் கொண்டு வந்துடு. உங்க சமையல்காரனை வைத்து 'ப்யூர் வெஜிடேரியன் மீல்ஸ்' ஏற்பாடு செய்துடப் போறேன். கண்டிப்பாக எல்லோரும் வந்துவிட வேண்டும்.'' லாரென்ஸ் மகிழ்ச்சியுடன் கூறிவிட்டு எழுந்தார்.

சங்கரன் குடும்பத்தார் லாரென்ஸின் அறுபதாண்டு நிறைவு முகூர்த்தத்தில் பங்கெடுத்தனர். பருப்பு தேங்காய் பிடித்து மாலைகளும் வாங்கிப் புது மோதிரத்துக்கும் ஏற்பாடு செய்து விட்டாள் ஹேமா. புது ஆடைகள் அந்தத் தம்பதிகளுக்குப் பொருத்தமாக இருந்தன.

''என்ன ஹேமா, எதுக்கு நீ செலவு செய்து இதெல்லாம் வாங்கினாய்? நான் பணம் கொடுக்கிறேன். எடுத்துக்கோ'' என்றார் லாரென்ஸ்.

''உங்களுக்கு நாங்கள் பெண்ணும் பிள்ளையும்போல. அறுபதாம் கலியாணச் செலவைக் குழந்தைகள்தான் ஏற்பார்கள்'' எனக் கூறி விட்டாள் ஹேமா.

ஆபீஸ் சிப்பந்திகளும், நண்பர்களுமாகக் கூடி வாழ்த்துக்கள் கூறி, ஆனந்தமாகப் பங்கெடுத்துக் கொண்டனர். விவாகம் இனிது முடிந்தது. லாரென்ஸுக்கும் மேரிக்கும் எல்லையற்ற ஆனந்தம்.

''மிஸ்டர் சங்கரன்! நீங்கள் அறுபது ஆண்டு வரையில் வாழ்க்கையை நடத்திக் காட்டினீர்கள். நான் அந்த அறுபதாண்டு நிறைவான தினத்தில்தான் உண்மையான வாழ்க்கையை ஆரம்பிக்கப் போகிறேன்!'' என்றார் லாரென்ஸ்.



# நாடகமாடினர்!

ஒரு சமயம் பரமசிவன் பார்வதியுடன் ஹரித்வாரத்தில் உலாவிக் கொண்டிருந்தார். ஆயிரக்கணக்கான மக்கள் கங்கையில் நீராடி விட்டுப் போவதையும், ஆனால் அவர்கள் வருத்தமுற்றவர்களாகவும் பாவிகளாகவும் இருப்பதையும் பார்வதி கண்டாள். பரமசிவனைப் பார்த்து, ''நாதா! இந்த மக்கள் கங்கையில் இத்தனை தடவை நீராடிச் செல்கிறார்களே! புனித கங்கையில் நீராடியும் இவர்கள் பாவம் ஏன் போகவில்லை? துயரம் ஏன் தீரவில்லை? கங்கைக்கு இவர்களது பாவத்தைப் போக்கும் சக்தி இல்லையா, அல்லது குன்றிவிட்டதா?'' என்று கேட்டாள்.

''பிரியே! கங்கைக்குப் புனித சக்தி இருக்கிறது. அது சிறிதும் குறையவில்லை. ஆனால் இவர்கள் அந்தப் புனித கங்கையில் எங்கே நீராடுகிறார்கள்? நீராடினால் அல்லவா பாவம் தொலைய?'' என்றார் ஈசுவரன்.

''தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை!'' என்றாள் தேவி.

''இவர்கள் நீரில் முழுகுகிறார்களே ஒழிய வேறில்லை. நாளை வரை பொறு. உனக்குப் புரியும்படியாக இதனை விளக்குகிறேன்!'' என்றார் பரமேசுவரன்.

மறு நாள் நல்ல மழை பெய்தது. தெருக்களும் சாலைகளும் சகதியாகி விட்டன. அகன்ற பாதை ஒன்றில் ஆழமான குழி ஒன்று இருந்தது. அதைச் சுற்றிலும் சகதி. அதிலோ சேற்று நீர் குழம்பிக் கிடந்தது.

பரமேசுவரன் வயது முதிர்ந்த கிழவர் வேடம் பூண்டார். எலும்பும் தோலுமாகக் காட்சி அளித்தார். அந்தக் குழியில் போய் விழுந்தார். வழியில் போகிறவன் சறுக்கி விழுந்தால் எப்படி விழுவானோ, அப்படித் தத்ரூபமாக விழுந்து கிடந்தார். வயதான சரீரம் எழுந்திருக்க முடியாமல் திண்டாடுவது போலவும் நடித்தார்.

பார்வதியிடம் முன்கூட்டியே தாம் செய்யப் போவதைக் கூறியிருந்ததுடன், பரமேசுவரன் இதையும் கூறியிருந்தார்: ''இதோ பார்! நான் விழுந்திருக்கும் குழியின் அருகில் நீ நின்று கொள். கங்கையில் நீராடுவதற்காக இவ்வழியே எத்தனையோ பேர் போவார்கள், வருவார்கள். அவர்களைப் பார்த்து நீ இப்படிக் குரல் கொடு. 'என் வயதான கணவர் திடீரென்று இந்தக் குழியில் விழுந்து விட்டார். எழுந்திருக்க முடியாமல் திண்டாடுகிறார். யாராவது புண்ணியசாலிகள் இருந்தால் கரையேற்றி இவர் உயிரை மீட்டுத் தாருங்கள்.' அப்படி யாராவது என்னைக் காப்பாற்றக் குழியண்டை வந்தால் அவர்களிடம் இதையும் சொல்லு: 'என் கணவர் பாவமே செய்தறியாதவர். நீங்களும் பாவம் செய்யாதவர்களாக இருந்தால், இவரைத் தொட்டுத் தூக்குங்கள். இல்லாவிட்டால், தொட்டதும் நீங்கள் பொசுங்கிப் பஸ்மமாகிவிடுவீர்கள்!' ''

கங்கையில் குளித்து விட்டு மக்கள் சாரி சாரியாக வந்து கொண்டிருந்தார்கள். இரக்க சிந்தை படைத்த சிலர் பார்வதியின் பேச்சைக் கேட்டார்கள். கருணை உள்ளத்தோடு அவள் கணவரைத் தூக்கி விட முன் வந்தார்கள். ஆனால் அருகில் போனதும் பார்வதி போட்ட நிபந்தனையைக் கேட்டுத் தயங்கி நின்றார்கள்.

'கங்கையில் குளித்து விட்டால் மட்டும் ஆயிற்று? பாவிகள்தானே நாம்? ஓமம் செய்யும் பொழுது கைகட்ட கதையாகி விட்டால் என்ன செய்வது?' என்று பயந்தார்கள். எனவே, யாருக்கும் துணிவு உண்டாகவில்லை. எனவே, வந்த வழியே பின்வாங்கி விட்டார்கள். மாலை இருள் கவியத் தொடங்கி விட்டது. ''பார்த்தாயா, பார்வதி? யாராவது கங்கையில் குளித்தவர்கள் இந்தப் பக்கம் வந்தார்களா?'' என்று கேட்டார் பரமசிவன்.

சிறிது நேரம் கழித்து, 'சிவ, சிவ' என்று நாம ஜபம் செய்தவாறு ஓர் இளைஞன் கையில் கெண்டியுடன் அவ்வழியே வந்தான். பார்வதி அவனிடமும் விஷயத்தைக் கூறினாள். அவன் உள்ளத்தில் இரக்கம் சுரந்தது. அவன் சிவனைச் சகதிக் குழியிலிருந்து தூக்க முன் வந்தான். பார்வதி அவனையும் தடுத்துச் சிவன் சொன்ன நிபந்தனையைச் சொன்னாள்: அவன் நிச்சய புத்தியுடன், ''தாயே! நான் பாவமற்றவன் என்னும் விஷயத்தில் உங்களுக்கு ஏன் ஐயம் தோன்றுகிறது? பார்க்கவில்லையா, நான் இப்பொழுதுதானே கங்கையில் நீராடிவிட்டு வருகிறேன்!'' என்றான்; அதோடு ஒரே தாவாகத் தாவிக் கிழவரைக் குழியிலிருந்து கரை ஏற்றியும் விட்டான்.

சிவபெருமானும் பார்வதி தேவியும் அவனைத் தகுந்த பாத்திரமென அறிந்து தமது சுய உருவத்தைக் காட்டிப் பிறவிப் பயனை அடையச் செய்தார்கள். ''இவ்வளவு மக்களில் இந்த இளைஞன் ஒருவன்தான் உண்மையாகக் கங்கையில் நீராடியிருக்கிறான்!'' என்று பார்வதிக்குக் கூறினார் சிவபெருமான்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

ஹார்லிக்ஸ் செய்யும் நன்மைக்கு ஒரு உதாரணம்:

# "மகனோடு தங்கலாமென்று வந்தால் வீட்டு வேலை முழுவதும் என் தலையில் தான்!"

மகனையும் மருமகளையும் பார்த்து இரண்டு வருஷங்களாயின. ஆகவே ஆவலோடு வந்த நான் கண்டதென்ன! வீடு ஒரே அலங்கோலம். குழந்தைகள் கவனிப்பாரற்றுக் கிடந்தனர். எல்லா வேலையையும் நானே செய்யவேண்டியதாயிற்று. ஒரு நாள் மருமகள் சீதாவே என்னிடம் சொன்னாள்: "அம்மா இப்பொழுதெல்லாம் எனக்கு ஒரே சோர்வும் அசதியுமாய் வீட்டு வேலைகளைச் செய்யவே முடிகிறதில்லை. நீங்கள் தான் பரிகாரம் சொல்லவேண்டும்."



சீதாவை டாக்டரிடம் அழைத்துப் போனேன். டாக்டர் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டு விட்டுப் பிறகு சொன்னார்: "சீதாவுக்குக் கவலைப் படும்படி ஒன்றுமில்லை. அவளுக்குத் தேவையான போஷாக்குச் சரிவர கிடைக்காததினால் சோர் வடைகிறாள். தினமும் தவறாமல் ஹார்லிக்ஸ் பருகினால் எல்லாம் விரைவில் சரியாகும்."



ஹார்லிக்ஸ் நல்ல பலனை அளித்தது. மிகச் சிறந்த சத்துள்ள பாலுடன் கோதுமை மாவு, மால்டட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்தும் சேர்ந்ததுதான் ஹார்லிக்ஸ். சில வாரங்களுக்குள் சீதா பழையபடி சுறுசுறுப்புடன் வீட்டு வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள். ஹார்லிக்ஸ் ஒருபோதும் பலனளிக்கத் தவறுவதேயில்லை.




# ஹார்லிக்ஸ் அதிக சக்தி யளிக்கிறது!

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




கைப்பட சலவை செய்து பார்த்தீர்களானால் தெரியும் கைகண்ட ஸர்ப் மேன்மை: நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை; வேலையோ வெகு இலகு! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை. சட்டை, சேலை முதல் சிறுவர் உடை வரை எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு